உ
சிவமயம்.

திருக் களர் ஆண்டவர்,

# ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர்.

# புகழ் உரை ரச மஞ்சரி.




குரு




சிஷ்யர்

திருக் களர், கோ. ஆ. வீர. மடம்,

**ம. கிருஷ்ணாநந்த சுவாமிகள்.**

1961.



[விலை ரூபாய் ஒன்றரை.

## கைவல்ய நவ நீத மும், பத சார உரையும்,

கைவல்ய நவநீதம் என்னும் நூலே இரண்டு படலத்தில், 288 செய்யுளில், நன்னிலம் ஸ்ரீ தாண்டவ ராய சுவாமிகள் செய்தார்கள்,

அதற்கு, இற்றைக்கு 130 வருஷத்துக்கு முன், கோவிலூரில், குரு மூர்த்த மாக எழுந்தருளி யிருந்த, முக்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிகள் மாணுக்கர்களுள், தலே சிறந்து சகாம நிஷ்காம இரு தவமும், உடைய மாணுக்க ராக இருந்த, துற வாண்டவர் என்னும் அருணுசல ஞான தேசிக சுவாமிகள், பத சாரம் எனப் பெயர் வைத்து, அவதாரிகை-பத சாரம்-விசேஷம்-தாத்பரியம் என நான்கு பிரிவினே உடைய அதிகம்பீரமான உரை ஒன்று விரிவாகச் செய்தார்கள். இவர்கள் கோவிலூரில், இரண்டாங் குரு மூர்த்த மாக எழுந்தருளி யிருந்தவர்கள்.

இவர்கள் உரை செய்த பின்னர்.

1. பிறைசை, ஸ்ரீ அருணுசல சுவாமிகள்.
2. ஈசூர், ஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிகள்.
3. சிதம்பரம், ஸ்ரீ பொன் னம்பல ஞான தேசிக சுவாமிகள் தத்துவார்த்த தீபிகை உரை.
4. தஞ்சாவூர், ஸ்ரீ வெங்கிடாசல சுவாமிகள்.
5. மதுரை, பீ. எம். சாமிநாத பிள்ளே.
6. காளேயார் கோவில், ஸ்ரீ செல்லப்ப ஞான தோசிக சுவாமிகள் பொழிப் புரை.
7. சென்னே, கோமளேசுவரன் பேட்டை, கோ. வடிவேலு செட்டியார் பத உரையும், வசநமும்
8. காஞ்சீபுரம்-ஆ. செங்கல்வ ராய முதலியார்.
9. சிதம்பரம்-கோ. சித. மடம், ஸ்ரீ நீல கண்ட சுவாமிகள்

இந்த ஒன்பதின்மரும், அந்த உரையில் உள்ள விஷயங்களேக் கொண்டே உரை செய்தார்கள் என்பதை, உரையை ஒப்பிட்டு நோக்குவோருக்குப் புலன் ஆம். இந்த அரிய உரை, டப்ள் கிரௌன் 1–16 பக்க சைசில், 400 பக்க அளவில் அச்சிட்டுத் தயாராகி யிருக்கிறது. திருப் பூவணம், காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள், 288 பாட்டுக்கும், பத உரை ஒன்று எழுதிச் சேர்த்திருக்கிருர்கள்.

விலே ரூபாய் மூன்று அணு எட்டு.

கோட்டையூர் அழ. அண்ணமலை செட்டியார்



தேவகோட்டை
சோம. ராமநாதன் செட்டியார்



வேத மொழி பெயர்ப்பு சிவாநந்த சுவாமிகள்



கல்லல் முருகப்ப செட்டியார்



காரைக்குடி சா. கணேசன் செட்டியார்



காரைக்குடி முத்துராமன் செட்டியார்





श्री वीर शेखर ज्ञान देशिक स्वामिन: तिरुक्कलर्.

SRI VEERASEKARA GNANADESIGA SWAMIGAL, THIRUKKALAR.

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர்
வெளிக் கோவில் தோற்றம்.



ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர்
அதிஷ்டாந உள் கோவில் தோற்றம்.



ஸ்ரீ வீர சேகர ஞான தேசிகர்
உத்சவ விக்கிரகம்.



ஸ்ரீ வீர சேகர ஞான தேசிகர்
மூல ஸ்தானம்.



இளையான் குடி சிவாநந்த சுவாமிகள்



ஆத்தூர் ஷண்முகாநந்த ஐயா



கோவிற்பட்டி விமலாநந்த சுவாமிகள்





திருவையாறு நாராயண சுவாமிகள்



திருவாரூர் கிருஷ்ணாநந்த சுவாமிகள்



சிதம்பரம் சபாபதி சுவாமிகள்


வேதாரணியம் மகேசுவராநந்த சுவாமிகள்


நல் நிலம் கோவிந்த சுவாமிகள்


காஞ்சிபுரம் கோபாலாநந்த சுவாமிகள்


வியாசர் பாடி சுப்பய்ய சுவாமிகள்


கோவிலூர் சோமசுந்த ரய்யர


திறையூர் பெருமாளய்யர



இளையான் குடி சிவாநந்த சுவாமிகள்



ஆத்தூர் ஷண்முகாநந்த ஐயா



கோவில்பட்டி விமலாநந்த சுவாமிகள்



திருவையாறு நாராயண சுவாமிகள்



திருவாரூர் இருக்ஷநந்த சுவாமிகள்



சிதம்பரம் சபாபதி சுவாமிகள்

வேதாரணியம் மகேசுவரானந்த சுவாமிகள்



நல் நிலம் கோவிந்த சுவாமிகள்



காஞ்சிபுரம் கோபாலானந்த சுவாமிகள்





வியாசர் பாடி சுப்பய்ய சுவாமிகள்



கோவி லூர் சோமசுந்த ரய்யா



துறை யூர் பெருமா ளய்யா



அருணசல ஞாந
தேசிக ஸ்வாமிகள்

முக்தி ராம லிங்க ஞாந
தேசிக ஸ்வாமிகள்
கோவிலூர் மடம்

சிதம்பர ஞாந
தேசிக ஸ்வாமிகள்



திருக் களர் ஆண்டவர் உத்சவக் கேடகம்,
உத்சவ மூர்த்தி.



திருப்பூவணம் காசிகாநந்த சுவாமிகள்.



தஞ்சாவூர் கிருஷ்ணா சாமிகள்.



சங்கேந்தி சதாசிவ அடிகள்.



திருச்சி அத்வைதாநந்த சாமிகள்.



திருக்களர் கிருஷ்ணாநந்த சாமிகள்.



திருவண்ணாமலை
இராமநாத சாமிகள்.

கோவிலூர் அண்ணாமலை ஞான தேசிகர்.



கோவிலூர் நாராயண சாமிகள்.





சென்னை
வீர. சுப்பய்ய சுவாமிகள்



சிக்கல் மெய்யப்ப ஞான தேசிகர்.



கோவிலூர் மகாதேவ ஞான தேசிகர்.



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்
திருப் பூவண மடம்.

मण्डलेश्वर: परसमय पंज्ञानन: उभय भाषा वेदांद प्रवर्तक:
वीरशेकर ज्ञान देशिक शिष्य: त्रि भाषा पन्डित रत्न:
तिरुप्पूवण मठातीश: श्री काशिकानंद ज्ञानाचार्य स्वामिन:



திருக் களர், அமிர்த வல்லி அம்பா சமேத பாரிஜாத வநேசுவரர்,
வெள்ளி, ரிஷப வாகந ஆருடராய் எழுந்தருளி வந்து,
வீர சேகர ஞாந தேசிகருக்கு மோக்ஷம் கொடுக்கும் சமயம்
பிலவ வருஷம் வைகாசி மாதம் 16௳ திங்கட்கிழமை
(29—5—1961) இரவு 12 மணிக்கு பிடித்த படம்.



V. R. S. ஷண்முகாநந்த சுவாமிகள் — திருவாரூர்.



திருக் களர், அமிர்த வல்லி அம்பா சமேத பாரிஜாத வனேசுவரரும், வீர சேகர ஞான தேசிகரும், வீதி உலாப் போந்து சேர்க்கை சேர்ந்தவுடன், பிலவ வருஷம் வைகாசி மாதம் 17-ந்தேதி செவ் வாய்க் கிழமை (30—5—1961) காலை 6 மணிக்கு கோபுரத்துக்கு முன், தெரு வடைச்சாணோடு வடத்தைப் பிடித்துக் கொண்டு, சாதுக்கள் அனைவரும் நிற்கும் போது எடுத்த படம்.



திருக் களர், அமிர்த வல்லி சமேத பாரிஜாத வநேசுவரர், ரிஷப வாகந ஆருடராயும், வீர சேகர ஞாந தேசிகர் வெள்ளிக் கேடகத்தில் எழுந்தருளியும், நிற்கும், போது பிலவ வருஷம் வைகாசி மாதம் 17௳ செவ் வாய்க் கிழமை (30—5—1961) காலை 6 மணிக்கு பிடித்த படம்.



திருக் களர், வீர சேகர ஞாந தேசிகர் 50 - வது குரு பூஜைப் பொன் விழா,
பிலவ வருஷம் வைகாசி மாதம் 16 ந் தேதி திங்கட் கிழமை ( 29 — 5 — 1961 )
மாலை நான்கு மணிக்கு, குழுமி யிருந்த 110 சாதுக்கள் கூட்டத்தை எடுத்த படம்.



திருப் பூ வணம், ஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள், தலைமையில், 14—2—1956
திருக் களர், அருணாசல சுவாமிகள், மோக்ஷ தீபத் தன்று, 56 பெயர் இருந்து, எடுக்க படம்.

உ

ஓம் தத் சத்

பரப் பிரஹ்ம ணே நம:

# திருக் களர் ஆண்டவர் என வழங்கும், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள், புகழ் உரை ரச மஞ்சரி.

---

இது

திருக் களரில், வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள்,
அதிஷ்டாந ஐம் பதாவது வருஷக் குரு பூஜையில்,
24 துற வறத்தாரும், 12 இல்லறத் தாரும்,
அன்பு மேலீட்டால், தேன் சொட்ட வரைந்த
ரசக் கூட்டம் ஆகும்.

இது

திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள்
மாணுக்கர், திருப் பூ வணம், வோந்த மடம்,
*ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரிய ஸ்வாமிகளால்*
பரிசோதித்துச் சேர்த்து.

மதுரை,
V. சுப்புராயலு பிரசில் பதிப் பிக்கப் பட்டது.
பிலவ வருஷம் வைகாசி மாதம் 16உ திங்கட் கிழமை
விசாகத் தன்று வெளியீடு
29—5—1961.

விலை ரூபாய் ஒன்றரை.

ஓம் பரப் பிரஹ்மணே நம:

## முக உரை.

---

திருக் களர் ஆண்டவர் ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமிகள் அவர்கள் திருக் களரில், விதேக முக்தி எய்தி இற்றைக்கு ஐம்பது வருஷம் ஆகின்றது. அதனால் ஐம்பதாவது ஆண்டு குரு பூஜையைச் சிறப்புற நடத்த வேண்டும் என்றும், அவர்கள் பிரபாவங்களைப் பல பட, முப் பான் அறுவர் பெருமக்கள் எழுதி புத்தக ரூபமாக வெளியிட வேண்டும் என்றும், அவர்களின் உருவப் படமும், பலரும் ஓரிடத்தில் ஒரு காலத்தில் பார்க்கும்படியாக அமைக்க வேண்டும் என்றும், பேரறிஞர்கள் பலர் விரும்பினார்கள்.

அவ்வண்ணமே முயற்சி செய்ததில், முப்பத்தாறு பெரியார் திருக் களர் ஆண்டவர் பெருமையை விரித்தும், சுருக்கியும், வசன மாகவும், கவியாகவும், எழுதி அநுப்பினார்கள்.

அவை யாவும் ஒன்று சேர்த்து, டபிள் கிரௌண் சைசில், நல்ல பேப்பரில், அச்சிட்டும், படங்கள், திருக் களர் ஆண்டவர் உருவம், சமாதி ஆலயப் படம் 5, கோவி லூர் ஆண்டவர் - துறவு ஆண்டவர். (கருணாநிதி) சிதம்பர ஞான தேசிக சுவாமிகள், கோவி லூர், அண்ணாமலை ஞான தேசிகர், கோவிலூர்—மகாதேவ ஞான தேசிகர், சிக்கல் - மெய்யப்ப ஞான தேசிகர், சென்னை, வீர சுப்பய்ய ஞான தேசிகேந்திரர், நாராயண சுவாமிகள், ஏகாம்பரக் குப்பம் வேத மொழி பெயர்ப்பு-சிவாநந்த சுவாமிகள் படம் 9 எழுதிய துறவிகள் படம் 20, எழுதிய இல்லற அன்பர்கள் படம் 9, ஆக 43 படமும் தயார் செய்து, பெரும் பொருட் செலவு செய்து அச்சிட்டுத் தயாரித்திருக்கின்றோம்.

சில பெரியார், புகழுரை எழுதியநுப்பவும், படம் அநுப்பவும், காலதாமதம் செய்தார்கள். சிலர் இன்னும் அநுப்பத் தாமதம் செய்கிருர்கள். இது வரை 34 பாராட்டுரையும் 29 படங்களும் வந்திருக்கின்றன இன்னும் இரண்டு பாராட் டுரைகளும் ஐந்து படங்களும் வரவில்லை. பாராட் டுரை எழுதியவர்களில். ஐந்து பெயர் படங்களும், அநுப்பி வரவில்லை.

''தேசங் குலவ வளர்ப் போன் சற்சீடன்'' என்னும் பெரியார் வாக்கின்படி, நாம் நம் குரு நாதரின் பெருமையை ஐம் பதாம் ஆண்டுக் குரு பூஜையில் விளக்க வேண்டும் என்று கருதி, பல பெரியவர்கட்கும், பல அறிஞர் பெருமக்களுக்கும், கட்டுரை எழுதியனுப்ப வேண்டும் என்று கேட்டுக் கொண்டதை கௌரவித்து, 34 பெருமக்கள் எழுதி யனுப்பினுர்கள். உருவப் படங்களும் வெளியிட வேண்டும் என்று கருதிய கருத்தை அநுசரித்து எல்லாரும் சிரமங் கருதாது அன்போடு படங்களையும், அநுப்பி உதவினுர்கள். அவர்கள் செய்த நன்றி என்றும் பாராட்டற் குரியது

வெள்ளியங்கிரி முனிவர், வேங்கட முனிவர் ஆராவயல் முத்தைய சாமிகள், பழையூர் பட்டி அருணசல சுவாமிக ளாகிய நால்வர் படமும் கிடைக்க வில்லை. காரைக் குடி இராமசுவாமி ஞாந தேசிகர் படமும் கிடைக்க வில்லை.

''கோவிலூர் மடத்தின் அத்புத மகிமை'' என்று ஒரு நூல் யாம் எழுதி வருகிறேம். மேற்கூறிய ஐந்து படங்களும் கிடைத்தால் கோவி லூர் மடம் ஏழு படமும் இதர படங்களும் சேர்த்து, மேற்படி நூலில் வெளியிட உத்தேசம். மேற்படி நூல் விரைவில் வெளி வரும். என்பதைத் தெவித்துக் கொள்கிறேம்.

*காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள்.*
வேதாந்த மடம், திருப் பூ வணம்,
இராம நாத புரம் ஜில்லா.

# பாராட்டுரை எழுதியவர்கள்.

---



உ

சிவ மயம்.

வீர சேகரன் விரை கழல் சரண்.

# பொன் விழாப் புனைந் துரை.

---

பிலவ ஞு வைகாசி மீ 16உ திங்கட் கிழமை விசாகத் தோடு கூடிய பௌர்ணமை இன்று திருக்களர், வீர சேகர ஞான தேசிகர் 50-வது பொன்விழாக் குரு பூசையை முன் னிட்டு திருக் களரில், சாதுக்களும், அன்பர்களும், தாய் மார்களும், ஆயிரம் பேர் குழுமி யிருந்தனர். 13உ, 14உ, 15உ மூன்று நாளும் காலை 9 மணி முதல் 12 மணி வரை 36 பெயர் எழுதிய புக முரை அரங்கேற்றுப் பொன் விழா விமரிசை யாக நடந்தேறியது. 13உ 14உ 15உ மாலை மூன்று நாளும் 4 மணி முதல் ஆறு மணி வரை

சொற்பொழிவு.

முதல் நாள்.

1. சிதம்பரம், மௌன சாமி மடம், சபாபதிச் சுவாமிகள்.

2. மதுரை, பிரஹ்மானந்த சாமி மடம், சின்மயானந்த சுவாமிகள்.

இரண்டாம் நாள்.

3. நன்னிலம், தாண்டவ ராயர், அதிஷ்டான வாசி கோவிந்த சுவாமிகள்.

4. சங்கேந்தி, குக. சிவ. சதா சிவ அடிகளார்.

மூன் ரும் நாள்.

5. ஆத் தூர், வேணு கோபால சாமி மடம், தத்வ சந்மார்க்க சங்க ஸ்தாபகர், ந. சண்முகாநந்த ஐயா,
அவர்கள்.

6. சென்னை, வியாசர் பாடி, கர. சிவ, மடம்,
சுப்பைய சுவாமிகள்.

7. திரு வாரூர், சோம நாதன் கோவில், கிருஷ்ணாநந்த
சுவாமிகள்.

என்னும், ஏழு சாதுக்கள் தத்வமசி மகா வாக்கியத்தில் முதல் நாள் த்வம் பத விசாரம், இரண் டாம் நாள் தத் பத விசாரம், மூன் ரும் நாள் அசி பத விசார, வாச்சிய லக்ஷிய ஐக்கிய விசாரமதை யாவரும் உணரும்படி செய்தார்கள்.

திருப் பூ வணம் காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள், மூன் று நாளும், இரண்டு காலமும், தலைமை வகித்தார்கள். ரக்தாம்பரிகளும், சுவேதாம்பரிகளும், ஆன சா துக்கள் முந் நூ று பெயர் வரைக் குழுமி யிருந்து கேட்டனர். 16உ திங்கள் அன் று பகல் விசேஷ அபிஷேக அலங்கார ஆரா தனைகள் நடந்தன. இரவு அமிர்த வல்லி அம்பா சமேத பாரிஜாத வநேசுவரர், ரிஷப வாகநாருடராய்த் தெரு வடைச்சானிலும், வீர சேகர ஞாந தேசிகர் வெள்ளிக் கேடகத்திலும் 12 மணிக்கு வீதி உ லா ப் புறப்பாடாகி, காலை 7 மணிக்குச் சேர்க்கை வந்தது. கண் கொள்ளாக் காட்சி யாக இருந்தது. திங்கள் மாலை 4 மணிக்கு குழுமி யிருந்த சா து மகா சங்கத்தை நிழல் படம் எடுத்தார்கள். சேர்க்கை வந்த பின்னரும், தெரு வடைச்சானோடு ரிஷப வாகநாருடராய்ப் பாரி ஜாத வநேசுவரரையும், திருக் களர்

ஆண்டவரையும், படம் பிடித்தார்கள். எழுந்தருளி வந்த போது, இரு மூர்த்திகள் சந்நிதியில் மோக்ஷம் அருளும் சமயம் இடை வெளியில் சாதுக்களையும், நிற்கச் செய்து, நிழல் படம் பிடித்தார்கள். 13உ முதல் 19உ வரை ஏழு நாளும் பதினாயிரம் பெயர் வரை விசேஷ விருந் துணவு அருந்தினார்கள். அன்று இரவு வீதி உலாவில், வந்த சாதுக்கள் அனைவரும் கூடவே வந்தது போற்றத் தக்கது.

வந்திருந்த சாது மகாத்மாக்கள் அனைவருக்கும், விபூதிப் பையும், வஸ்திரமும், போக வர இரு ரயில், பஸ் சார்ஜும் அன்போடு கொடுத்தார்கள். வந்த அன்பர்கள் அனைவருக்கும், வெண்ணை போன்று, நயமும், நிறமும், உடைய அபிஷேக விபூதி விநியோகம் செய்யப்பட்டது. காரைக்கால் அம்மையார் மாம்பழத் திரு விழாப் போன்று, மாம் பழம் எட்டு நாளும் விசேஷமாக விநியோகம் செய்யப்பட்டது. பழநிப் பஞ்சாமிர்தம் போன்று, அபிஷேகம் செய்த பஞ்சாமிருதம் பக்தர்கட்கு விநியோகிக்கப்பட்டது. சாது மகாத்மாக்களைப் படம் பிடிக்கும் சமயமும், காலையில் சேர்க்கை வந்த பின் படம் எடுக்கும் சமயமும், உபய கெருடன் பாரிஜாத வனேசுவரர் ஆலயத்தி லிருந்தும், திருக்களர் ஆண்டவர் அதிஷ்டானத்தி லிருந்தும், எழுந்தருளி வந்து, ஆகாயத்தில் நேரே பல முறை வட்டம் இட்டது, 1911 ஹு விரோதி கிருது ஹு வைகாசி மீ 27உ சுக்கிர வார விசாகத் தன்று, வந்தது போன்று இருந்தது, அரிய பெரிய தன்மை யாகும் கால நிலை ஒத்திருந்ததும் போற்றத் தக்க தாகும். பல தூரங்களி லிருந்தும் சிரமம் கருதாது சிரத்தையோடு பல அடியார்களும், பல செல்வவந்தர்களும் வந்து குழுமி யிருந்தது என்றும் நினைவில் இருக்கத் தக்க தாகும். திருக் களர் வீர சேகர ஞான தேசிகர் மடத்தில்

இருக்கும், மகா. கிருஷ்ணாநந்த சுவாமிகள் சிரமங் கருதாது, பெரும் பொருட் செலவு செய்து, இந்தக் குரு பூ ஜை ப் பொன் விழாத் தொடக்க முதல் முடிவு வரை வந்தவர் யாவரும் புகழும்படி ஒரு குறைவும் இன்றிச் சிறப்புற நடத்திவைத்தமை என்றும் போற்றத் தக்க தாகும். திருக் களர் ஆ ண் ட வ ர் வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் மாணுக்கர், பிரம சபை அருணுசல சுவாமிகளால், தீபாவளி அன்று போன்று, குருவின் நினைவுச் சிந்நமாக, என்றும் நிலைவு பெருமாறு ஏற்படுத்தப் பெற்ற பத்து முள வஸ்திர மும், ஒரு ரயில் சார்ஜும் சாதுக்கள் அனைவருக்கும் மகிழும் படி குரு பூஜை அன்று கொடுத்து வருவது ஆண்டவர் புகழை அகில லோகமும் விளக்கும் என்பது ஞாபகத்தில் வைத்தற்குரியது திருக் களர் ஆண்டவர் மாணவர், கோட் டை யூர், க. வீ. சொ. வீர. அழகப் பய்யா என்பவர்களால் 1911ஞு முதல் இற்றை வரை, வந்த சாதுக்கள் அனைவருக் கும், குரு பூஜை அன்று ஒரு ரயில் சார்ஜ் கொடுக்கப்பட்டு மந மகிழ்ச்சியை உண்டு பண்ணிக் கொண்டிருப்பது, அறிஞர் மநதில் என்றும் நிலை பெற்றிருக்கும் என்பது பிரத்தியக்ஷமே யாகும்.

புகழுரை எழுதிய துறவியர் படம் 20 எழுதிய செல்வ வந்தர் படம் 9. கோவி லூர் பெரியார் படம் 3. நட ராஜர் படம் 1. திருக் களர் ஆண்டவர் படம் 1. திருக் களர் அதிஷ்டாநப் படம் 6. அஷ்ட வசுக்கள் படம் 4. மும் மூர்த்தி போன்றவர் படம் 3. சாதுக்கள் சமூகப் படம் 56—110 பெயர் உள்ளது 2. வீதி உலாப் படம் 2. மோக்ஷம் கொடுக்கும் காட்சிப் படம் 1. ஆகப் படம் 52 இத்துடன் சேர்க்கப்பட்டு, யாவரும் பார்த்து ஆநந்த பாஷ்பம் சொரியு மாறு மிளிர்கின்றது.

எல்லாம் இன்புற்று இனிது இலங்கு மாறு இறையருளும், குரு அருளும், உண்டாக வேண்டும் என்று பிரார்த்திக்கின்றோம்.

வீரேசன் விரை கழல் சரண்.

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,

திருப் பூ வணம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 149 | 28 | எருந் | எழுந் |
| 151 | 14 | வத்தது | வந்தது |
| ,, | 16 | குழஙளோடு | குழாங்களோடு |
| ,, | 30 | சேபாந | சோபாந |
| 152 | 13 | முறையைச | முறையைச் |
| ,, | 21 | ஆரம்க்க | ஆரம்பிக்க |
| ,, | 25 | பிரமோத்வத்தை | பிரமோத்சவத்தை |
| 153 | 8 | நாளைய திநம் | நாளையத் திநம் |
| 155 | 4 | 27—2 | 27௨ |
| 160 | 2 | மிகுக்காவ் | மிகுங்கால் |
| 164 | 16 | உண்டாக | உண்டாகா |
| 181 | 17 | மாகமண்டப | மகாமண்டப |
| 182 | 2 | நிலைமைல் | நிலைமையில் |
| ,, | 8 | பழய | பழைய |
| 3 | 19 | சத்திறம் | சத்திரம் |
| 16 | 11 | ஆவலர் | ஆதுவர் |

---



திருப் பூ வணம், வேதாந்த மடம்,
திருக் களர், ஸ்ரீலஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமிகள்
மாணுக்கர், எண் வகை விருதாவலி யோடு கூடிய
சத சாஸ்திர கர்த்தா,
ஸ்ரீ காசிகானந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள், எழுதியது.

# திருக் களர் ஆண்டவர் திரு அவதாரமும், செயற்கு அரிய செயலும்.

---

பஞ்ச மூர்த்தி வணக்கம்.

கருக்கெடுக் கின்ற வலம்புரிக் களிற்றைக்
காநகம் உறும்முநி களுக்குத்,
திருத்தரு கின்ற ஐந்தெழுத் துணர்த்தும்
சேயில்லூர் ஷண்முகன் அடியைக்,
கருத்திரும் பாரி ஜாதவ நேசன்
கழல்அமிர்த வல்லியின் அடியைத்,
திருக்களர் வீர சேகரன் அடியைத்
திநம்பணிந் தின்பம தடைவாம்.

"பாண்டி நாடே பழம் பதி" என்று விதந்து ஓதப் பெற்ற பாண்டி நாட்டில், புது வயலில், கலி 4949-க்குச் சரி யான, கீலக வருஷம் ஆவணி மாதம் 12உ வெள்ளிக் கிழமை, (கிருத்துவ வருஷம் 1848) வீர சேகர ஞான தேசிக சுவாமிகள் அவதரித்துப், பதி னறு வயது வரை, ராம மூர்த்தியைப் போன்று, பால கௌமார லீலைகளோடு இருந்து, 16-வது வய தாகிய ரக்தாக்ஷி வருஷம் கோவி லூரில், சிதம்பர ஞான தேசிக சுவாமிகளைக் குரு வாக அடைந்து, வேதாந்த மகா வாக்கிய உபதேசம் பெற்றுச் சாஸ்திராப்பியாசம் செய்து, சந்நியாசி யாய், தமது 35 வய

தாகிய 19 (சுபாநு) வருஷம் மார்கழி மாதம் வரை, பல தல யாத்திரை செய்து, தியாக பரராய்ச், சுகரைப் போன்ற வைராக்கியம் உடையராய் இருந்து, கோவிலூர் முக்தி ராம லிங்க ஞாந தேசிக சுவாமிகள், "கோவிலூரைப் 'பூ லோக கைலாயம்' என்று கூறும்படி ஆக்க வீரன் வரு வான்" என்று தம் சிஷ்யர்களிடத்தில் கூறிய, சத்திய வாக் கின்படியும், தம் குருபரர் சிதம்பர ஞாந தேசிக சுவாமிகள் சத்திய சங்கற்பப்படியும், இராம சாமி ஞாந தேசிக சுவாமி களின் அந்திய காலச் சங்கற்பப்படியும், சிதம்பரம்-பொன் னம்பல ஞாந தேசிக சுவாமிகளின், "குரு ஸ்தாநம் பிரஹ்ம லோகம் போல் பிரஹ்ம வித்தியா பீடம் ஆக விளங்க வேண்டும்" என்ற விடா முயற்சிப்படியும், சாதுக்களு டைய நீண்ட கால சங்கற்பப்படியும், பின் வந்து சரணுகதி அடையும் அநேக அரிய மாணவர்கள் புண்ணிய புஞ்ச பரி பாகத்தின்படியும், ( இந்த அறு வகைக் காரணங்களும் பிடர்பிடித்து உந்த) சுபாநு வருஷம் மார்கழி மாதம் 6உ புதன் கிழமை, தேவர்கள் விழிக்கும் காலம் பிரஹ்ம வித் தியா பீடம் ஆகிய கோவிலூர் மடத்தின் ஆசாரிய பதவியை ஏற்றுத், தமது அறு பத்து இரண்டே முக் கால் வய தாகிய இரு பத் தேழு வருஷம் ஐந்து மாதம் (விரோதி கிருது வருஷம் வைகாசி மாதம் 27உ வெள்ளிக் கிழமை) வரை இருந்து, அஷ்ட வசுக்கள் போன்றும், அஷ்ட திக்குப் பாலகர் போன்றும், "1 வேங்கட முநிவர் 2 வெள்ளி யங் கிரி முநிவர் 3 அண்ணுமலை ஞாந தேசிகர் 4 (ஆராவயல்) முத்தைய சாமிகள் 5 (பழை யூர் பட்டி) அருணுசல சாமி கள் 6 மெய்யப்ப ஞாந தேசிகர் 7 நாராயண முநிவர் 8 மகா தேவ ஞாந தேசிகர்" என்னும் எண்மரையும், மும் மூர்த்தி களின் அவதாரம் போன்று, "சென்னையில் இருபத் தைந்து வருஷம் பிரதி தினமும், மாலை ஏழு மணி முதல் எட்டு மணி வரை ஆயிரம் பேருக்கு வேதாந்த உபந்யாசம் செய்தும், மொழி பெயர்ப்பு - உரை - ஸ்தோத்திரம் என முப் பத்து ஆறு நூல் செய்தும் இருக்கின்ற, 1 சுப்பய்ய ஞாந தேசி

கேந்திர சுவாமிகள், 2 எண் வகை விருதாவலியோடு கூடிய, சத சாத்திர கர்த்தா, திருப்பூவணம், வேதாந்த மட ஸ்தாபகர், காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள், 3 வேத மொழி பெயர்ப் பாசிரியர், சிவாநந்த யதீந்திர சுவாமி கள்'' என்னும் மூவரையும், இருபத் தேழு வருஷம், இன் னும் இரண்டாயிரம், இல்லற, துறவற மாணவர்களையும், பிரஹ்ம உபதேசம் செய்து, பிரஹ்ம வித்துக்கள் ஆக்கியும், கோவிலூர் திருநெல்லை அம்பாளுக்குத் தேய்ப்புப் போட்ட கருங் கல் ஆலயம், தம் குரு மூர்த்தியின் அதிஷ்டாந ஆல யம், மடம், பிரஹ்ம சபை, கைலாசக் கொட்டகை, குரு பூஜைக் கட்டு, முதலியவற்றை நகரத்தார் கொடுத்த இரு பத் தேழு லக்ஷ ரூபாய் வரைச் செலவிட்டு, கண்டார் எல் லாம் கழி பேருவகை கொள்ளும்படி நன்ருகச் செய்து, தியாநத்தில் திருநெல்லை அம்பாள் வந்து, ''எடுத்த காரியங் கள் யாவும் நினைப்பின் வண்ணம் தடையின்றி முடிவு பெறும் இனி எந்தக் காரியத்தையும் ஆரம்பிக்கலாம்.'' என்று கூறிய ஆசீர்வாதத்தினைப் பெற்றும், கீலக வருஷம் சித்திரை மாதம் 11உ குரு வாரத் தன்று, பதினுன்கு உலகத்தவரும் வந்து பார்த்துக் குறை கூற இயலாத வகை யில், ஒரு லக்ஷ ரூபாய் செலவு செய்து, நூன் முறை வழாது, லக்ஷக் கணக்கானவர் உண வருந்திய அந்த சப்தத் தைக் கேட்டு, அந்தப் பக்ஷிகள் பயந்து, மேல் உலகம் வசிப் பதாகச் செல்லும் ஆறும், சிருங்க கிரி. ஜகத் குரு, சாரதா பீடம், ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபிநவ நரசிஹ்ம பாரதி சுவாமிக ளவர்கள் நேரில் கண்டு, அளவிலா ஆநந்தம் கொள்ளும் ஆறும், கும்பாபிஷேகம் செய்தும், சிருங்க கிரியில், சாரதா ஆலயத்தை, ஐம்பதாயிரம் ரூபாய் செலவு செய்து நீல மேக சியாமள இழைப்புக் கருங் கல் திருப் பணி இயற்றி யும், திருக் களரில், சிவாலயம், திருக் குளம், திரு வீதி, நந்தந வநம் முதலியவற்றை நான்கு லக்ஷ ரூபாய் செலவில், நான்கு வருஷத்தில், காட்டை களரி ஆகச் செய்தும், கலி ஆதி 5013க்குச் சரி யான விரோதி கிருது வருஷம்

சித்திரை மாதம் 22உ வியாழக் கிழமை, பூர்வ பக்ஷ சஷ்டி திதி சித்த யோகம் மிதுந லக்கிநம் புநர் பூச நக்ஷத்திரத்தில், தேவ லோகத்தவரும், பூ வுலகம் வந்து களிப் புறும்படி, சாஸ்திர யுக்த மாக, ஒரு லக்ஷ ரூபாய் செலவில் கும்பாபி ஷேகம் இயற்றியும், திரி கால ஞாநி ஆய், சாக்கைக் கோட்டை வீரசேகரரே அவதரித்தமையின், அவதார புரு ஷர் போன்றே, இரு வகை (அதாவது சகாம நிஷ்காம) தவம் உடையராய், மாணிக்க வாசகர் சிதம்பரத்தில், நட ராஜா வுடன் ஜோதி சொரூபத்தில் ஐக்கியம் ஆனது போல், கலி ஆதி 5013க்குச் சரியான விரோதி கிருது வருஷம் வைகாசி மாதம் 27உ வெள்ளிக் கிழமை (கிருத்துவ ௵ (1911) சுக்கில பக்ஷம் திரயோதசி திதி விசாக நக்ஷத்திரத் தில், பகல் 12 மணிக்குத் தெற்கு வீதியில், தேரின் முன் பாகக் கடவுள் எழுந்தருளி யிருக்க, நட ராஜாவின் சந்நிதி யில், துருவாசர் பின் பாகத்தில், தேகத்தினைப் பிராமணர் கள் தாங்கும்படி, "மகா தேவ மகா தேவ மகா தேவேதி யோ புருயாத், ஏகேனைவ பவேந் முக்தி. த்வாப்யாம் சம்புர் ரிணீபவேத்" என்னும் பிரமாணங் கொண்டு, 'மகா தேவ' என்னும் மந்திர உச்சாரணத்தோடு கூடப் பத் தாயிரம் ஜநங்களின் மத்தியில், திடப் பிரஞ்ஞையோடு தேகத் திரய நீக்கம் ஆகிய விதேகம் கைவல்யம் அடைந்து அதிஷ்டாந ஸ்வரூபம் ஆனார்கள்.

பின்னர், தூல தேகத்தைச் சமாதி வைத்து, அண்ணு மலை ஞாந தேசிகரும், மகா தேவ ஞாந தேசிகரும், இரண்டு லக்ஷம் ரூபாய் வரைச் செலவு செய்து, ஆலயம் அழகாக அமைத்தும், ரூபாய் ஐம்ப தாயிரம் செலவுசெய்து, மடம் கட்டியும், 50 வேலி விளை நிலம் மிகுந்த பொருட் செலவில், வாங்கி வைத்தும், மதுரை ஸ்ரீ மீநாக்ஷி அம்மன் சந்நிதி போலும், சிதம்பரம் நட ராஜர் சந்நிதி போலும், திருப் பதி வேங்கடேசர் சந்நிதி போலும், பூஜை நைவேத் தியம் நடந்து வரும்படி ஏற்பாடு செய்தார்கள். 50 வது வருஷம் (பிலவ ௵ வைகாசி மாதம் 16உ திங்கட் கிழமை

பௌரணை யோடு கூடிய விசாகம்) ஆகிய இன்று வரைப் பரம்பரை யாகச் சிறப்புற நடந்து வருவதைக் கண்கூடாகப் பார்க்க லாம்.

திருக் களர் சிவாலயமும், வீர சேகர ஞாந தேசிக சுவாமிக ளாகிய, திருக் களர் ஆண்டவரது அதிஷ்டாந மும், சிறப் புற நித்திய பூஜை முதலியன, தங்கு தடை யின்றிச் சாதுக்களால் பரிபாலிக்கப் பெற்று நடந்து வருகின்றன.

திருக் களர் ஆணடவர் மாணவர்கள் பல் லாயிரவர் களுள், யாம் ஒருவர் தாம் சமாதி ஆகி 50 வது வருஷம் வரை, நமக்கு விய வருஷம் முதல் வயது 75 ஆகியும், தேக திடத்தோடும், திட ஞாநத்தோடும், "எவ் விதத்தும் அவன் அருளைத் தேசம் குலவ வளர்ப்போன் சற்சீடன்" என்று கூறுகிறபடி, வீர சேகர ஞாந தேசிகரது பெருமையைப், பிரசங்க வாயிலாகவும், நூறு நூல் இயற்றிய வாயி லாகவும், கேள்வி சமாதாந வாயி லாகவும், இன்னும் பல திறத்தும், காசி முதல் கன்னியா குமரி - மலாயா நாடு வரைச் சென்று விளக்கிக் கொண்டு இருக்கின்றோம். இன்னும் நீ ணாள் அரோக திடகாத்திரத்தோடு இருந்து, பதி னன் குலகும் சென்று, விளக்கிக்கொண்டிருக்கும்படி, பகவத் கிருபையும், இறைவன் அருளும், குரவன் அருளும், உண்டாக வேண்டும் என்று,

"இறவில் எப்பத மும்பெற வேண்டிலேன் என்றும்,
பிறவி வேண்டுவன் நின்திருப் பணிசெயப் பெறினே"

(மோக வதைப் பரணியில் உள்ள சசி வந்த போதம், தத்துவ ராய சுவாமிகள் இயற்றிய தாம். எனக் கூறும் பிரமாணம் கொண்டு பிரார்த்திக்கிறேன்.

திருக் களர் ஆண்டவர் திரு அடிகள் நீ டூழி வாழ்க.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

ஓம் தத் சத்.

சாக் கோட்டை, கோ, ராம, மடம்,

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் மாணுக்கர்,

*புதுச் சேரி, வேதாநந்த சுவாமிகள் எழுதியது.*

புதுவை (16—8—60)

ஸ்ரீலஸ்ரீ சிதாநந்த சிந்மய காசிகாநந்த ஸ்வாமிகளுக்கு வணக்கம் பல.

ஆடி-மீ 14-உ தாங்கள் எழுதிய கடிதம் கிடைத்து அதி லுள்ள விபரந் தெரிந்தது. தங்கள் இஷ்டப்படி நான் நேரில் பார்த்த தாகிய திருக் கள ராண்டவரின் புகழ் பல வுள. அவற்றில், சிலவற்றைத் தெரிவிக்கின்றேன்.

நான் 18-வது ஆண்டில் † சாக் கோட்டை மடாலயத்து, வீர சேகர ஞாந தேசிக சுவாமிகளுடன் கோவி லூர்ப் பிரம்ம சபையில் திருக் கள ராண்டவ ரென்னும் சுவாமிகள் இருக்க, எதிரில் சாக் கோட்டை சுவாமிகளோடு நமஸ்கரிக்க, எங்களைத் திரும்பிப் பாராமல் தரையைப் பார்த்துக் கொண்டே இருந்து விட்டார்கள்.

சாக் கோட்டை சுவாமிகள் திரும்பியதும் அதனுடன், நானும் திரும்பி இது என்ன பிணமா? என்று நினைத்தேன். திரும்பிய போது திருக் கள ராண்டவ ராகிய சுவாமிகள், என்னை உற்றுப் பார்த்து சந்தோஷக் குறிப்பை உணர்த்தினுர்கள்!

முன்னர் அவருடைய சரித்திரத்தைப் பற்றிக் கேட்ட போது, கோவிலூரி லிருந்து புறப்பட்டு, நான்கு முழத் துண்டை இடையிலும், தலையிலு மாகப் போட்டுக் கொண்டு, சிதம்பரத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த

† *இந்த வீர சேகர ஞாந தேசிகர் வே ெறாரு ஞாந தேசிக ராவார்கள்.*

போது, பசி ஏற்பட்டது. வழியில் ஹரிஜநச் சேரி ஒன்று எதிரிட அங்குச் சென்று, பசி யென்று சொன்ன போது, சுவாமி எங்களிடம் ஒன்றும் உணவுக்குக் கொடுக்க வில்லையே என்று துக்கக் குறியுடன் அன்பைக் காட்டினார்களாம்.

நீங்கள் எதைச் சாப்பிடுகிறீர்களோ, அதனை எனக்கும் கொஞ்சம் கொடுங்கள் என்று கேட்க, அவர்களிட மிருந்த வரகு அரிசி அன்னத்தை, வேறே ஒன்றையுந் தொடாமல் கொடுங்கள் என்று வாங்கிச் சாப்பிட்டுச், சிதம்பரம் சென்றார்களாம். இதனை நோக்க அவர்களுடைய விரக்தி நன்கு புலப்படுகிறது.

நான் ஒரு சமயம், திருச் செந்தூர் மௌந சுவாமிகளுடன் கல்வி வேண்டும் என்ற போது, "கல்வி வரம்பு அற்றது" என்றும், அதன் முடிவு நிராசையே. அஃது இன்பந் தருவ தன்றி, ஆசை துன்பந் தருவ தாகும் என்றுங் கூறக் கேட்டிருந்தேன். அதனை, 'இது என்ன பிணமா' என்று வெறுப்பு அடைந்த நான், அப் போது அவர்கள் பரசிவமே என்று உணர்ந்தேன்.

நிற்க, அவர்க ளுடைய சந்நிதியில், திரி லோகமும் விரும்பத் தக்க மதிப் பற்ற இரண்டு ரத்நங்கள் தோன்றின. அதாவது 18-வய துடைய ஆந்திர தேசத்தி லிருந்து ஒரு சிறுவர் கோயிலூர் மடத்திலேயே வேதாந்தம் நன்றாய்ப் போதிக்கும் பெரியா ருளார் என்று கேட்டுக், கோவிலூர் மடம் வந்து சேர்ந்தார். அவரை அங் குள்ள வெள்ளியங்கிரி என்ற சுவாமிகள் பார்த்து, நீ எங்கு வந்தாய் என்றும், விரும்பியது யாது என்றும், கேட்க, வேதாந்தம் உணர்தற் பொருட்டு வந்தேன் என்று கூற, அவ் வசநத்தால் இவன் முகத்திலும் அகத்திலும் அழ குடையவன் என்று அறிந்து, அவரை அழைத்துக் கொண்டு திருக் களராண்டவர் சந்நிதியில் விட்டார். அவர்கள் பார்த்து, இவன்

மகா உத்தமன் என்றும் தெரிந்து ஊர் பெயரையும் வினவி, 'வெள்ளி யங்கிரி சுவாமிகளுடன்,இவரையும் அனுப்பி, இவனுக்கு வேதாந்த நூற்களைக் கற்கும்படி செய்ய வேண்டியது உனது கடமையே' என்றார். ஒரு சிறிய தமிழ் நூலை அவர் வசம் கொடுத்துப், படி என்று சொல்லத், தமிழ் எழுத்தே எனக்குத் தெரியா தென்று சொல்லிப், பின் அவர் தமிழ் எழுத்துக்களை மூன்று திநத்தில் கற்றுக் கொண்டார். பின் வேதாந்த நூற்களை முன் அங் குள்ளவர்கள் 10 வருஷம் படித்த நூற்களை யெல்லாம் பத்துத் திநத்தில் படித்து விட்டார்.

இதனைத், திருக் களராண்டவர் கேட்டுப் பூரண விசுவாசத்துடன் சில அரிய மொழிகளை நன்ருகக் கூறினர். இதனைக் கேட்டோர் அனைவரும் வியப்படைந்தனர். அப்போது, சிருங்கேரி நரசிம்ம பாரதி என்ற சுவாமிகள் யாத்திரை புறப்பட்டு இராம நாத புரம் வந்து இருந்தார்கள். அதனைக் கேட்டு, அந்த வேங்கடாசல சுவாமிகள், நான் இராம நாதபுரம் சென்று அவர்களைத் தரிசித்து விட்டு வருவேன், விடை கொடுக்கட்டும் என்ருர். அதனைத் திருக் களர் ஆண்டவர், சிதம்பரம் முதலிய மடங்களி லிருக்கும் பெரியார்களையும் அழைத்துக் கொண்டு நாம் போக லாம் என்று சொன்ஞர்கள். அதற்கு இணங்காமலே, நான் மாத்திரம் முன்னே போய் வருகிறேன் என்று அன்போடும் சொல்ல, அப்படியே போய்வா என்று சந்தோஷமாக அனுப்பிஞர்கள். உடனே அன்றிரவே புறப்பட்டு இராம நாதபுரத்திற்குக் காலை 7½-மணிக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அங்கு, முன் னின்றவர்பால் சிருங்கேரி சுவாமிகள் எங்கே இருக்கிருர்கள் என வினவ, அவர், இதோ, ராஜா– அவர்களுக் காகவே கட்டி வைத்திருக்கின்ற அழ கான இடத்திலேயே இருக்கின்ருர் என்றதைக் கேட்டு, அவ்விடம் செல்ல முற்பட்டார்கள்.

வாயிலில் காவல்காரர் இருவர் இருந்ததால், அவர்கள் கடந்து உள்ளே செல்ல முடியாமற் போயிற்று. அக் காவலாளர் இவரைக் கடு மொழியால் "நீ யாரடா அவர்களைப் பார்க்கப் போகின்றவனு" என்று கூற, வாயிலிலேயே நின்றுவிட்டார்கள். காலை மணி எட்டிலிருந்து பத்தரை மணி வரையில் நின்ற பின் அவ் விடத்திலேயே உட்கார்ந்து விட்டார். இடையில் இராஜா முதலிய பல பிரபுக்க ளெல்லாம் சென்று சுவாமிகளைத் தரிசித்து வர, இவர்களையே பார்த்துக்கொண்டிருந்தார். எல்லாரும், இவரைப் பார்த்து ஒருவரும் யா ரென்று கேட்பா ரில்லை. பின், பாஸ்கர சேதுபதி என்ற அரசர் இவரைக்குறிப் பாகப் பார்த்துக் கொண்டே சென்றுவிட்டார். பின், அரை மணி நேரத்துக்குள், அரசர் திரும்பி வந்தார். அச் சமயம் அரசர், சுவாமிகளைப் பார்த்து நீயார்? அதிக நேர மாக இங்கு உட்கார்ந்திருக்கிறாய் போலும் எனக் கேட்டார். சுவாமிகள் ஒன்றும் பதில் சொல்லவில்லை. மீண்டும், அரசர் காவலாளர்களைக் கேட்க, இவர் 8 மணிக்கு இங்கு வந்தார். நாங்கள், "நீ அங்கே போவதற்கு உரியவன் அல்ல என்றோம்" என்றார்கள். அதற்கும் ஒன்றும் பதில் சொல்லாமல் இருப்பதைப் பார்த்து, அரசர் "நீங்கள் சுவாமிகளைப் பார்த்த துண்டா? நீங்கள் சுவாமிகள் சந்நிதிக்குச் சென்றால் சுவாமிகள் உம்மை வரவேற்பார்களா" என்றதைக் கேட்டு, எத்தனை பேர் அவர் சந்நிதியில் நின்றாலும் என்னைப் பார்த்து, 'வா' என்று கூறிச் சந்தோஷிப்பார்கள். என்று சொல்ல, அதை அரசர் கேட்டு 'வருக' என்று கூறி அழைத்துச் சென்றார்.

சுவாமிகளும், பின் தொடர்ந்தார்கள். அரசர் சென்று சிருங்கேரி சுவாமிகளை வணங்கித், தமக் குரிய ஆசநத்திலமர்ந்தார். சுவாமிகள், சுவாமிகளைப் பார்த்துக் கையைத் தட்டித் தம் பக்கத்தில் இரு என்றார்கள். அரசர் ஆச்சரியமடைந்து, நம் போன்றவர்களிடத்திலும் நேரே பேசாத சுவாமிகள் இவரிடம் பேசினார்கள் என்று அரசர் முதலிய

2

பல பிரபுக்களும், இவரைப் பார்த்த வண்ணமாகவே இருந்தார்கள். சுவாமிகள், இவரைப் பார்த்து, நீ யார்? இங்கு எதன் பொருட்டு வந்தாய் என வினவ, நான் கோவிலூர் மடத்தில் வேதாந்த நூற்கள் படிப்பவன்; தங்களை அவ்விடம் அழைத்துக் கொண்டு செல்வதாக வந்தேன் என்ற மாத்திரத்திலேயே, "அங்குள்ள பெரியாருடன் எத்தனை பேர் படிக்கிறீர்கள்" என்று வினவ, என்றும் இருபத்தைந்து பேர்களுக்குக் குறையாமல் படிப்போம். வேதாந்த நூல் ஒன்றை அன்றி, வேறொன்றையும் விரும்புவதில்லையென்று சொல்லுகிறபோதே, இவர்கள் சூத்திரர்கள் என்று பக்கத்தி லிருந்த ஒரு சாஸ்திரி கூறினார். அவரைப் பார்த்துச் சுவாமிகள், நீ தானா பிராமணன், என்று சிறிதே சினக் குறிப்புடன் பார்த்துவிட்டு, வேங்கடாசல சுவாமிகளைப் பார்த்துச் "சங்கர பகவத் பாதரது வேதாந்த நூற்கள் படித்திருந்தால் ஒரு வாக்கியத்தைச் சொல்" என்றார். உடனே, "வந்த மேகத்தினால் மறைவதாம் இரவிபோல் வளர்கரணங்களால் மறையும், அந்தச் சித்தினைச் சந்ததம் பாவித்துச் சுகமுறும் யோகிதான் சாதியால் யாரேனும் குரு என நிச்சயம்" என்றவுடன், சுவாமிகள் சாஸ்திரியைப் பார்த்து, இப்பொழுது பிராமணன் யார்? என்றார். சாஸ்திரி தலை குனிந்தார்.

சுவாமிகள், வேங்கடாசல சுவாமியைப் பார்த்து, அம்மடம் நமக்கே உரியது. "அங்கு வருவதற்குத் தடையென்ன?" என்று கூறிச், சுவாமிகள் எழுந்து உள்ளே செல்ல, அங்குக் கூடியிருந்த மன்னர் முதலிய அனைவரும் அவரவரிடம் சென்றுகொண்டிருந்தபோது, அரசர் வேங்கடாசல சுவாமிகளிடம் வந்து, சுவாமிகளையும் அழைத்துக்கொண்டு, வெளியிற் சென்று வேறொருவனை அழைத்துச், "சுவாமிகளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து ஆகார மளித்து என்னிடம் அழைத்துவா" என்று சொல்லிப் போனார். மன்னர் அநுப்பிய ஆள், சுவாமிகளை நமஸ்கரித்து, தங்களுக்குச் செய்ய வேண்டியது யாது எனக்

கேட்டார். பதில் சொல்லாமலே, எதிரில் கண்ட ஓர் நீர் நிலையில் குளித்துத், தன்னிடமிருந்த வேட்டியைக் கசக்கித் தலையில் போட்டுக் கொண்டு, ஒரு வீட்டின் எதிரில் நின்று 'பிக்ஷாந் தேகி' என்றார். அங்குச் சூழ்ந்து நின்றவர் அனை வரும் உட் சென்று, அன்னம் கொண்டு வந்து கொடுக்கத் தன் இரு கையாலும் பெற்று, அவ் விடத்திலேயே அருந்தி னார்கள். பின், கோவிலூருக்கு வழி நோக்கிச்சென்றார் அரச னால் ஏவப்பட்ட ஆள். அரசன் கூறியவற்றைக் கூறவும், ஒன்றும் பதில் சொல்லாமலே நடக்கத் தொடங்கினார். அரசனிடம் சென்று, நடந்தவற்றை ஆள் கூறினன். சுவாமி கள், கோவிலூர் அடைந்து திருக் களர் ஆண்டவரிடம் தாம் இராம நாத புரஞ் சென்று சிருங்கேரி சுவாமிகளைத் தரிசித்த விதத்தையும், அங்கு நடந்தவற்றையும். சுவாமிகள் மடத்துக்கு வரச் சம்மதித்ததையும், விபர மாகக் கூறினார். கோவிலூர்ச் சுவாமிகளும், காரைக் குடியி லிருந்து கோவி லூர் வரையிலும், பற் பல விசித்திர அலங்காரங்களைச் செய்வித்து, சிருங்கேரிச் சுவாமிகளைக் காரைக் குடியிலேயே பல மடாதிபதிகளோடு வரவேற்றார்கள்.

பின், சிருங்கேரிச் சுவாமிகளின் பல்லக்கைத் தாங்களே சுமந்து வந்து, கோவிலூரில் அவர்களுக் காக அமைத் திருந்த ஜாகையில், இருக்கச் செய்தார்கள். ஐந்து தினம் இருந்து, சிருங்கேரிச் சுவாமிகள் ஊருக்குப் போவ தாக மற்று முள்ள சாதுக்களுடன் சென்று வெளியிட்டார்கள். அவர்களுடன் சென்ற வேங்கடாசல சுவாமிகள், மறைந் திருந்து சிருங்கேரிக்கே போய்ச் சேர்ந்தார். பின் அவர்கள் சரிதம் பல.

நிற்க, இரண்டு மூன்று வருடங்களுக்குப் பின், சுப் பைய சுவாமிகள் என்பவர், தமிழ் நூற்கள் பல நன் றாகப் படித்து, வேதாந்தம் படிக்க விரும்பித், தம் ஊரை விட்டு உத்தர கோச மங்கை வந்திருந்தார். அப்போது, சாக் கோட்டை மடாலய சுவாமிகளுடன் நான் உத்தர கோச

மங்கை வந்த போது, அங்கு என்னைக் கண்டு, முன் செல்லும் சுவாமிகள் யார், நீங்கள் யார், என்று வினவ, அவர்கள் சாக்கோட்டை வேதாந்த மடாலயம் சுவாமிகள் என்றும், நான் அவர்களிடம் வேதாந்தம் படிக்கின்றேன் என்றும் கூற, உங்களுடன் நானும் வருகின்றேன் என்றார். அவரைப் பார்த்து நீங்கள் தமிழ் நன்றாய்ப் படித்துவிட்டதாகவும், வேதாந்தம் படிக்க விரும்பிய தாகவும், சொல்லுகிறபடியால், எங்களுடன் சாக் கோட்டை வந்து வேதாந்தம் நன்ருகப் படிக்க முடியாது; கோயிலூர் மடத்துக்கே செல்லுங்கள். அங் குள்ள சுவாமிகளுடன் வேதாந்த நூற்களனைத்தையும் சில நாட்களுள் படித்து முடிக்கலா மென்றேன். அதற்கு அவர், அங்குப் பல நிர்ப்பந்தங்கள் உண்டென்று சொல்கிருர்களே, அந்த நிர்ப்பந்தங்களுக்குக் கட்டுப்பட்டு நிற்க என்னுல் முடியுமா? என்ருர்.

அந்த நிர்ப்பந்தமே தங்களுக்கு அங்கு ஏற்படாது. கோயி லூருக்கே தான் நீங்கள் செல்ல வேண்டும் என்றேன். அதுகேட்டு அவர் கோயிலூர் மடத்துக்கு வந்து ஊருக்குத் தென் பக்க மிருக்கும் ஊருணிக் கரையில் நின்ருர். அவரைப் பார்த்த வெள்ளியங் கிரிச் சுவாமிகள் என்பவர், ''இங்கு எதன் பொருட்டு வந்தாய்'' என்று வினவ, அவர், ''தமிழ் நூல்கள் பல படித்தேன். அதனுல் என்னைப் படித்தவ னென்று மதிக்க வில்லை வேதாந்தம் படித்தால் தான் நான் படித்தவ னுவேன்'' என்ற போது வெள்ளியங் கிரி சுவாமிகள், சுப்பைய சுவாமிகளின் முகத்தைப் பார்த்து, சந்தோஷத்துடன் அழைத்துத் தன் இருப்பிடத்தில் இருக்கச் செய்தார்.

பின், ''நான் தெரிசநத்திற்குப் போகிற போது அழைத்துக்கொண்டு போகிறேன்'' என்று சொல்லி, அவருக்குக் காலை ஆகாரம் கொண்டு வந்து கொடுக்க ஏற்பாடு செய்து விட்டு, மணி 11க்கு இவரையும் அழைத்துக் கொண்டு சமாதி ஆலய தரிசநத்திற்குப் போனுர். அங்கு அம் மடத்து

அதிபராகிய வீர சேகர ஞான தேசிக சுவாமிகள் இருக்கக் கண்டு, வெள்ளி யங் கிரி சுவாமிகள் நமஸ்கரிக்க, இவரும் கீழே விழுந்து நமஸ்கரித்தார். இவர்களைப் பார்த்தார் திருக்கள ராண்டவ ரென்னும் பெயர் பூண்ட சுவாமிகள் 'இவன் யார்' ரென்று வின வ, வேதாந்தம் படித்தற் பொருட்டு இங்கு வந்ததைச் சொன்னார். உடனே சுவாமிகள், இவனது முகத்தைப் பார்த்தார். மீண்டும் பார்த்தார், உடலின் அழகையும் நோக்கினார். மிகச் சிறுவனாக இருக்கிறனே, இவனா வேதாந்தம் படிக்க விரும்பினான், என்று மிகவும் சந்தோஷத்தோடு மறுபடியும் பார்த்தார்.

வெள்ளி யங் கிரிச் சுவாமிகளிடம், "இங்குப் படிக்கத் தக்க நூற்களைப் படிக்கும்படி செய்" என்று சொல்ல, உடனே தெரிசநம் பண்ணிக்கொண்டு, சுப்பைய சுவாமிகளை அழைத்துக் கொண்டு, வெள்ளி யங் கிரிச் சுவாமிகள் தன திருப்பிடம் வந்து சேர்ந்தார்கள்.

மீண்டும் சுவாமிகள், கோவிலூருக்குப் போன போதெல்லாம் "இவன் நன் ருய்ப் படிக்கிருனா, இது வரையில் எது எது படித்தான்" என்று வினவினார். ஒரு நாள் நூற்களின் பெயரைச் சொல்லி, மற்றைய நூல் அவன் பின் போவதற்கு என்னுலேயும் முடிய வில்லை என்ருர். பின் அவ் விடம் மடாதிபதிக ளாகிய சு வா மி க ள், சுப்பைய சுவாமிகளைக் கண்டபோ தெல்லாம், சூக்ஷும மாக அரிய விஷயங்களைக் கேட்பார். அவர் பதில் கூறுவார்.

இவ் வாறு, சில வருடங்களுக்குள் படிக்க வேண்டிய நூற்கள் முற்றிலும் படித்து விட்டு, நான் காசி முதலிய பல க்ஷேத்திரங்களைத் தெரிசித்துக் கொண்டு வ ரு கி றே ன். எனக்கு விடை தருதல் வேணடும் என்று சுவாமிகளுடன் நமஸ்கரித்துக் கேட்கச், சு வா மி க ள் விடை கொடுத்து, அப்பா இப் போது நீ படித்தவ னென்று மதிக்க வில்லை. பூர்வ ஜெந்மத்திலேயே நன் ருய்ப் படித்தவன் என்றுகூறி,

என்னையும், இம் மடத்தையும், புகழ் பெறச் செய்ய வந்திருக்கின்றாய் என்று சந்தோஷமாகக் கூறி, யாத்திரைக்கு விடை கொடுத்தார்.

உடனே வட நாடு சென்று, அங் குள்ள பெரியோர்களிடம், வட மொழி நூல்கள் பலவற்றைக் கற்று, சில ஆண்டுகளுக் குள்ளாகவே, இங்கு வந்து சேர்ந்தார். அப்போது திருக் கள ராண்டவ ரென்னும் சுவாமிகள், திருக் களரி லுள்ள க்ஷேத்திரம் பழு தடைந் திருப்பதைக் கண்டு, இந்த க்ஷேத்திரத்தை பிரதிஷ்டை பண்ணினவர் யா ரென்று வினவ, ஆதியில் தூருவாச முனிவரால் பிரதிஷ்டிக்கப் பட்ட தென்றும், இன்னும் சில ராஜாக்களாலும், சில கட்டிடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன வென்றும், கூறக் கேட்டு, அப் போது பழு தடைந்த இடம் அனைத்தையும் நூதன மான வகையில் செய்து வர, அதனை தெரிந்து, சுப்பைய சுவாமிகள், திருக் களர் வந்து, ஆண்டவர் பணிகளைச் செய்துகொண்டே, பல பிரசங்கங்களையும், செய்து கொண்டு, பல பாடங்களையுஞ் சொல்லிக் கொண்டிருந்தார்.

பின், குறிப்பிட்ட திருப் பணி முடிய கும்பாபிஷேகத்துக்கு நாள் வைத்து, செட்டி நாட்டி லுள்ள பெரும் பொருளாளிகளை யழைத்து, ஒவ் வொருவருக்கும், ஒவ் வொரு பணியைக் கூறி, முடிக்கச் செய்தார். இத் தகைய கும்பாபிஷேகம் கண்டதே இல்லை யென்று யாவரும் கூற நடை பெற்றது.

நிற்க, அங் குள்ள பெரும் பொருளாளிகளை யழைத்து, இப் போது பழைய உற்சவங்களை நடத்த வேண்டும் மென்றும், யார் யார் எந் தெந்த உற்சவத்தை நடத்தினார்களென்றும், வினவி, அவ் வவற்றிற் குரிய இடங்களை அலங்கரித்து நடத்தும்படி ஆக்கினை பண்ணி, தமக்கு வடக்கு வீதியில் ஓர் இடத்தை நியமித்து, உற்சவத்தைத் தொடங்கி ஒவ் வொரு மடத்தி லு முள்ள சாதுக்களை யெல்லாம் வர வழைத்துக் கொண்டு புஷ்பப் பணிகளை செவ்வை யாகச்

செய்து, ஒவ்வொரு உற்சவங்கள் எட்டாவது உற்சவம் வரையில் நடத்திய பின்னர், 9-வது உற்சவத்துக் காகத் தேர்களை அலங்கரிக்கச் செய்து, அன்று பகலுக்கு மேல் ரத ஆரோகணம் செய்வித்தார்கள்.

பின், புஷ்பக் கொட்டகைக்கு வந்து, நீங்கள் அனை வரும் தேர் வடத்துக்கு வந்துவிட வேண்டு மென்றும், இங்குச் சில விசேஷங்கள் நடக்கப்போகின்றன வென்றும் சொல்ல, அப்போது, பசும் பால் கொடுக்கும் ஒருவர் சுவாமிகள் எதிர் வந்து, பாலை வைத்துக் கொண்டு நிற்கப் பால் இன்றோடு என்னிடம் நின்று விட்டது. இனி வேண் டுவ தில்லை என்றார். அதனைக் கேட்ட அங்குள்ள யாவரும் இது என்ன விசித்திர மொழியாக இருக்கிறதே என்றார்கள். சுவாமிகள், தேர் அடிக்குப் போய்விட்டார்கள். அந்த மடத்தில், காலையில் யாவரும் எழுந்து ஸ்நாந முதலியன முடித்துக் கொண்டு சுவாமிக ளிடம் சென்றார்கள்.

உடனே வடம் பிடித்து இழுக்கும்படி கட்டளையிட, அவ்வாறாக இழுத்துச் செல்ல, கீழை வீதிக் கோடியில் தெற்கு வீதி திரும்புகிற போது தேர் ஒரு பக்கம் சாய்ந்தது. சுவாமிகள் அங்கு இருந்து கொண்டு, மற்றவர்களைப் போய் ஆகாரம் பண்ணிக் கொண்டு இரண்டு மணிக் கெல்லாம் வந்து சேருங்க ளென்று ஆக்ஞாபித்தார். அவ்வாறே வந்து சேர்ந்தார்கள். தேர் (வடக்குத்) தெற்கு வீதி திரும்பி ஓடிக் கொண்டிருக்கும் போது, தூருவாச மகா ரிஷியின் ஒரு சிறிய ஆலயம் அங்குள்ளது. அதன் சமீபம் வருகிற போது, தேர் நின்றுவிட்டது. சுவாமிகளுடன் அங்குள்ள அனைவர்களும் வடத்தைப் பிடித்து இழுக்கத் தொடங்கி னார்கள். தேர் அசைய வில்லை. ஆனதால், சுவாமி அங்குத் தரையில் தாம் உட்கார்ந்து கொண்டு, எல்லாரையும் தேரைப் பார்த்திருங்கள் என்றது. யாவரு மிருக்கக் கால் மணி நேரம் சுவாமிகள் அசையா திருந்து எழுந்து இரு கை யும் சிரசிற் கூப்பி 'அர ஹர மகா தேவா' என்று எழுந்தார்.

உடனே, அவர் தேகம் பின்னால் சாய்ந்தது. நின்றோர் அனைவரும் சுவாமிகளைத் தாங்கிக் கொண்டார்கள். எல்லோ ரும் அவரைத் தாங்கிக் கொண்டே வடக்கு வீதியில் சுவாமி களுக் காக அமைத்திருந்த கொட்டகைக்குச் சென்று, அங் கே யிருந்த ஓர் ஆசநத்தில் வைத்தார்கள்.

உடனே சுப்பைய சுவாமிகள் முதலான சாதுக்கள் கூட்டம் திரள் திர ளாக வந்தன. சுவாமிகளை வந்து தரி சிக்க வந்தவர்களுக்கும் இடங் கொடாமல் கூட்டம் கூடி விட்டது. பின் சுப்பய்ய சுவாமிகள் முதலியவர்கள் சமாதிக் குக் குகை அமைத்தார்கள். சுவாமிகளுக்கு மற்றவர்கள் உடனே அபிஷேகந் தொடங்கினார்கள். மாலை 9 மணிக்குத் தொடங்கி மறு நாள் காலை 9 மணிக்கு அபிஷேகம் முடிந் தது. அலங்காரந் தொடங்கினார்கள். உடனே ஆலயத்தி லிருந்த ஓர் பெரிய விமாநத்தைக் கொண்டு வந்து அதன் மீது அமரச் செய்து, பல வாத்தியங்களுடன் ஊர் வலம் வந்து மாலை 5 மணிக்கு உடனே சமாதிக் காக அமைத் திருந்த குகையுள் எடுத்துச் சென்றனர். சுப்பைய சுவாமி முதலியவர்கள் எடுத்து அடக்கஞ் செய்தார்கள். ஜநங்கள் திரள் திர ளாக வந்து துக்கப்பட்டனர்.

மூன்றும் நாள் தொடங்கி, ஆலய அமைப்புக்கு அஸ்திவாரம் போட்டார்கள். சுப்பைய சுவாமிகளை அங் குள்ள செட்டியார்கள் அனைவரும் ரங்கோன் சிங்கப்பூர் முதலிய ஊர்களுக்கு உட னழைத்துச் சென்று, பணம் வசூல் செய்தனர். பின் இங்கு வந்து ஆலயத் திருப் பணியைச் செய்து முடித்தார்கள். இரண்டொரு ஆண்டு சுப்பைய சுவாமி, ஆலயத்தின் அருகிலே அமைக்கப்பட்ட மடத்தில் இருந்தார்கள். சென்னை சென்றார்கள்.

நிற்க, திருக் களராண்டவரது வைபவம் வேங்கடா சல சாமி யென்ற மகா ரத்திநத்தையும், சுப்பைய சுவாமிக ளென்னும் மதிப்பிடுதற் கரிய மணியையும், தன் முன் தோன்றச் செய்த வைபவங்களைப் பார்க்கினும் வே றென்று சொல்லவும் வேண்டுமோ?

திரு அண்ணு மலை ஈ சாங்ய மடம்,

ஸ்ரீ நடேச ஞாந தேசிகர் மாணுக்கர்,

ஸ்ரீ இராம நாத சாமிகள் எழுதியது.

ஸ்ரீ திருக் களர் ஆண்டவர்

## *திரு அவதாரச் சிறப்பு.*

---

பாரத நாடு பாக்கியம் பெற்ற நாடு, "மா முனிவோர் பலர் வாழ்ந்த, வாழ்கின்ற பொன் னுடு". " எந் நாட்டி னும் சிறந்த நன் னுடு" எனப் பெரியோர்களால் போற்றப் பெற்ற நாடு இது, "உண்மை, வெறும் புகழ்ச்சி யில்லை".

வெறும் ஜட சக்திக ளாய மா யா ஜாலங்களில் மதி மயங்கி அழிவுப் பாதையில், அறிவு செலுத்தும் விஞ்ஞாநத் துறையில், வெற்றி கண்ட தாகப் பறை சாற்றுகின்றன பல தேசங்கள்.

ஆனுல், புண்ணிய பூமி யாகிய பா ர த தேசம், ஆத் மீகத் துறையில், தன்னை அர்ப்பணித்துக் கொண்டு உலகம் முழுமைக்கும் மெய்ப் பொருள் உண்மை யுணர்த்தி மெய்ஞ் ஞாநத் துறையில் மேன்மை யுற்று விளங்குகிறது.

பிற எந் நாட்டினும் காண இயலா வகையில், ஆய் வுக்கும் எட்டாத காலந் தொடங்கி, தீர்க்க தரிசிக ளான இருடியர்களால் பாரதப் பண்பாடு உரு வாக்கப் பெற்று என்றும் குன்ருப் பெருமையுடன் விளங்கி வருகிறது.

நமது பாரதத்தின் பண்பாடு மெய்ஞ் ஞாநத்தை அடிப் படையாகக் கொண்டது. "பிரம்மம் ஒன்றே சத்யம். மற் றைய அனைத்தும் மித்தை. பரமாத்மாவும், ஜீவாத்மாவும், வெவ் வே றல்ல. இரண்டும் ஒன்றே. மாயையால் கவரப் பெற்ற ஆத்மா, தன்னை வே ருகப் பாவிக்கிறது. பிரபஞ்சத்

தில் தோற்றப்படும் வஸ்துக்கள். மெய்யல்ல. பிரபஞ்சத்தின் அநித்தியத் தன்மையை உணர்ந்து, மாயையை அகற்றி, ஆத்ம சாக்ஷாத்காரம் பெறுதலே வாழ்க்கையின் குறிக்கோள்" என்பது அத்வைத சித்தாந்தத்தின் சார மாகும்.

துரதிஷ்ட வச மாகப் பாரதத்தில், ஏற்பட்ட முறை தவறிய யுத்தங்கள் காரண மாக, அந்நிய நாட்டினருக்கு அடிமை யாக நேர்ந்ததால், மக்கள் மநம் நைந்து ஜட சக்திகளின் அற்ப வெற்றியில், பி ர மி த் து அந்நிய நாக ரீகத்தை அவலம்பிக்க லாயினர்.

"எப் பொழுது தர்மம் குறைந்து அதர்மம் அதிகரிக் கிறதோ, அப் பொழுது நான் அவதரிக்கிறேன்."

என்று பகவான் கீதையில் உபதேசித்த வண்ணம், பத் தொன்ப தாம் நூற் றுண்டின் முற் பகுதியில், பாரத தேசத் தின் பழம் பெரும் பண்பாட்டைக் காக்க, வடக்கே, இராம கிருஷ்ண பரம ஹம்ஸ தேவரும், தெற்கே, திருக் களர் ஆண்டவர் என்னும் வீர சேகர ஞாந தேசிகப் பெருமா னும் அவதரித்தனர்.

அவதார புருஷர்கள் தக்க சமயத்தில், தர்மத்தை நிலை நாட்டுதற் காகவே அவதரிக்கின்றனர். அவர்கள், தங்களை அவதார புருடர்க ளாக வெளிப்படுத்திக் கொள்வ தில்லை. பிற ம க் க ளை ப் போலவே பிறந்து, மக்களுடனேயே வாழ்ந்தும், மக்க ளிடையே தர்மத்தை வலியுறுத்துகின் றனர். "செயற்கரிய செய்வார் பெரியார்" என்றபடி, அவர் தம் செயலாலும், உபதேசத்தாலுமே, அவர்களை அவதார மூர்த்திக ளாக நாம் அறிதல் கூடும். அவர்கள், கருவிலே திரு வுடைய ராதலின், இயல் பாகவே மக்களிடத்துக் கருணை யுடைய ராய், மக்களை அற நெறியிற் செலுத்துதலில் கருத் துடையவ ராக இருப்பர்.

"எத் தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்,
முத்தர் மந மிருக்கும் மோநத்தே"

என்றபடி, உலகத்தோடு ஒட்டி யிருப்பினும், உண்மையில் ஒட்டாதவ ராகவே இருப்பர். எண்ணற்ற கருமங்கள் புரியினும் "எல்லாம் ஈசன் செயல்" என்றே செய்வர்.

தமிழகத்தின் தனிப் பெரும் ஞாந பாநு வாய் விளங்கிய கோவி லூர் ஆண்டவர் என்னும் முத்தி ராம லிங்க ஞாந தேசிக வள்ளல், தமது இளம் பிராயத்திலேயே தேவியின் திரு வருட் கடாட்சம் பெற்று, தேவி திரு நெல்லையின் திருக் கோவிலைப் புதுப்பிக்க எண்ணி, அதற் கான வரைப் படம் தயாரித்த காலத்து, உட னிருந்த நல்லான் செட்டியார் என்னும் நல் லன்பர், பெரு வியப் புற்று, "இவ் வளவு பெரிய அளவில் ஆலயம் கட்ட இந் நாளில் சாத்திய மாமோ"? என்று வினவ, நம் ஞாந வள்ளல், "கவலை வேண்டாம்; கண்டோர் வியக்கும் வண்ணம் இதனைக் கட்டி முடிக்க விரைவிலேயே ஒரு வீர மாதவன் வருவான்" என்று உத்தரம் அருளியது. பின் நிகழ விருக்கும் காரியங்களை முன்ன தாகவே குறிப்பால் உணர்த்தும் ஞாந திருஷ்டி, பூரண ஞாநம் பெற்ற புருஷோத்தமர்களுக்கு இயல்பே யன்றோ?

ஸ்வாநு பூதிச் செல்வ ரான கோவி லூர் ஆண்டவர் திரு வாக்கி லிருந்து. கோவி லூர் ஆதீநத்தில், குரு மரபு விளங்கவும், எண் ணரிய அறப் பணிகள் இனிதே நிறைவெய்தவும். விரைவிலேயே ஒரு அவதாரம் நிகழ விருக்கிறதென்பதை நிச்சய மாக உணர லாம்.

அவ் வண்ணமே, சில ஆண்டுகள் சென்ற பின்னர், (அதாவது இற்றைக்கு 112 ஆண்டுகட்கு முன்னர்) தர்மங் காத்த தந வணிகர் மரபில், அருட் பெருங் குரவர் வீர சேகர ஞாந வள்ளல் அவதரித் தருளினர்.

சோழ, பாண்டிய, நாயக்க மன்னர்களுக்குப் பின்னர், தமிழகத்தில் ஆலயத் திருப் பணிகள், வேத பாட சாலைகள், தேவாரப் பாட சாலைகள், பசு மடங்கள், நந்த வநங்கள்

முதலான தருமங்கள் ஓங்குவதற்கு வழி காட்டி ஊக்குவித்த பெருமை, நம் அவதார மூர்த்தி யான வீர சேகரப் பெருமானுக்கே உரியது.

தமது அவதார காரியம் நிறை வெய்தியதும், தமது பரு வுடல் நீத்துப், பரம் பொருளுடன் இரண் டற நிலவு நிலையினைக் குறிப்பால் உணர்த்தி, அதற் கான ஆயத்தங்கள் செய்துவைத்து, பாரிஜாத வனப் பெருமான் திருத் தேரில், ஆரோகணித்து வர, அவர் சந்நிதியிலேயே "அர ஹர மகா தேவ" என்ற நாம உச்சாரணத்துடன், மஹா நிர்வாணம் அடைந்த நிகழ்ச்சி, அவர்களின் அவதார மஹத்துவத்தை நன்கு உணர்த்துகின்றது.

மெய்ப் பொருட் காட்சி பெறுவதற்கு, கர்மம், பக்தி, ஞானம் எனப் பெறும் மூன்று வித மார்க்கங்கள் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன. அவற்றில், கர்ம மும், பக்தியும் பரம்பரா சாதநங்கள் எனவும், ஞான மார்க்கம் ஒன்றே நேர் சாதநம் எனவும், அத்வைத சாஸ்திரம் கூறும். நம் குரவர் பெருமா னுகிய வீர சேகர ஞான தேசிகர், தமது அவதார காலத்தில், பகவான் கீதையில் உபதேசித்த வண்ணம், பயனில் பற் றில்லாதவ ராய்ச் செயற்கரிய பல கருமங்கள் புரிந்தும், எந்த நிலையிலும் தவருது இறைவ னிடத்தும், குறிப் பாகத் தேவி திரு நெல்லை யம்பாளிடத்தும், பக்தி பாராட்டியும், என்றும் ஞா னா நு பூதி நிலை கலையாமல், பூரண ஞானத் திர ளாய் இருந்தபடி இருந்து, மூன்று சாதந வகைகளாலும், நமக்கு வழி காட்டி யருளியது நமது பெரும் பாக்கிய மாகும்.

திருக் களர் ஆண்டவர் சரிதம், தனிப் புத்தக மாக விரி வான முறையில் வெளியிடப் பெற் றுள்ளது. ஆகவே, இங்கு அது பற்றிக் குறிப்பிடுதல் மிகை யாம் என்று கருதி விடுக்கின்றேன்.

ஸ்ரீசற் குரு நாதன் திரு வடிகளே சரணம்.

சிதம்பரம்,
ஸ்ரீமத் மௌந சுவாமிகள் மடாலயம்,
தவத் திரு. சபா பதி சுவாமிகள், எழுதியது.

## *வேதாந்த வித்து.*

"விச்ச தின்றியே விளைவு செய்குவாய்" என்று, இறைவனைக் கூறிய மாணிக்க வாசக சுவாமிகள், தன் னிலை பற்றிக் கூறிய விடத்து, "விச்சுக் கேடு பொய்க் காகாது என்று இங்கு எனை வைத்தாய்" என்று கூறுகின்றார்கள். இதன் கருத்து, பொய் யென்னும் ஒரு பொருளுக்கு அழிவு உண்டாகாதபடி விதை முத லாக என்னை வைத்தாய் என்ப தாம். இதனால், எல்லாப் பொருள்களுமே விதையி லிருந்து தான் உண்டாகும் என்பதை தெரிவிக்கின்றார்கள்.

வேதாந்தம் என் னும் பயிர் விளைவதற்கு விதை வேண்டும் அல்லவா. அவ் விதை யாக விளங்கினவர்களே நம் வீர சேகர ஞாந தேசிகர் அவர்கள் ஆவார்கள். அவர்கள், அந் நாளில் தோன்றி நம் செந் தமிழ் நாட்டில் இட்ட வேதாந்த விதையே, இன் று வரை பயி ராகித் தழைத் திலங்குவது வெளிப்படை. (மௌ. ச.)

---

## *கருவிலே, திரு வுடைய சுவாமிகள்,*

சாதகக் குறிப்பு.

| | | | |
|---|---|---|---|
| கே | | | சந் |
| சனி | ராசிச் சக்கரம் | | வி |
| | | | கு, செ, பு, சு |
| | | | ல, ரா |

| | | | |
|---|---|---|---|
| | பு, சனி | சந் | கு |
| | நவாம்சம் | | ல, கே |
| ரா | | | |
| செ, வி | | | சு |

(சோதிடம், திரு. கு. வே. பழனியப்பன்.)

சாலிவாகந சகாப்தம் 1770, கீலக வருஷம், ஆவணி மாதம், 12-ந் தேதி, வெள்ளிக் கிழமை, அமர பக்க துவாதசி திதி $51\frac{1}{2}$, புநர் பூசம் $42\frac{1}{2}$, சித்த யோகம் $\frac{3}{4}$-க்கு மேல், விதிபாத யோகம் $54\frac{1}{2}$, அமிர்த கடிகை இவை கூடிய சுப திநத்தில் நாழிகை 7-க்கு கந்நியா லக்கிநத் தில், தாமத வேளையில், சந்திரன் கால ஓரையில், இந் நில வுலகில் தோன்றினார்கள்.

ஜந்ம லக்கிநம் கந்நி. சந்திரா லக்கிநம் மிதுநம். அம்ச லக்கிநம் கடகம். திரேக்கரண லக்கிநம் கந்நி. ஜநந காலத்தில் வந்த குரு மகா திசை வருஷம் 16-க்கு கருப்பத்தில் சென்றது போக நின்றது.

வருஷம் 10, மாதம் 4, நாள் 4, நாழிகை $8\frac{1}{4}$.

## சாதக விசேஷம்.

சந்திரா லக்கிநம், செந்ம லக்கிநம், இரண்டிற்கும் ஐந்தா மிடம் சர ராசி யாக இருப்பதால், என்றும் வற்ருத பெரும் செல்வம் இவர்கள் பால் நிலவி நிற்க விளங்கி னார்கள். ஏழா மிடத்தில் கேது இருப்பதும், பதி னென்ரு மிடத்தில் நின்ற குரு ஐந்தா மிடத்தை நோக்குவதும், இல் வாழ்க்கையும் புதல்வற் பேறு முதலியவும் இல்லாமையை உணர்த்துகின்றது.

சந்திரா லக்கிநம், செந்ம லக்கிநம் இரண்டிற்கும் பத்தாம் அதிபர்க ளாகிய குரு, புதன் இவர்களில், குரு சுப க்ஷேத்திரம் பெற்றும், புதன் சுபருடன் கூடியும், இருப்ப தோடு, மேற்படி இலக்கிநங்கட்கு ஒன்பது, பதி னென் ரும் இடங்கட்கு அதிபர்க ளாகிய சநி, செவ்வாய் சுக் கிரன் சந்திரன் இவர்களில், சநி ஆட்சி பெற்றும், செவ் வாய் சுக்கிரன் ஆட்சி பெற்ற கிரகத்தோடும், லக்கிநா திபதி யோடும், கூடியும், சந்திரன் தசம கேந்திரம் பெற்றம், இருப்பதால், பற் பல செய்தற் கரிய தூய நற் செயல்கள் செய்து கொண்டு வாழ்ந்தார்கள், என்பது புல னும்.

லக்கிந தசமாதிபதி யாகிய புதன் பனி ரெண்டா மிடத்தில், பனி ரெண்டாம் அதிபதியோடு பஞ்சமாதிபதி பார்வை யுற்றிருப்பதனுல், நிறைந்த செல்வத்திளுலும், புண்ணியச் செயல்களாலும், உண்டாகிய புகழ் மறு வின்றி நிலை பெறுவ தாயிற்று.

லக்கிநத்திற்குப் பதி னென்றில், குரு இருந்து, பஞ்சம ஸ்தாநத்தை நோக்குவதோடு, சந்தரா லக்கிநம் செந்ம லக்கிநங்கட்கு இரண்டா மிடத் ததிபர்களாகிய சந்திரன் சுப க்ஷேத்திரம் பெற்றும், சந்திரனுக்கு இரண்டில், குரு உச்சம் பெற்றும், செந்ம லக்கிநத்திற்கு இரண்டாம் அதிபதி யாகிய சுக்கிரன் பனி ரெண்டில் ஆட்சி பெற்ற சூரியனேடு கூடியும், இருப்பதால், நினைத்தவை யனைத்தையும் நினைத்த வண்ணமே நிறைவேற்றியும், சொன்ன சொற்கள், சொன்ன வாறே, நிகழ்ந்திடவும் விளங்கினுர்கள்.

வித்தியா கார னுகிய புதனும், சூரியனும், ஒரே நட்சத்திரத்தில், அதிலும் புதனுக்கு முந்தி சூரியன் நிற்பதால், பிரகாசம் பொருந்திய வித்தை யுடைய ராயும், நான் காம் இடத்து அதிபதி யாகிய குரு லக்கிநத்திற்கு பதி னென்றில் லக்கிநாதிபதி யாகிய புதனுக்கும், சூரியனுக்கும், பனி ரெண்டா மிடத்தில், உச்சம் பெற்று, ஐந்தா மிடத்தை நோக்குவதால், ஞாந நன் னெறியை தெளி வுறப் போதிக்கும் நல் லாசிரியர் ஆகவும் இயங்கினுர்கள்.

லக்கிநாதிபதி யாகிய புதனும், திருதியை அட்டமாதிபதி யாகிய செவ்வாயும் கூடி, பனி ரெண்டா மிடத்தில், ஆட்சி பெற்ற சநியால், பார்வை யுற்றிருப்பதோடு, பனி ரெண்டா மதிபதி யாகிய சூரியனும், ஆட்சி பெற் றிருப்பதால், நிறைந்த ஆயுளும், ஞாநமும் முத்திப் பேறும், இவர்களைத் தேடி வந்து அடைந்தன.

மேற் கண்ட இயற்கை ஏதுக்களும், பிறவும், கருவிலே திருவுடையார் என்பதை தெளிய உணர்த்து கின்றமை அறியக் கிடக்கின்றது. (மௌ. ச)

---

## களரின் முளைத்த செங் கரும்பு

செந் தமிழ் நாட்டில், கவிச் சக்கரவர்த்தி யெனப் போற்ற விளங்கிய நல் லாற்றூர் சிவப்பிரகாச சுவாமிகள்,

"களரின் முளைத்த செங்கரும்பு கண்ணுற் பயந்த இளங் குமரன்" என்னும் தலைப்பை யுடைய பாடலில், திருக் களரி லுள்ள பாரிஜாத வந பெருமானைக், 'களரின் முளைத்த செங் கரும்பு' என போற்றி யுள்ளார்கள். அநாதியாய் யுள்ள இறைவனை, அன்பர் கட் கருள வந்த பெற்றி நோக்கி 'முளைத்த கரும்பு' எனப் போற்றி யுள்ளார்கள்.

ஆயினும், 'களரின் முளைத்த செங் கரும்பு' என்று திருக் களர் வீர சேகரப் பெருமானைப் போற்றுவதும் சால்புடையதே யாம் எனக் கூறு கின்றோம்.

கரும்பு தானே முளைக்கும் பயி ரன்று, வேறிடத்துப் பயிராகி யிருந் ததனைக் கொண்டு வந்து நட்டுப் பயி ராக்க வேண்டும். மேலும் மேட்டுப் பாங் கான நிலத்தில் விளைவ தன்று. நீர்த் தேக்க முள்ள வயலிலும், கழனிகளி லுமே விளைவது. வீர சேகர ஞாந தேசிக ராய செங் கரும்பு புது வயலிற் றோன்றியது. மீண்டு கழனி நகர் என்று சொல் லப்படும் கோவி லூரில் கொண்டுவர, வளர்ந்து வந்தது. அது, மேலும், அன்பர்களால், திருக் களர் திருப் பணிக் கென கொண்டுவரப் பெற்ற தாயினும், திருப் பணி முதலி யவை நிறைவேறிய பின்னரும், அன்பர்கட் கருளவே திருக் களரில் நிலைபெற்று வளர்வ தாயிற்று.

இது, இங்கு வரும் மெய் யடியார்கள் அனைவருக்கும் திரு வருட் டேறலை வழங்குகின்றது மெய் யடியார்கள் பருகிக் கொண்டு, அவ் வருளிலே தேக் கெறிகின்றார்கள். ஆதலின்.

'களரின் முளைத்த செங் கரும்பு' என்னும் பெயரால், பாரிஜாத வநப் பெருமான் திரு வருள் பெற்ற வீர சேகரப் பெருமானையும், போற்றுகின்றோம். (மௌ. ச.)

---

## தன் வணம் புரியும் தத்துவ ஞானி.

காகம் கரு நிற முடைய பறவை. அது, பொன் வண்ண மாகிய ஒரு மலையைச் சாரும் போது, மலையின் பொன் வண்ண மானது, காகத்தின் மீது படுதலால், தனது கரு நிறம் முற்றும் மாறி, அம் மலையின் பொன் வண்ண மாகவே தானும் பொலிவுறும்.

"பனிமா லிமயப் பொருப்பகஞ் சேர்ந்த பொல்லாக் கருங் காக்கையும், பொன் னிறமா யிருககும் என் றிவ்வா றுரைக்கும் அன்றோ இவ் விரு நிலமே!"

என்னும் கவியாலும் இதனை நன் குணர லாம்.

நம் வீர சேகரப் பெருமானார், காக்கை யொத்த கரு நிற அஞ்ஞாந வயப்பட்ட சீவாத்துமாக்களையும், தன்னைச் சார்ந்தவுடன் அவ் வஞ்ஞாநம் ஒழியும்படி மெய்ஞ் ஞாநம் அருளித், தத்துவ விசாரத்தால், தன்னை யொத்த பொன் னாகச் செய்திடுவர் என் றறிக. (மௌ. ச.)

---

## விராக வெற்பு.

விராகம் என்பது ஆசை யின்மை எனப் பொருள் தருவ தோர் வட மொழிப் பெயர். வெற்பு எனப்படுவது

மலையை உணர்த்துவ தோர் சொல். எனவே, ஆசை யின் மை யாகிய நற் குண மாம் மலை எனத் தக்கவர், அல்லது, ஆசை யின்மையை மலை போல் உடையவர் எனப் பொருள் தந்து, ஆசை யின்மை யாகிய அருங் குணத்தைத் தன்பால் அமைந்த ஏனை நலன்கள் பலவற்றோடு அணிகல னகக் கொண் டுள்ள, வீர சேகர ஞாந தேசிகரை உருவகித் துக் கூறுவ தோர் சொற் றொட ராம்.

செந் தமிழ் நாட்டில் வேதாந்தம் என்னும் வித்தை விதைத்து, நா டெங்கும் பயி ராக்கி, வளர்த்த அரும் பெரும் சிறப்பு, கோவி லூர் மடத்திற்கே உரிய தாகும். அம் மடா லயத்தில் ஐந் தாம் குரு மூர்த்திக ளாக அமர்ந்து, சிவ நெறி வளர்த்த சீர் சால் செம்மலார், வீர சேகர ஞாந தேசிகர் அவர்கள் ஆவார்கள். ஐந்தாம் குரு முதல்வ ராய் விளங்கி, அரும் பெரும் பணிகள் ஆற்றி இருந்த இவர்கட்கு ஐம் ப தாவது குரு பூசைப் பொன் விழா நடை பெற இருக்கின் றது. இவ் விழாவில் மற்ற ஆண்டுகளைக் காட்டிலும் விரி வான முறையில் வழிபா டாற்றிப் பாராட்டிப் போற்று வதே யன்றி, அவர் தம் அருங் குண நலன்களை எடுத்தியம்பு வதும் சிறப் புடைச் செயலா மன்றே. ஆதலின், அப் பெரி யார்பால் அமைந்து விளங்கிய உயர் நலன்கள் அனைத்தை யும் ஒருங்கே முற்றவும் எடுத் தியம் புவ தென் று கொள் ளின், அவர்களோடு சமகாலத்து உடனிருந்துகண்டாருமே, அவர் தம் பெற்றிகள் முற்றவும் எடுத் தியம்புதல் ஏலாத தாம். எனின், அவர்கட்குப் பிற் காலத்தவ ராகிய எம்ம னோரால் எவ் வாறியலும். இயலாததே யாயினும், பெரி யோர்கள் வாய்க் கேட்டும், நூல்களிற் கற்றும், அறிந்திருப் பவைகளுள், ஒன்றையேனும் விதந் தெடுத்துச் சிறப்பித் தல் சாலு மாதலின், அவர்கள்பால் அமைந்த அருங் குணங்கள் பலவற்றுள், ஒன் றாய விராகம் (ஆசை யின்மை) என்னும் ஒன்றே பற்றி இயன்ற வளவு எடுத்து விளக்கும் குறிக் கோளுடன், 'விராக வெற்' பென்னும் தலைப் பெயர் தந்து இக் கட்டுரையைத் தொடங்குகின்றோம்.

கருணை நிதி என்னும் காரணப் பெயருடன் கோவிலூர் மடத்தில் அருட் குரவ ராய் இலகிய, சிதம்பர ஞாந தேசிக ரவர்கள், இன்றைக்கு, ஏறக் குறைய 85 ஆண்டுகட்கு முன், அதாவது, தாது ஆண்டு ஆடித் திங்கள் 4ம் நாள் ரோகிணி யன்று, விதேக கைவல்யம் பெற்றுர்கள். அவர்கட்கு பின், காரைக் குடிச் சுவாமிகள் என்னும் இராம சாமி ஞாந தேசிகர் அவர்கள், மடலயத் தலைமையை ஏற்றுப் பரிபாலநம் செய்து வந்தார்கள். அப் போது, கருணை நிதியின் மாணவர் குழாங்களுட் டலை சிறந்து விளங்கினமை காரண மாக 'பெரிய சுவாமிகள்' என்னும் பெயரால் அன்பர்கள் அனைவரா லும், ஒரு முக மாகப் போற்றப் பெற்று, அப் பெயராலேயே வழங்கப் பெற்றும் விளங்கிய பெருந் தகையார், பொன் னம்பலசுவாமிகள், இவர்கள், தம் குரு மூர்த்திகளின் விதேக கைவல்லியத்துக்குப் பின்னர், கோவிலூர் மடத்தை விட்டுப் புறப்பட்டுத், திரு மழ பாடி, புன வாசல் முதலிய தலங்களிற், சில காலம் வசித் திருந்து, பின்னர், தில்லைப் பதியை அடைந்து, அங் குள்ள மௌந தேசிகர் மடத்தில், பல, ஆண்டுகள் வதிந்து, தம்மை யடைந்த மாணவர்கட்கு, நூல்கள் வாயி லாக உண்மைப் பொருளை உணர்த்தி வந்தார்கள். அதன் பின்னரே, அன்பர்களுட் சிலர், சுவாமிகட் கெனத் தனித்த தோர் மட மியற்ற வேண்டும் என்று அவாக் கொண்டு, அவர்களுட் செல்வராய சிலர், அதற்குப் பொருளும் கொடுக்க, அது கொண்டு சிறந்த தொரு மட மியற்றித், தம் ஆசிரியர் பாதுகையை, அம் மடாலயத்தில் வழிபாட்டிற் காக அமைத்தன்மையே யன்றி, அன்னார் பெய்ராலேயே, 'கோவிலூர் சிதம்பர சுவாமிகள் மடம்' என்னும் பொருளில், கோ-சித மடம் என்று பெயர் அமைத்துத், தம் ஆசிரியர் தாநத்து அஞ்ஞான்றிருந்த இராம சாமி ஞாந தேசிகர் அவர்களை அழைப்பித்து, அவர்களைக் கொண்டே மடாலயப் பிரவேச விழாவும் சுபாநு ஆண்டு ஆனித் திங்கள் நாள் நிகழ்த்து வித்தார்கள். அது, இப் போது, பொன் னம்பல சுவாமிகள் மடம்

என்னும் பெயரால் தில்லைப் பதிக் கோர் அணி கல னாக விளங்கிக் கொண்டிருக்கிறது. இது நிற்க.

தில்லைப் பதியிலே, பொன் னம்பல ஞான தேசிகர் வதிந்த காலத்தே, திருக் களர் வீர சேகர ஞான தேசிகரும், அத் தில்லைப் பதியிலேயே மௌன தேசிகர் மடத்திலே தனி யிடத்திற் றங்கி யிருந்து, தவம் இயற்றியும், அம்பலக் கூத்தரைக் கண்டு வழி பா டாற்றியும், வந் தமையே யன்றி, "நோன்பிற்கு ஒன் றின்மை இயல்பாகும் அஃதுடைமை பெயர்த்து மயலாகும்" என்னும் திரு வள்ளுவர் திரு வாக்கைத் தேர்ந்தவ ராயினமையின், அவ் வாறே தெருக் களிற் சென்று, ஐயம் ஏற் றுண்பதற் கென்று, ஒரு பொரு ளையும் உதவி யாகக் கொள்ளாமல், தம் திருக் கரங்களி லேயே, ஐயம் ஏற் றுண்ணும் நியமத்துடனும் இருந்து வந் தார்கள். எனின், "மற்றும் தொடர்ப்பா டெவன் கொல் பிறப்பறுக்கல், உற்றார்க்கு உ ட ம் பு மிகை" என்னும் தமிழ் வேதத்திற்கு இலக்கிய மாக விளங்கிய விராக புருடர் இவரே யாம், என்பதனை இது கொண்டே யுணர லாம்.

இவர்கள் அது காலை

"எல்லோர்க்கும் காலன் துறவீவன் ஈயாமுன்,
நல்லோர் துறப்பரென் றுந்தீபற." என் றுங்கு,

நல்லோ ராகவும்.

"நரை வரும் என் றெண்ணி நல்லறி வாளர்,
குழவி யிடத்தே துறந்தார்."

என்பதற் கியைய நல் லறிவாள ராகவும், இருந்தமை யின், ஓவியத்திலும், மங்கையர் உருவை நோக்காமையும், பிற பொருள் எதையும் விரும்பாமையும், ஆகிய கடுந் துற வுள்ளம் பெற் றிருந்தமையே யன்றி, சி க் க ல் பொருள் வைத்த சேரி மடத்தின் தலைவ ராக விருந்த, சட்டை யப்ப சுவாமிகள்பால், விதிப்படி சந்நியாச தீக்ஷை பெற்றுக் கல் லாடை தரித்துத் துறவுக் கோலம் பூண்டு கோவி லூர்

மடாலயத்தின் மரபுப்படி நாநா சிவ வாதக் கட்டளை முதல் ஞான வாசிட்டம் வரை யுள்ள ஞான நூல்கள், பதி னுறை யும், முறைப்படி கருணு நிதியவர்கள்பால் பாடங் கேட் டுச் சிந்தித்து அநுபவ நிலை யுடையவ ராகவும், விளங்கினுர் கள்.

துறவு நெறியினைப் பற் பலரும், மேற் கொண்டு வாழ்ந்து வந்தாலும், அவர்கள், உள்ளத்திலே பற் பல வித மான ஆசை நோய் உந்த, அவர்கள் கொண்ட விராகத் தன்மையானது, மயான வைராக்கியம் பிரசவ வைராக்கியம் என்ருங்கு, சிறிது சிறிதே முழுதும் நழுவுத லடைய விடயங் களிற் பேராசையாளராய் அல்லலுற் றுழல்வதனை இன்றும் காண்கின்றேம். அன்றும், இவ் வாறே, அல்லலிற்பட்ட வர லாறுகளைக் கேட்கின்றேம். அவ் வா றன்றி, உண்மை யில் மாணிக்க வாசகப் பெருமானுக்கு, குரு வருள் கை வரப் பெற்ற வுடனே, எவ் வாறு, இறைவன் திரு வருளை மேலும் மேலும் பெற வேண்டும் என்று, ஆசை யுந்த உலகப் பொருள்கள் அனைத்தினும் உவர்ப்பு தோன்றிற்றே? அவ் வாறே, நம் வீர சேகரப் பெருமானுர்க்கும் உவர்ப்புத் தோன்றலின், புறப் பற்று, அகப் பற்று என்னும் இரண்டு வித பற்றுக்களையுமே, முற்றவும் விட்டு உலகினையே துச்சம் என எண்ணி வாழ்ந்து வர லானுர்கள் என்பது வெள் ளிடை மலை யாம். இதனுல், வீர சேகரனுரிடத்து, நாம் காணும் சிறந்த பண்பாடு, 'அவா வின்மை' என்னும் சிறந்த அணி கலன் பூண்டு விளங்கியமையே யாம் என்க.

அவ் வாருயின், இவ் வுலக போகங்களைத் துறந்து, தனியே வநம் புகுந்து தவ நிலை யை மேற்கோடலே கடனுக இருக்கவும், அவ் வா றின்றி, உடலுக்கும், உணர் வுக்கும், மேலும், மேலும், அமைதியற்ற நிலையை உண் டாக்கும் பற் பல விவகார நிலை யுடைய பெரிய தொரு மடாலயத்திற்குத் தலைமையை மேற் கொண்டமையே யன்றி, ஆலயத் திருப் பணி, திரு விழா, கும்பாபிஷேகம்

முதலிய வாய பல வித மான அமைதிக்குப் புறம் பான செயல்களிற் றலைப்பட்டும் விளங்கினார்கள் என்றும், அறி யக் கிடத்தலின், மேற் கூறியவை அனைத்தும், புனைந் துரை எனவே கொண்டு ஏற்றுக் கோடற் கின்றும் பிற எனின்? அற் றன்று.

விராகத் தன்மை இயல்பாகவே அ வ ர் க ள் பா ல் அமைந்து விளங்கிற்று. மடாலயத் தலைமை ஏற்கின், பற் பல பற்றுக்கள் தம்மைப் பற்றும் என் றஞ்சியே வெளியூர் சென்று மறைந்தும் இருந்தனர். தமக்கு முன்னே உள்ள பெரியோர்க ளாகிய, பொன் னம்பல சுவாமிகள் முத லாய பெரியோர்களது திரு வுள்ளக் கருத்திற்கு மாறுபட்டு நடக்க இயலாமையும், அன்பர்கள் வேண்டுகோளுக்கு இணங்கியுமே, பின்னர்த் தலைமையை ஏற்றுக் கொள்ள நேர்ந்தது என்க. இதனை, வீர சேகர ஞான தேசிகர் சரித் திரம் சந்நியாச காண்டம் 13-வது அத்தியாயத்தில்,

"கோவிலூர் மடாலயத்திற்குத் தலைவரா யி ரு ந் த காரைக் குடி இராம சாமி ஞான தேசிகர் அவர்கள் அங்கு விதேக கைவல்லியம் அடைந்ததைக் கேள்வி யுற்று, பொன் னம்பல ஞான தேசிகர் திரு வாக்கின்கண்ணே, வேத வாணி விண்ணில் எழுந்தாற் போன்று, இனி மேல் "நமது குரு ஸ்தான மாகிய கோவிலூர் வேதாந்த மடாலயத்தைப் பாதுகாத்து வரத் தக்கவர், வீர முனிவரைத் தவிர்த்து, வேறு யாவ ருள்ளார்." என்னும் திரு வாக் கெழுந்தது. அம் மொழியைச் செவி மடுத்த, நமது வீர சேகரப் பெருமா னார், ஈண் டிருக்கின் பெரியா ரருண் மொழியை ஒருக் காலும் மறுக்க முடியாது. அதைக் கொள்ளினோ, நமது வேண்டாமைச் செல்வங் குறைவதுடன், பொன் விலங் கிட்டுக் கொண்ட தொக்கும்...... எனச் சிந்தித்து...... அன்று நீசிக்கண்ணேயே வளவ னூர் உண் முக மூர்த்தி யாகிய சண் முக ஞான தேசிகர் மடத்திற் சென்று ஒளிந்து கொண்டனர்" என்னும் சரிதப் பகுதியானும்,

14-வது அத்தியாயம்,

வீர சேகரனுர், "பொருந்தி வாழிட மொன்ருகில் பொருந்திடும் பற்று...... என்னும் அறிஞருரைக் கொப்பப் பயந்து, சென்றதை நன் குணர்ந்திருந்தும், தம் குரு ஸ்தாநத்தி லுள்ள பெரும் அபிமாநத்தால் சில அடியார்களையும், குமரப் பையா என்னும் வைசியப் பெரியாரையும், வளவ னூரில், இவ ரிருப்பது தெரிந்து, அங் கனுப்பி, பார கோர சம்சார சாகரத்தை தாண்டுவதில், தீர ஞாந சூர வீர சேகரரை ஒருதலையா யுடன் அழைத்து வரச் செய்தனர்." என்னும் பகுதியாலும் அறிக.

இன்னும், 15-வது அத்தியாயம்.

"வீர சேகரனுர், பொன் னம்பல ஞாந தேசிகரிடம் மடாலயத் தலைமை வகிக்கச் சொல்லும் விஷயத்தில், பிரார்த்தித்து விடை கேட்டனர். அதற்கு அவர், அறி வொழுக்கங்களிற் சிறந்த அன்புடையீர்!...... எம்மை யறியாது நம் குரு ஸ்தாநத்தில் உள்ள அபிமாந மானது, இங்ஙனம் பிரேரிக்கின்றது. அஃதன்றியும், நாம் கோவி லூர் ஆதீநத்தைக் கொண்டே கடைத் தேறினேம். அதை நும்மைப் போல, முன் னுள்ள பெரியார்களும் பேணுது கை விடின், நாம் தேற நல் வழி கிட்டலும் அரி தன்ரு,

"ஞாநிகள் விவகாரம் உலகுபகாரம் அன்ரு!"

என்னும் இவை முதலிய வாக்கியங்களால், பொன் னம்பல ஞாந தேசிக சுவாமிகள், கோவிலூர் மடாலய குரு ஸ்தாநத்தினை வகிக்கும்படி கூறினுர்கள்" என்று அறியப்படும் பகுதியும்,

"வைசியப் பெரியா ராகிய குமரப் பையா முதலியோர்களும், அடியவர்களும், மேற் கண்ட முறையில் பல வாருகப் பிரார்த்தித்து வேண்டினுர்கள்" என்னும் சரிதப் பகுதியும், இவர்கட்கு தலைமை ஏற்பதன்கண் விருப்பம்

இன்மையையும், பெரியார்களுக்கும், ஏனைய அடியவர்களுக்குமே, இவ் வாருகிய எண்ணம் இருந்து மேற்கொள்ளச் செய்தார்கள் என்பதனையும், புலப்படுத்துகின்றன. அவர் தம், விராகத் தன்மையை இதனுனும், பொது வகையான் ஒரு வாறு உணர லாம். சிறப்பு வகையான் உணர்தற்கு இன்னும் சில ஏதுக்கள் புலப்படக் காட்டுதும். பெரியார்களும், அடியவர்களும், பல வாறு வேண்டியும், இவர்கள் மநம் தலைமைப் பதவி ஏற்பதற்கு ஒருப்படாது கிலேச முற் றிருந்தது என்பதனை,

16-வது அத்தியாயம்

"சிறிது மநங் கலங்கி விவகாரம் என்பதே இராகத் துவேஷ முதலியவற்றிற்கு நிலைக்கள னுனது. அக்கினிக்கு சூடு இயற்கையா மாறு, 'விவகாரத்திற்கு, விட்சேபம் இயற்கை யன்ருே' என எண்ணி கிலேச முற்றிருப்ப" என்பதனுல், அறியக் கிடப்பதுடன், அது காலையும், ஒருப் படாமலே இருந்தமையும் விளக்குகிறது. அதன் பின், இவர்கள் மநம் நிவிர்த்தி மார்க்கத்திலேயே செல்லுவதால் எவ் விதத்திலும் மடாலயத் தலைமையை இவர்பால் ஒப்பு விக்க இயலா தென்ற முடிவுக்கு வந்து, அவர்களை, எவ் விதத்திலும் ஏற்றுக்கொள்ளச் செய்யவேண்டும் என்னும் நினைவில், மடாலய விவகாரம் அனைத்தையும் தாமே நடத் திக்கொள்வ தாகவும், ஆசிரியத் தாநத்தில் இருந்து பாடம் மாத்திரம் சொல்லிக்கொண் டிருந்தால், போதும் என்றும், முடி வாகக் கூறிய பின்னரே, மடாலயத் தலைமையை ஏற்றுக் கொள்ள ஒருப்பட்டிருக்கிருர்கள். இதனை,

"வீர முநிவ! அங்ஙனம் எண்ணுவீரேல், அந்த மடாலயத்தின் விவகாரங்கள் அனைத்தையும் யாமே வகித்துக் கொள்வோம். நீவிர் அங்கு வந்து அடையும் பக்குவிகட்கு, விதி வழி வேதாந்தப் பாடம் மாத்திரம் ஓதுவித்துக் கொண்டு, ஆசாரிய ஸ்தாநத்தில் இருக்கினும் போதும்" என்று கூறிய தாக வரும் 16-வது அத்தியாயத்தி லுள்ள சரிதப் பகுதி நமக்கு விளக்குகின்றது.

இவ்வாறு, தடை செய்ய இயலாது மடாலயத் தலைமையை ஏற்றுக் கொண்டு மிக விரிவாய விவகார நிலையிலிருந்து மடாலய நிருவாகங்களிலும், பிற செயல்களிலும், ஈடுபட்டிருப்பினும், சிறிது சலநமும், எள்ளளவு பற்றும் இன்றியே, வாழ்ந்து வந்துள்ளார்கள் என்பதனை,

33வது அத்தியாயம்,

“இங்ஙனம் ஞான வேந்தனாகிய சநகன் போன்று விவகார தசைக்கண்ணும், பிரம நிட்டையுடையராகிய முநிவராய், விவகார வேளையெல்லாம் சமாதி பெற்று ஞானாசார்ய நவரத்திந மாய் விளங்கி” என்பதனாலறியலாம். இது காறும் நூல்களிற் கூறப்படும் சிற் சில வரலாற்று ஏதுக்களையே ஆதாரமாகக் கொண்டு வீர சேகர ஞான தேசிகர்பால் விளங்கிய விராகத் தன்மையை ஒரு சிறிது எடுத்து விளக்கினும். நூல்களில் ஆங்காங்குக் காணப்படும் பிற ஏதுக்களாலும், சுவாமிகள் உடனிருந்து கண்ட பெரியவர்கள் கூற்றுக்களாலும், அவர்கள்பால் அமைந்த விராகத் தன்மையினை விரிவாக அறிவார்களாக. (மௌ. ச.)

---

ஸ்ரீ நடேச ஞான தேசிகர் மாணாக்கர்,

காளையார் கோவில், கா. செ. மடம்,

*அருணாசல சாமிகள் எழுதியது.*

மலைர்தலை யுலகிற் றலை சிறந்து விளங்கும் பாண்டிநன்னாட்டில், சாக்கை என்னும் தலத்தை யண்மித் தாய புதுவயல் என்னும் நகரத்தில், நாட்டுக் கோட்டை நகர வைசிய சமுகத்தில், அருணாசலஞ் செட்டியாரும், உமையாளாச்சியும் செய்த தவப் பயனா யவதரித்து, வீரப்பன் என்னும் நாமம் இடப் பெற்று, பருவத்திற் குரிய செயல்களை மறந்து யாவரும் வியந்தோதும்படி சிவ பக்தி அடியார் பக்தி முதலிய சிவ புண்ணியங்களிற் பற்றுடையவராய் வாழ்ந்து வந்தனர். எவ்வாறு வயதிற் றம்முடைய குலத்

தொழில் பயில்வான், திரு நெல் வேலி யடைந்து, பயின்று வருங்கால், தொழிலில் மநஞ் செல்லாது, நல்லோர் சேர்க்கை ஆலய தெரிசநம் முதலிய நன் னெறிகளில் மநஞ் செல்லப் பெற்றவ ராய் பொய் யுல கியலிற் பற்றுத லொழித்து, திரும்பிய நோக்குடைய வராய் புது வயல் அடைந்து, பொியோர்பால் சென்று, நல் வழி யெய்த வேண்டு மென்னும் பெரு விருப் புடையராய் கோயி லூர் மடத்தில் குரு மூர்த்த மாக வெழுந்தருளி யிருந்த கருணை நிதி யென்னும் காரணப் பெயர் பூண்ட, ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக சுவாமிகளைக் குருவா யடைந்து, ஆத்தம் முதலிய பணிவிடைகளைச் சிரத்தையோடு செய்து கொண்டு, ஆசிரியரின் ஆணைப்படி வேதாந்த சாத்திரங்களைக் குறை வறப் பயின்று, சாந்தி பாட மாகிய ஸ்ரீ ஞாந வாசிட்ட பாடம் பூர்த்தி யானவுடன் மநோ சாந்தியின் நிமித்தம் கரதல பிச்சைஏற்று, தலங்கள்தோறும் சஞ்சரித்து, சமாதி யப்பியாசஞ் செய்து கொண்டு, சிற் சபைக் கூத்தன் றிரு நடம் புரியும் சிதம்பரத்தில், சில நாட்கள் தங்கி, இரை யுணர் வற்று, இறை யுணர் வுற்று, ஞாந சமாதியில் இருந்து வந்தனர். அந்நாள் தங் குரவன் விதேக முத்தி யடைய, இவரை அந்த மடத்தின் குரு ஸ்தாநத்தில் ஆசிரிய ராக வேண்டு மென்று பலர் விரும்பியும். மநம் இயை யாதது கண்டு, உடன் பயின்ற முன்னோ ராகிய சிதம்பரம் பொன் னம்பல சுவாமிகளிடம் தலை யன்பு பூண்டவ ராதலின், அன்னார் வற்புறுத்தலுக் கிணங்கி, கோவிலூரடைந்து குரு ஸ்தாநத்தைச் செவ்வனே பரிபாலித்து அடியவர்க் கன்னையாய் அறத்திற் கணி கல னாய் துறவிற் றாய னாய் மெய் நெறி பிறழாது வதிந்து, கொற்ற வா ளீசர் திரு நெல்லை நாயகி ஆலயம், திருக் குள முதலிய திருப் பணிகளை பூர்த்தி செய்து, பெரும் பொருட் செலவிற் கும்பாபிடேகம் செய்வித்தும், நகரத்தார்களைக் கொண்டு அநேக சிவாலயங் கள் வேத பாடசாலைகள் தேவார பாட சாலைகள் சத்திரம் குரு பூசை மடங்கள் நந்தந வநங்கள் பசு மடங்கள் முதலியன செய்வித்தும், தாம் வதியும் கோவிலூர்

மடத்தில் பிரம சபை கைலாசக் கொட்டகை பந்திக் கட்டுகள் பசு மடம் முதலியன கண்டவர் வியந்து கவி னுறச் செய்வித்தும், நித்தியம் சிரவணஞ் செய்யும் சாதுக் கள் நூறு பேருக்கு மேல் உண்டி உறையுள் உடை யளித்தும், ஆந்மோபதேசம் செய்தும், கோயிலூர் மடத்தை மகோந்நத நிலையிற் றிகழ் வித்தனர். அன் றுள் பூவ னூர். ராசு முதலியார் தூருவாசருக்கு முத்தி யளித்த தல மாகிய திருக் களர் என்னும் க்ஷேத்திரத்தி லுள்ள பாரி சாதவநேசுவரர் கோவில் சில முற்றிருப்பதைப் புதுக்கித் திருப் பணி செய்து தரவேண்டும் மென்று விண்ணப்பிக்க, தமது உபாசநா மூர்த்தியின் திரு வருட் டிறத்தை மந துட் கொண்டு, அவ் வாறே செய்வோ மென்று வாக் களித்து, நன் றுளில், திருக் களர் சென்று, திருப் பணி தொடங்கி, சுமார் மூன்று லக்ஷ ரூபாய் செலவிற் றிருப் பணி செய்து, ஆகமக் கிரமந் தவறுது பெரும் பொருட் செலவில், குட முழுக் காட்டுவித்தனர். உடனே பஞ்ச ரதங்கள் செய்வித்து, பிரமோத்ஸவம் நடத்த வேண்டு மென்று திரு வுளங் கொண்டு, தளரா முயற்சியோடு வேலை தொடங்கி, பத்துத் திங்களுக்குள் பஞ்ச ரதங்கள் வாகநங் கள் தேர்ச் சிலைகள் எடுபிடிகள் முதலிய உத்ஸவ சாமான் கள் அனைத்தும் செய்வித்து உத்ஸவ மாரம்பித்து, ஒன்ப தாம் நாள் ரதம் பிரதக்ஷணம் வரும் பொழுது, சக்கரங்கள் மணலில் பதிந்து தேர் நின்று விட்டது. மறு நாள் காலை தேர் வடம் பிடித்து, தெற்கு ரத வீதியில், ஸ்ரீமத் நட ராஜப் பெருமான் தூருவாசருக்கு முத்தி கொடுத்த விடத் துற்ற போது, ஆநந்தக் கூத்தன் சந்நிதாநத்தில், "அர ஹர மகா தேவ" என்னும் சத்தத்தோடு ஆநந்தக் கூத் தாடி ஆநந்தக் கூத்தன் அருள்த் திற மெய்தினர்கள்.

வீரேசன் திரு வடி நீ டூழி வாழ்க.

---

ஸ்ரீ வீர, சுப்பய்ய ஞான தேசிக சுவாமிகள் மாணுக்கர்,
திரு வாரூர் தக்ஷிணுமூர்த்தி சுவாமிகள் மடம்,
ஸ்ரீ சண்முகாநந்த சுவாமிகள் எழுதியது.

## திருக் களர் ஆண்டவ ரென்னும் வீர சேகர ஞான தேசிக சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்.

---

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க, நல்லார் சொற் கேட்பதுவு நன்றே நல்லார், குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ, டிணங்கியி ருப்பதுவு நன்று" என்று கூறியிருக்கின்றமையின், பெரியாரைக் காண்டல், அவர் சொற் கேட்டல், அவர் குணங் கூறல், அவருடன் சேர்ந் திருத்தல், என்னும் நான்கும் மோக்ஷ சாதநம், எனக் கரு தப்படுகின்றது. 'ஞாநியின் புகழைக் கூறுவோர் புண்ணி யத்தினை அடைகின்றனர்" எனக் கூறப்படுதலினுலும், "தெரிந்திடின் சற்சீடன் அவன் அருளைத் தேசங் குலவ வளர்ப்போன்" எனக் கூறப் படுதலினுலும், குருவின் பெருமையினை மாணுக்கன் கூற வேண்டுவது அவசிய மாம்.

கலியுகாதி இரண் டாயிரம் வருஷத்திற்குப் பின் சிவ பெருமான் கலையே, அத்வைத மதத்தினைச் சீர் திருத்தம் செய்வதற் காக, மலையாள நாட்டில், கா லடி என்னும் கிராமத்தில், சங்கரர் என்னும் பெயருடன், கலியுகாதி 3058-க்குச் சரியான ஈசுவர வருஷம் வைகாசி மாதம் சுக் கில பக்ஷ பஞ்சமியில் அவதரித்து முப் பத் திரண்டு வருடம் இவ் வுலகில் சஞ்சரித்துத் தாம் செய்யத் தக்க யாவற்றையும் செய்து, தமக்குப் பின் பரம்பரை யாக இருந்து நடாத்தி வருவதற்குப் பத்ம பாதாசார்யர், சுரேசுவராசார்யர், தோடகாசார்யர், அஸ்தாமலகாசார்யர், என்னும் சிஷ்யர்

களையும் நான்கு திசையிலும் இருக்குமாறு ஆஞ்ஞாபித்து, அநேக கிரந்தங்களை யியற்றி வைத்துக் கைலாயத்திற் கெழுந்தருளினர்.

அவர்கள் பரம்பரையில், சிக்கல் பொருள் வைத்த சேரியில், அவதரித்த, உகந்த லிங்க ஞான தேசிக சுவாமிகள் ஸ்ரீ ஞ்ஞள் வேதாந்த போதகரா யிருந்து, தமக்குப் பின் பிரஹ்ம வித்தியா பரம்பரையை அநுஷ்டிக்கத் தெற்கே கோவிலூரில் முத்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிகளை இருக்குமாறு ஆஞ்ஞாபித்தார்கள். அதன் பின், துறவாண்டவர் என்னும் அருணசல ஞான தேசிக சுவாமிகளும். அதன் பின், சிதம்பர ஞான தேசிக சுவாமிகளும். அதன் பின், இராம சாமி ஞான தேசிக சுவாமிகளும். அதன் பின், புது வயலில் கலி 4949-க்குச் சரியான கீலக வருஷம் ஆவணி மாதம் 12௳ வெள்ளிக் கிழமை வீர சேகர ஞான தேசிக சுவாமிகள் அவதரித்துத், தமது 16-வது வய தாகிய ரத்தாக்ஷி வருடம் கோவிலூரில் சிதம்பர ஞான தேசிக சுவாமிகளைக் குரு வாக வடைந்து, சாஸ்திராப்யாசம் செய்து, தமது 35-வது வய தாகிய சுபாநு வருஷம் மார்கழி மாதம் வரை பல ஸ்தல யாத்திரை செய்து, தியாகபரராய் சுகரைப் போன்ற வைராக முடையரா யிருந்து, கோவிலூர் முத்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிகளின் சத்ய வாக்கின்படியும், சிதம்பர ஞான தேசிக சுவாமிகளின் சத்ய சங்கற்பப் படியும், இராம சாமி ஞான தேசிக சுவாமிகளின் அந்திய கால சங்கற்பப்படியும், சிதம்பரம் பொன் னம்பல சாமிகள் அன்புடன் கூறிய வார்த்தையை, அன்புடன் ஏற்றுக் கொண்டு, சுபாநு வருஷம் மார்கழி மாதம் 6௳ புதன் கிழமை கோவிலூர் மடாலயத் தலைமை பூண்டு, தமது அறுபத்து இரண்டே முக்கால் வய தாகிய விரோதி கிருது வருஷம் வைகாசி மாதம் 27௳ வெள்ளிக் கிழமை வரை இருந்து, கோவிலூரில் பல ஆலயங்களையும், திருக் களரில் பல ஆலயங்களையும் அமைத்து, கோவிலூரில் சிவாலய கும்பாபிஷேகம். ஆண்டவர் கருணை நிதி ஆலய கும்பாபி

ஷேகம், திருக் களர்க் கும்பாபிஷேகம் சிக்கல் பொருள் வைத்த சேரி உகந்த லிங்க ஞான தேசிகர் ஆலய கும்பாபிஷேகம், களத் தூர் ஆலய கும்பாபிஷேகம், ஓலைக் குடி என்னும் கிராமத்தில் மடம், நெற் களஞ்சியம் முதலிய பலவற்றையும் செய்தும், பூலோகத்தில் உள்ள ஆலயங்கள் எல்லாவற்றிலும் நடக்கும் கும்பாபிஷேகங்களைத் தரிசித்தும், பல க்ஷேத்திரம் சென்று, நான்கு பாட சாலை அறுபான் மூவர் மடம், பசுச் சாலை அந்த சத்திரம், நந்த வனம், ஆலயப் பணி முதலியவற்றைப் பிற தனவந்தரைக் கொண்டு எல்லை யின்றி எண் ணிலாது செய்வித்தும், மாணுக்கர் பல்லாயிரவர்க்கும் வேதாந்த சாஸ்திர உபதேசம் பிரதிதினமும் செய்து, ஆறு முறை வாசிட்ட பாடம் உபதேசித்தும், கோவி லூர்த் திரு நெல்லை யம்பாள் ஆலயம் கருங்கல்லால் இயற்றுவதற்குப் பிரித் திருந்து வேலை நடவாது தயங்கும் சமயம், திரு நெல்லை யம்பாள் தியானத்தில் வந்து. எடுத்த காரியங்கள் யாவும் நினைப்பின் வண்ணம் தடையின்றி முடிவு பெறும்; இனி எந்தக் காரியத்தினையும் ஆரம்பிக்கலாம் என்று ஆசீர்வதித் தநுகிரகித்ததனைப் பெற்றும், நினைத்த வண்ணம் சத்காரியங்கள் யாவற்றையு முட் டின்றி முடித்தும், இன்னும், அற்புதத் திரு விளையாடல் பலவற்றைச் செய்து, யாவரும் பின்னரும் உணரும்படி காட்டியும், திருக் களரில் கலி 5012-க்குச் சரியான விரோதிகிருது வருஷம் வைகாசி மாதம் 27உ வெள்ளிக் கிழமை சுக்ல பக்ஷம் திரயோதசி திதி விசாக நக்ஷத்திரத்தில் பகல் 11மணிக்குத் தெற்கு வீதியில் தேரின் முன் பாகக் கடவுள் எழுந்தருளியிருக்க, நட ராஜாவின் சந்நிதியில் மகா தேவ என்னும் மந்திர உச்சாரணத்தோடு விதேக கைவல்யம் அடைந்தனர்.

வீர சேகரன் விரை கழல் சரணம்.

---




சங்கேந்தி,

கு. க. ஸ்ரீ சதா சிவ அடிகளார் எழுதியது

திரு வளரும் சோழ நாட்டுத் திருக் களரை உருக் கிளரச் செய்த தவப் பெருமான் வீர சேகர ஞான தேசிக சுவாமிகள். மக்க ளாகிய நம்மை உய்விப்பான் வேண்டி உருவத் திரு மேனி தாங்கிய இறைவனே யாவர். பரம் பொருளே தனது பூரண வியல்பை உணர்த்தும் பொருட்டு ஞானாசிரிய னாக வருகின்ற எல்லையில் மானுடச் சட்டை சாத்தி நம்மனோரைப் போல், ஊண், உறக்கம், இன்ப துன்பம், பேர், ஊர் ஆதி ஒவ்விட வருவது இன்றியமையாத தாகின்றது. இவ்வுண்மை,

"காணரிய அல்லவெல்லாந் தானே கட்டுக் கட்டாக விளையுமதைக் கட்டோ டேதான், வீணினிற்கற் பூரமலை படுதீப் பட்ட விந்தையெனக் காணவொரு விவேகங் காட்ட, ஊணுறக்கம் இன்பதுன்பம் பேரு ராதி ஒவ் விடவும் எனைப்போல உருவங் காட்டிக், கோணறவோர் மான்காட்டி மானை யீர்க்குங் கொள்கையென அருண் மௌன குருவாய் வந்து," என்ற தாயு மான சுவாமிகள் திரு வாக்கா னுணர லாகும். அம் முறையே தோன்றிய நம் வீரசேகர ஞான தேசிக சுவாமிகட்கு மாணவர் பல ராவர் அப் பலருள், யா னறிந்த மும் மணிகளைப் பற்றிக் கூற வேண்டியவ னாகின்றேன். ஒருவர் வேத மொழி பெயர்ப் பாசிரியரும், உரை நடை, பா நடையில் வல்ல வரு மாகிய சிவானந்த சுவாமிகள். இரண்டா மவர், சென்னையில், ஆநந்தாசிரமத்தி லமர்ந்து ஆத்ம புராணம் முதலிய நூற்களை இயற்றிய சீர்சால் பெரியார் சுப்பையா சுவாமிகள் ஆவர். இவர் தம் மாணவர் தான், இன்று திரு வாரூர் மடப் புரம் தட்சிணாமூர்த்தி மடாலய அதிப ராக விருந்து செவ்வனே பரிபாலநம் நடத்தி வருபவர். மூன்றா மவர். இன்று நம் கண் முன்னே வயதின் முதிர்ந்த நிலையி

லும், கூறு சுறுப்பிலும், செயலிலும், இளைஞராகவே இருந்து, தம் குரு மணி வீர சேகர ஞான தேசிக சுவாமி கட்கு, "அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும் குன்றே யனையாய் என்னை ஆட் கொண்ட போதே கொண்டிலையோ" என்ற மணி வாசகர் வாக்கின் படி தொண்டுசெய்து வருபவர், திருப்பூவணம் வேதாந்த மடம் காசிகாநந்த ஞான தேசிக சுவாமிகளாவர். இவர் நூற்றுக்கு மேற்பட்ட நூற்களை இயற்றிய வித்தகர். மாசில மணியாம் குரு மணியின் மணி வார்த்தை பேசி வருபவர். குரு மணியின் மீது, திரு வெம்பாவை ஒன்பதின்மரைக் கொண்டு பாடச் செய்து, திருக்களரில் அரங் கேற்றம் செய்தார். இன்று, குரு நாதன் 50வது ஆண்டு விழாவில் பலரைக் கொண்டு, குரு நாதன் புகழுரையை எழுதச் செய்து, நூல் அரங் கேற்று விழாவைக் கண்டு அக மகிழ்கின்றார். குரு மணியின் புகழ் கூறக் கேட்டு, மகிழும் காசிகாநந்த குரு மணியைப் பின் பற்றித் தவ சீலராகத் திருக்கோயில் கொண் டிலகும் வீர சேகர ஞான தேசிக குரு மணியைப் போற்றுவோம். அவர் புகழ் பரப்புவோம்.

திருக் களராண்டவ ரென வழங்கும்
வீர சேகர ஞான தேசிக நாமம் வாழ்க!
அவர் தம் திருக் கூட்ட மரபு வாழ்க!

---





திருக் களர், கோ. ஆ. வீர மடம்,
கோவி லூர், ஸ்ரீ மகா தேவ ஞான தேசிகர் மாணுக்கர்
*ஸ்ரீ கிருஷ்ணாநந்த சுவாமிகள் எழுதியது.*

---

ஸ்ரீ திருக் களர் ஆண்டவ ரென்று விளங்கும், ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமிகள் மோக்ஷ தசை யடைந்த 50-வது வருஷத்திய பொன் விழாவின்போது 27 நக்ஷத்திரக் குறிப்புடன் பாராட்டிய சரித்திர ரூபப் புக ழுரை.

---

1. நம் ஸ்ரீ வீர மகா முனிவர் பல சிறப்புகள் பொருந்திய பாண்டி நன் ஞட்டில் அழகா புரி போல பல வளங்களு டன் அமைந்த புது வயல் என்னும் திவ்ய நகரில் வசிட்டர் அருந்ததி போல், இல் லொழுக்கம் நடத்தி வந்த சிறப்பு மிக்க அருணுசலம் செட்டியார் உமை யம்மையாரின் அநேக தவங்களினுலும், சாக்கையில் எழுந்தருளியிருக்கும் வீர சேகரேசப் பெருமானையும், உமையாம்பிகையையும், வேண்டிய வேண்டுகோளினுலும், அவ் வீர சேகரேசரே, இவ் வீர சேகர முனிவ ராக சாத்திரங்களிற் கூறிய புருஷ லக்ஷணங்களோடும் அவதரித்தனர். அக் குழவியினிடத்தில், கண்ணபிரானைப் போன்றும், சங்கரரைப் போன்றும், அள வற்ற ஆற்றலும், அநேக அதிசயங்களும், ஒரு ஆண்டு பூர்த் தியாவதற் குள்ளேயே அகர முதலிய எழுத்துக்களை கசடற யாவரும் ஆச்சரியப்படும்படி வழங்கி வந்ததுடன், இன்னும் அநேக அரிய செயல்களும் காட்டி வந்தனர். அவதார அச் சிறு குழந்தையின் ஆற்றல் தான் என்னே! என்னே! அத் தகைய தெய்வீகக் குழந்தையின் திருச் செயல்களைக் கண்டு திருப்தி யடைந்த திருத் தந்தை சங்கரருக்கு-சிவ குரு போன்று, செய்வனவற்றைச் செய்து சிவ பதவி யடைந்

தனர். பின்னர். அவ் வீரேச முநிவர் செய்வனவற்றைச் செய்து, ஐந் தாண்டும் நிறையப் பெற்று அவ் வவ் வாசிரிய ரிடத்தில், அவ் வாறு திங்களில், ஐயந் திரிபு அறியாமை யென்னும் முக் குற்றமு மற எல்லாக் கலைகளையும் பூர்ண மாக அடைவுற்றனர். அத் தருணத்தில், பத் தாண்டும் நிறைவுற்றது. தாம் எல்லா ஆற்றலும் படைத்த அரு ளவ தார ராயினும், குலாசாரத்தை விளக்க, "திரைகட லோடி யும் திரவியம் தேடு" என்ற வாக்கியப்படி பொரு ளீட்டி யும், "பெரியாரைத் துணைக்கொள்" என்ற பெரியோ ராசா ரத்தைக் காட்ட கோவிலூர் மரபில், உணரவேண்டியதை முழுதும் பாட முறையி லுணர்ந்த பெரியாரிடத்தில் உணர வேண்டிய வேதாந்த நூல்களை முழுதும் முக் குற்ற மற வுணர்ந்தும், அதிகாரிக் குரிய எல்லா இலக்கணங்களையும். பூர்ண மாக அடைந்தும், இராம பிரானைப் போன்று, விளங் கிக் கொண்டிருந்த பெருமை தான் என்னே! என்னே! இவ் வீரேசரது அருள் நிலையைக் கண்ட வீரப் பய்யா என்ற பெரியவர், "அன்ப! நீர் ஆதிசேடனாலும் அளவிட்டுக் கூறற் கரிய பல வளங்களும் பொருந்தித் தவ வலி ஞான வலி மிக வும் பொருந்தியதும், அடியார் குழாங்களுடன் கூடியதும், வட ஆலின் கீழ் எழுந்தருளி யிருக்கும் குரு தெட்சண மூர்த்தியைப் போன்று, சிறந்த ஆசிரியத் தன்மை பொருந்தி யிருக்கப்பட்ட ஸ்ரீ சிதம்பர ஞான தேசிகர் எழுந்தருளி யிருப்பதும், யாம் அடிமை புகுந்தது மாகிய, கோவிலூர் மடத்தை அடைவீரேல், நீர் அடைய வேண்டிய பயன் முழுவதையும் அடைந்தவ ராவீர்' என்ற உரையைக் கேட் டலும், சங்கரர் சந்நியாசத்தை முன்னரே விரும்பித் தாயின் கட்டளையை எதிர் நோக்கிக் கிடைத்தவுடன் விரைந்து சந்நியாசத்தை அடைந்து, அவர் ஆசிரியரை அதிவிரைவில் தேடிச் சென்றது போல், நம் வீர மா முநிவரும் அத் தகைய செய்கையுடன் ஆசிரியரை யடைய கோவிலூர் மடத்தை நோக்கி விரைந்து சென்றனர். இவ் வீரேச முநி வர்பால் வீட்டின் வேட்கையும், விமல போத ஆசிரியனை விரைந் தடையும் விருப்பமும், இருந்த வாறு என்னே!

என்னே! தாம் எல்லாம் கை வந்த அவதார புருடரே ஆயி னும், ராம பிரானைப் போன்றும், கிருஷ்ண பகவானைப் போன்றும், மற்றையோர்க் குணர்த்தச் சிறந்த அதிகாரி புருட னாக நடித்துக் காட்டிய பெருமை தான் என்னே! என்னே!

2. இராம பிரான் வசிட்டரை யடைந்ததைப் போன் றும், சங்கரர், ஆசிரியர் குகை வாயிலை யடைந்ததைப் போன்றும், இவ் வீரேச முனிவரும், கோவிலூர் மடத்தை யடைந்து, ஸ்ரீ ஆண்டவரையும், துற வாண்டவரையும், தெரிசித்து, மேற்படி ஆண்டவரின் சீடராயும், தவ யோக ஞானங்களில் பூர்ண சித்தி யடைந்து, தம்மை யடைந்த அடி யார்களின் அகலாப் பிறப்பை அகற்றும் அருளாள னென் னும் கருணா நிதி என்ற பெயரோடுங் கூடிய ஸ்ரீ சிதம்பர ஞான தேசிகரை முன்னர்ச் சர ணடைந்து, அவ் வாசிரியரது பூர்ண அநுக்ரகத்துக்கு முழுப் பாத்திர மாகி, எல்லா உரிமைகளுடனும் இரண்டா முறை பாட மோதுவிக்கும் முறை உடையவ ராக இருந்ததனால், 'பெரிய சாமிக' ளென்றும், 'இரண்டாம் பாடச் சுவாமிக' ளென்னும் பெயரோடும் கூடிய. பொன்னம்பல ஞான தேசிகரை முறைப்படி வணங்கி நின்றனர்.

அப்போது, இருவருக்கும் நடந்த சம்வாதத்தில், இந்த வீரசேகரனிடத்தில் உள்ள, அவதார புருட விலக்கணமும், ராம பிரானைப் போன்று எல்லாக் குணங்களும் சிறப்பாகப் பொருந்தியிருந்தும், அளவு கடந்த அடக்க முடைமையும், விநய முடைமையையும், கண்டு அப் பெரியார் மரம் போல் அசை வற்றவரே யாயினர். அத் தகைய வீரேசரது பெருமை என்னே! என்னே!

3. அப் பொன்னம்பலக் குருபரனார், இவ் வீர சேகர முனி வரது விசேட அதிகாரி யிலக்கணத்தைக் கண்டு, கையடை யோடு தமது ஆசிரியரிடத்தில் அழைத்துச் சென்று, அறி

ஞர் உண்ணும் அத்வைத தேன் ஒழுகும் அரிய செந் தாமரைத் திரு வடிகளை வணங்கச் செய்து, தம் ஆசிரியரை நோக்கி, இவ் வீர சேகர ருடைய குணங்க ளனைத்தையும் வியந் துரைத்து, எந்தையே! தேவரீர் திரு வுள மிரங்கி இச் சிறுவரையும் அடிமை கொண்டருள வேண்டு மென்று, பல வாறு பிரார்த்தித்தனர். அவ் வாசிரியரும் கருணை கூர்ந்து, ஆமை போன்றும், மீன் போன்றும், பறவை போன்றும் தடுத்தாட் கொண்டனர். பல் லாயிரப் பக்குவி களை ஒரு மொழியால் உய்விக்கும் ஒப் பிலா வுயர்வும், அதிகார உண்மையும் பொருந்திய, இவ் வீரேச முநிவரைக் கோவிந்த பகவற் பாதர் சங்கரரை மாணுக்கராக்கிக்கொண்டது போ லாக்கிக் கொண்டனர். இவ் வீரேச முநிவரும், ஆசிரியர்பால் அள விலா அன்பு கொண்டு, ஆப்தாதி பணிகளை அளவு கடந்து செய்து வந்தனர். இவரது குரு பக்தியின் பெருமை தான் என்னே! என்னே!

4. அச் சமயம் அவ் வீரேச முநிவருக்கு ராம பிரானைப் போன்றே வயதும், 16 நிரம்பியது. இவரது அற்புத அதிகார நிலையைக் கண்டு, அக் குருமரபில் அறிவுறுத்தும் அத்வைத நூல்களினுல் முறையாக நுண்ணிய பொருள் வெளியாம் வண்ணம் போதித்தருளினர். இவ் வீரமா முநிவரும் அடியார் கூட்டத்தில், அன்புடைய ராய்க் காம தேநுவின் கன்றென எல்லோரும் விரும்பும்படி ஒழுகி வந்தனர். அதிகார புருட ராக விருந்தும், அடக்க முடன் ஒழுகிவந்த பெருமை தான் என்னே! என்னே!

5. இவ் வீரமா முநிவர், இங்ஙனம் விருப்புடன் ஒழுகி வரும் நாளில், பந்துக்கள் வந்து இல் லறம் நடத்த வேண்டலும், ஆசிரியரின் குறிப்புப்படி ஒருவரும் அறியாது, சிக்கலுக்குச் சென்று, சட்டயப்ப முநிவரிடத்தில் சந்நியாசம் பெற்று, மீண்டும் தம் ஞாநாசாரியார் எழுந்தருளி யிருக்கும் கோவி லூர் மடத்தை யடைந்து, ஆவைப் பிரிந்து மீண்டு வந்தடைந்த கன்றைப் போலவும், ராம பிரானைப் பிரிந்து

மீண் டடைந்த இலக்குமணனைப் போலவும், தம் குருவை, ஆரா அன்பு மேலிட்டு. ஆருய் ஒழுகத் தரிசித்து, வணங்கி துதித்து வாய் பொத்தி நின்று, "மும்மை மலம் அறுக்க வந்த முத்தனே! எம்மை யாள வந்த எந்தையே! செய் வகை யறியாச், சிறியேன் தேவரீர் திருவுளப்படி சந்நியாசம் பெற் றுத் திரு வடியைச் சர ணுக அடைந்தேன் ஆதரித் தருளும் ஐயனே!" என்ற அவ் வீரேச முநிவரது அருள் மொழியைக் கேட்ட அவ் வாசிரியர் அருமந்த தந்தை அரு மகவின் அரு மழலைச் சொல்லைக் கனல் மெழு கென மநங் கசிந்து, கேட் பது போலக் கேட்டு, அருள் பாலித்தருளினர். அவதார புருட ராகிய இவ் வீர மா முநிவரது குரு பக்தி தான் என்னே! என்னே!

6. அருள் சுரந்த அவ் வாசிரியர், அவ் வத்வைத மரபின் கண் ணுள்ள, நாநா சீவ வாதக் கட்டளை முதல் ஞான வாசிட்டம் வரையி லுள்ள 16 நூல்களையும் இனிய கருணை யுடன் முறை யாக உபதேசித்தருளினர். அவ் வீரேச முநி வரும், அவை யனைத்தையும் ஐயந் திரிபு அறியாமை யென் னும் முக் குற்ற மற சிரவணித்தும், மநநம் செய்தும், நிதித் யாசநமீ செய்தும், சந்தேக விபரீதங்கள் நீங்கி, சுவா நுபவத் தில் திட மாக நிலைபெற்று, முநிவராய் விளங்கி அவ்வடியார் கணங்களுக் கெல்லாம் கண் மணி போன்று, ஆ சி ரி ய ர் சேவை செய்துகொண்டு மிருந்து வந்தனர். இங்ஙனம் இவ் வீர முநிவர், விமல போ த த் தி ல் விழிப்புட னிருந்தமை என்னே! என்னே!

7. இங்ஙனம் ஒழுகி வந்த வீர மா முநிவர், ஜீவன் முத்தி யின் விலக்ஷணுநந்தத்தை விசேஷ மாக அநுபவிக்கவேண்டு மென்று கருதி, ஞாநாசிரியரிடத்தில் நல் லாஞ்ஞை பெற்று, நாநா வித மகத்துவத்தோடுங் கூடிய நாநா வித ஸ்தலங்களை நன் முறையில் தெரிசித்துக் கொண்டு, நன்மை பல பயக் கும் ஸ்ரீ நட ராஜப் பெருமான் நாள் தோறும் நடநம் செய் தருளும் தில்லை யென்னும் நற் பதியை யடைந்து, அந் நட

ராஜப் பெருமானின் நற் கழல்களை நாடித் தொழுது துதித்து நல் லடியார்களுக்கு உறைவிட மாகிய மௌந தேசிகர் மடாலயத்தை நண்ணி, நற் சிற் றறை ஒன்றை யடைந்து, நன்மை பல பயக்கும் நற் சமாதி யடைந்தும், நன்மை பயக்கும் நற் பிச்சை யேற்றும், நல் லொழுக்கங் களுடன் 12 வருஷம் கிரமப்படி ஒழுகிவர லாயினர். இவ ரது நீங்காத நித்திய நிமல வடிவ மாகிய நிஷ்டையைக் கண்டு, நின்மலர்கள் நித்யமும் தெரிசித்து நிரம்பிய மந முடையவர்களாய், நிரந்தரமும் தாமும் அது போல், ஒழுகி வர லாயினர். இவ் வீரசேகர ரூர், தாமும் ஜீவன் முத்தி தசையில் நிலைத் திருப்பதுடன், தம்மைத் தெரிசித்தவர் களும், அந் நிலைக்கு வர நினைக்கும்படி நிகழச் செய்த நிலைமை யான பெருமை தான், என்னே! என்னே!

8. இங்ஙனம் ஒழுகி வரும் நாளில், முன்னர் கோவிலூர் மடத்தில், நம் வீர சேகரருக்கு முன் னின்று குருபரரின் திரு வடியை அடைவித்தவரும், மேற்படி மடத்தில் முறை வகுத் துள்ள 16 நூல்களையும், நம் வீர சேகரருக்கு இரண்டாங் குரு மூர்த்த மாக விருந்து இரண்டா முறை பாடம் ஓதுவித்தவரும் ஆகிய ஸ்ரீ பொன் னம்பலக் குருபர ரூர் தம் ஆசிரிய ராகிய, ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக சுவாமி கள் விதேக கைவல்ய மடைந்து, காரைக் குடி இராம சாமி ஞாந தேசிக சுவாமிகள் மடத்தின் தலைமை வகித்த பின்னர், தம் ஆசிரியருக்குச் செய்ய வேண்டிய விசேடங்க ளனைத் தும் குறை வின்றிச் செய்து முடித்த பின்னர், அன்னூர் திரு வடிப் பாதுகைகளை அன்போடு அங்கத்தில் தாங்கிக் கொண்டு, அமல மான அநேக ஆலயங்களை ஆதரவோடு வழிபாடு இயற்றியும், உறைந்தும், ஆன பின், அம்பல வாணன் ஆநந்த நிர்த்தநம் செய்யும் அம்பலப் பதியை அன் புடன் அணுகி, ஆதரத்துடன் அன் பொழுக ஆராதித்து, அவ் வாண்டவன் அருளால், ஆங்கு உறைந்து, அடியார் களுடன் அன்புடன் ஒழுகி வர, ஆநந்த நடநன் அருளால், அன்பர்கள் உதவிய ஆதாரப் பொருளால், ஆங் கோர் மட

மியற்றி, அடியார்கள் அன்புடன் ஆரணப் பொருள் கேட்டு மநந நிதித்யாசநம் செய்து, நிமல நிட்டையில் நிகழும்படிச் செய்து, நியம மாக நி க ழு ம் ப டி செய்தனர். அங்ஙனம், இயற்றி நடத்தி வந்த இயல்பு மிக்க நம் ஸ்ரீ பொன் னம் பலக் குருபரனார், நம் வீர சேகரனாரது வியன் னிலையைக் கேட்டு வியப்புற்று வியந்து, வீரசேசரை விருப்புடன் காண விரைந்து அழைப்பித்தனர், அவ் வழைப்பைக் கேட்ட நம் வீரசேகரனார், விரைந்து வந்து விமலருடைய விமலப் பதங் களை விநய முடன் வணங்கி விருப் புற்று முன் நிற்கவும் அங்ஙனம் நின்ற வீரமா முநிவரை, விமல போத வித்தக ராகிய பொன் னம்பலக் குருபரனார் நோக்கி, அன்ப நீர் அடைந்து அநுபவிக்கும் அருமை நிலை அரிது அரிது.

மூவர்க்கும், முநிவர்க்கும், முதன்மைச் சுருதிகளுக்கும், எமக்கும், அரிது அரிது அங்ஙன மாயினும், "உமது தவ நிலைக்கு இடையூ றின்றி அநுகூல மாக விருக்கும் ஒரு இத மான காரியத்தை உரைக்கலா மென்று உன்னுகிறோம் கேட்க மந முளதேல் இயம்புவோ" மென்றனர். வீரமா முநி வர், சுவாமின் பெரியோர் உரை வேத குரு வாக்யம் போல் கொள்வன் எனலும், 'அன்ப! நமது மடத்தில் இ ர வு தோறும் இடையறுது ந ட ந் து வரும் இயல் புடைய வேதாந்த சிரவணத்தை உட னிருந்து கேட்டு இரவில் பிக்ஷையை இவ் விடத்திலேயே ஏற்று, பகலில் உமது நிய மப்படி ஒழுகிவர வேண்டு மென்பதே! எமது வேண்டு கோள்' என்றனர். தமது தவத்துக்கு அநுகூல மாக அமைந்த அவ் வுரையைக் கேட்டு ஆநந்த மடைந்து, அவ் வாறு ஒழுகிவர லாயினர். ஆன்றோர் உரையின்கண்ணும், அமல வாநந்தத்தின் அநுபவத்தின்கண்ணும், ஆர்வம் அமைந்த அருமை, என்னே! என்னே!

9. அங்ஙனம் அமர்ந்து வரும் நாளில், கோவி லூர் மடத் தில் தலைமை தாங்கி வந்த, காரைக் குடி இராம சுவாமி ஞாந தேசிக சுவாமிகள் பரிபூர்ண நிலை யடைந்தமையைக் கேள்

வியுற்று, அத் திருக் கூட்டத்தில் அமர்ந்திருந்த ஆசிரியர் பொன் னம்பலவர் வாக்கில்நின்றும் அசரீரி யெழுந்த வாறு, நமது கோவிலூர் குரு சந்நிதாநத்தை எல்லா வகையிலும் வள முறச் செய்யத் தகுந்தவர் நம் வீர சேகரனுரே யன்றி, திரி வித உலகத்தும் வே றொருவரு மில்லை யென்று உதித் தது. மேற்படி உரையைச் செவி மடுத்த நம் வீர சேகரனுர் 'கானவர் வலையிற்பட்டு கை தப்பி யோடும் மான் போல்' என்ற வாக்கியப்படி விசிராந்தியின்கண் உள்ள விசேடத் தையும், வியவகாரத்தின்கண் உள்ள விசேட மின்மையும், விவர மாக விசாரித் தறிந்தவ ராதலின், விசிராந்தியை விட்டு வியவகாரத்தில் புக வெருண்டு, விரை வாக இரவே ஒரு வரும் அறியாது மறைந்து வளவ னூர் மடத்திற் சென்று விமலாநந்தத்தில் வீற்றிருந்தருளினர். விமலாநந்தத்தில் விருப்பமும், வியவகாரத்தின்கண் விருப்ப மின்மையும், மிகுந் திருந்த பெருமை தான், என்னே! என்னே!

10. இவ் வீர சேகரனுரது விருத்தாந்தத்தை விமல மாதவ ராகிய பொன் னம்பலவர் கேட்டு வியந்து, தம் ஆசிரியர் ஸ்தாநத்தில் உள்ள அபிமாந ஆர்வ மிகுதியால், அரு ளடி யார் அநேகரை அநுப்பி அமல வீரரை அழைத்து வரும் படி ஆக்ஞாபித்தனர். அடியார்கள் அருளியதை அவ் வமல வீரர் கேட்டு ஆன்ருேர் உரை, அரு மருந் தென்னக் கொள் ளும் அன்பு வாய்ந்தவ ராதலின், அஞ்சியும் அஞ்சாது, அவ் விடம் வந்து பொன் னம்பலக் குருபரன் அடியிணையை ஆரு அன்போடு அணுகினர்.

அவ் வன்பரைப் பார்த்து, ஆருமையோடு பொன் னம்பலக் குருபரனுர்,'அன்ப!உனது அரு நிலைமை ஆரணங் களுக்கும், ஆன்ருேர்க்கும், அமல மூவர்க்கும், எமக்கும் ஆழ்ந்து அருமை யாகக் கொள்ளத் தகுந்ததே யாயினும், ஆசிரியர் ஸ்தாநத் துள்ள அபிமாந மிகுதியால், எம்மையும் அறியாது பேசுவிக்கின்றது. நாமும், நீவிரும், நமக்கு முன் னுள்ளவர்களும், அந்த ஸ்தாநத்தைக் கொண் டல்லவா,

யாராலும் அடைய முடியாத அருமை நிலையை யடைந்தோம். இனி மேல் வருபவர்களும் அத் தகைய நிலையை யடைய வேண்டு மல்லவா? அத் தாநத்தை ஆதரிப்பாரின்றி அழிவுற விடுவோமேயானால், செய்ந் நன்றி மறந்தலென்னும் குற்ற முண்டாகுமன்றோ! ஜீவன் முத்த னாயினும் குரு ஸ்தாநத்தைக் காக்க வேண்டுமென்ற ஆரண வுரையும், ஆன்றோ ருரையும் உள்ளனவே. அவ் வுரையைக் கடத்தல் நம்மனோர்க் கியலுமோ! பகவத் வாக்கியம் போல் திடப் பிரக்ஞனுக்குச் சமாதியும், வியவகாரமும், ஒன்றே யன்றோ? வே றாக நினைத்தல், அந்த பிரக்ஞைக்கு இழுக்காகுமே யன்றோ, "வெறிதி ருக்கினும் தொழிலினை மேவினும் அறிஞன் என்று தான் சமாதி விட் டகன்றவனாகும்" என்று கருதிய ராம பிரான் பகவான் ஜநகர் சுரகு போல், நீவிரும் திருஷ்டி யுடையவராய் ஒழுகல் வேண்டும் என்று அநேக சுருதி, ஸ்மிருதி முதலிய அநேக பிரமாணங்களையும், ஆன்றோர் ஒழுக்கங்களையும், விரி வாக எடுத்துக் காட்டி, எம துரையை தடுக்காது ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும், யாமும் உமக் குபகார மாகக் குரு ஸ்தாநத்தின் வியவகாரங்களை யுட னிருந்து கவனித்து வருவோம் நீவிர் அஞ்சற்க எனவும், அநேக வித மாகக் கூறி விரும்பலும், நம் வீரமா முனிவரும் ஆன்றோ ருரை பிரமாண வுரைகள் ஆன்றோ ரொழுக்கம் ஆசிரியர் ஸ்தாநம் இவற்றில் மிகுந்த அபிமாந முடையவர்களாதலின், அப் பொன் னம்பலக் குருபரரின் விருப்பத்துக்கு இசைந்தனர். இத் தகைய நம் வீர சேகரனார் சீலம் தான், என்னே! என்னே!.

11. தேவர் வேண்டுகோளுக்கு மஹா தேவன் இரங்கியது போலவும், அன்பர் வேண்டுகோளுக்கு கலைக்கோட்டு மகரிஷி இரங்கியது போலவும், பொன் னம்பலக் குருபரனார் வேண்டுகோளுக்கும், இன்னும் அநேக அன்பர்களின், வேண்டுகோளுக்கும் மநம் ஒப்பி, நம் வீர சேகரனார் மடத்தின் தலைமைப் பதவிக்கு இசைந்து, இராம பிரான் இலட்சு

மணருடனும், இன்னும் இரத பரிசநங்களுடனும், அயோத்தியை அடைந்ததைப் போல, நம் வீர சேகரனும், பொன்னம்பலக் குருபரனுடனும், இன்னும் அநேக அடியார்களுடனும், கோவிலூர் மடத்தை யடைந்தனர். அங்ஙனம் சுபதிநத்தி லூற்று முறையே லிங்கம் நந்தி பலி பீட வடிவ மாயுள்ள மூலக் குருவரர்களுக்கு அபிஷேக நைவேத்திய ஆராதனைகளை விசேஷ மாகச்செய்தும்; தச ரதர் ராம பிரானுக்கே முடி சூட்ட வேண்டு மென்று உணர்த்திய வாறு, பரிபூர்ண தசை யடைந்த ராம சுவாமி ஞாந தேசிகர், வீரமா முநிவரையே கோவிலூர் மடத்தின் தலைவ ராக்க வேண்டு மென் றுணர்த்திய தன்மையை ஆங் குள்ள, தநவைசியர், அன்பர்கள், அடியார்கள், அனைவருக்கும் உணர்த்தி, அவர்க ளனைவர்கள் உடன்பாட்டின் பேரிலும் ராம பிரா னுடைய மகுடாபிஷேகம் போன்று, சுபா நுவும், மார்கழிமீ சுப முகூர்த்தத்தில் அங் குள்ள, வேதாந்த போதகாசாரியர் பீடத் திருத்தி, பட்டாபிஷேகம் செய்து, பூசித்துப் போற்றி, வாழ்த்தி, வேதாந்தோபதேசம் செய்யு மாறு, செய்து, 'வீர சேகர ஞாந தேசிகர்' என்னுந் திரு நாமத்துடன் விளங்கு மாறு. ஏற்பாடு செய்தனர். இங்ஙனம் பொன் னம்பலக் குருபரர், லெட்சுமணர் ராம பிரானுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து, அவருக்கு உறு, துணை யாக இருந்து, எல்லா வியவகாரங்களையும், இனி துற நடத்திய வாறு, நம் வீர சேகர ஞாந தேசிகருக்கும், உறு துணை யாக விருந்து, எல்லா வியவகாரங்களையும், இனிதுற நடத்திவந்தனர். அவ் விருவர் மநமும், இராம லெட்சுமணரைப் போலவும், சம்பந்தர் அப்பரைப் போலவும், யாக்யவல்கியர் கார்க்கியைப் போலவும், அன்பு இணைபிரியாது, அமைந்திருந்தன. மூ வுலக வியவகாரமும் ஒருங்கே

யமையினும் சிறிதும் சலிப் பற்று, ராம பிரானையும், ஜநக ரையும், அஜாத சத்துருவையும் போன்றும், சூடாலை, சிகித்துவசனைப் போன்றும், திட ஞாநத்துடன் கூடியிருந்த தன்மையையும், சுரகுவைப் போன்று, வியவகார வேளை யெல்லாம் சமாதியோடு கூடியிருக்கும் தன்மையையும், கசனைப் போன்று, எல்லா வியவகாரங்களிலும், பரமார்த்த திருஷ்டியோடு கூடியிருக்கும் தன்மையையும், வியவகாரங் களை எல்லாம் கிருஷ்ண பகவானைப் போன்று, சலிப் பின்றி விநோதமாகச் செய்யும் தன்மையையும், சில நாளில் கண்டு, பொன் னம்பலக் குருபரர், மடத்து வியவகாரங்களை யெல் லாம், வீர சேகரனரையே ஏற்கும்படி இசையச் செய்து விட்டு, எழில் மிக்க தமது இருப்பிடம் சேர்ந்தனர். வீர சேகரனரது ஞாந வலிமையோடு கூடிய வியவகார வலிமை யிருந்த வாறு தான் என்னே! என்னே!.

12. இவ் வாறு, குரு ஸ்தாநத்தை யேற்று நடத்த இசைந்த போது, வேதாந்தத்தில், 36 தத்துவங்களே உள் ளன. 36 ஆம் தத்துவமே தா னெனக் காட்ட, நமது வீர சேகரனருக்கு 36 வயது நிரம்பிய அறி குறி தான், என்னே! என்னே!

13. இவர் அவதார புருடர் ஆனதினலும், திரு நெல்லை யம்மன் அருளும், மூல குருபரர் மூவரின் அருளும் ஒன்று சேர்ந்து, இவரிடத்தில் பொருந்தி யிருத்தலினு லன்றோ, இவர்பால் அருள் வலி, ஞாந வலி, பாட போது விக்கும் வலி, அபக்குவிகளை பக்குவிகளாக்கும் வலி வியவ கார வலி, முதலியபல சத்திகளும் ஒன்று சேர்ந்து விளங்கின. எல்லாச் சத்திகளும் ஒருங்கு அமைந்திருத்தலி னன்றோ

ஆசாரிய பரம்பரையி லுள்ள, ஒழுக்க விதி முறைகள் அனைத்தையும் சிறந்த முறையில் நடத்திச் சங்கரக் குருபரன் போல், குருபர மணி யாக விளங்கினர். இந்திரனும் நாணும் படி, இந்திர சபை போன்று, கைலாசக் கொட்டகை முதலியன இயற்றியும், சத்தியலோகப் பிரமனும் நாணும் படி, பிரம விசாரம் செய்யும் பிரம சபை யியற்றியும், விசுவ கர்மாவும் நாணும்படி, அநேக விசித்திர சிற்பங்களோடுங் கூடக் கைலாசம் போன்று, விளங்கத் திருநெல்லை யம்மை, கொற்றவா ளீசர் ஆலயங்களையும் நிர்மாணித்தனர். முன் னுள்ளவர்களும், இப்போ துள்ள விஞ்ஞானிகளும், இனி மேல் வரும் விஞ்ஞானிகளும், கண்டு பிரமிக்குப்படும்படி யான முறையில் சிவாலயமும், மடமும், குரு ஆலயங் களும், புதுச் சிருஷ்டி போலத் தோற்றமுற்று விளங்கின; பிரம லோகம் ஒன்றே, அந் தந்த, உபாசகர்களுக்கு அந் தந்த உலக மாகத் தோற்றுவதைப் போலக், கோவிலூர் ஒன்றே, எந் தெந்த அடியார்கள், எந் தெந்த வித மாகப் பாவிக்கின்றார்களோ, அந் தந்த வடிவ மாகத் தோற்ற மளிக்கும் நிலைமையி லிருந்தன; பிரமனே நம் வீரசேகரனு ராக வந்து பல வளங்களோடுங் கூடிய கோவி லூர் என் னும் நகரைச் சிருஷ்டித்தனரோ வென்று, எண்ணும்படி யாக விளங்கியது, தான், என்னே! என்னே!. இந்த வீர சேகரனார் ஆற்றல் தான், என்னே! என்னே!.

14. ஸ்ரீ கொற்ற வா ளீசர், திரு நெல்லை யம்மையின் கும்பாபிஷேகமும், முன் னுள்ளவர்களும், இப்போ துள்ள வர்களும், இனி மேல் வருபவர்களும், இத் தகைய வைபவத்தோடு, மனித சுபாவ முடையவர்களாற் செய்ய முடியாது என்று கருதும்படியும், கும்பாபிஷேகத்தைப் பற்றிக் கூறும் சாஸ்திர விதி முறைகளில் சிறிதுங் குறை வின்றி, அதி விசேஷ மாக்ச் செய்து முடித்தனர். கும்பாபி ஷேகத்தில் யார் யாருக்கு எது எது செய்யவேண்டுமோ

அவை யனைத்தையும் கொண்டல் போல் போதும் போது மென்னப் பொழிந்தனர். இவ் வினிய வீரேசரது இனிய பெருமை இருந்த வாறு தான், என்னே! என்னே!.

15 இவ் வீரமா முனிவர் முன் னொரு முறை சிருங்க கிரிச் சங்கராச்சாரிய சுவாமிகள், இராமேச்சுவரம் யாத்திரை யாக வந்து, இராம நாதபுரத்தில் தங்கியிருந்த போது, பொன் னம்பலக் குருபரனின் வேண்டுகோளின்படி, கோவிலூர் மடத்துக்கு அநேக உபசார மரியாதைகளுடன் அழைத்து வந்து, ஆரு, அன்பால் அளவு கடந்து ஆராதித்த அருமை யைக் கண்டு, 'ஆசிரியர், அன்பர்காள் சிருங்க கிரியில் எழுந் தருளியிருக்கும் சாரதா தேவிக்கு, கருங் கல் திருப் பணி யாக்கித் தரல் வேண்டும்' எனலும், அந்த ஆக்ஞையைச் சிரமேற் றங்கி, அன்பர்கள் பொரு ளுதவியால், அச் சாரதா தேவியின் ஆலயத்தை, இழைத்த கருங் கல்லால் கோவி லூர்த் திரு நெல்லை யம்மை ஆலயம் போல், ரூபாய் ஐம் பதி னாயிரம் செலவில் அழகுற அமைத்து கும்பாபிஷேகமும் சிறப்புறச் செய்து முடித்து வைத்தனர். மறு முறை கிலக வருஷம் சித்திரை மாதம் 11உ குரு வாரம் சப்தமி திதி உத்திராட நக்ஷத்திரம் மிதுந லெக்கினத்தில், திரு நெல்லை யம்மனுக்கு நடந்த கும்பாபிஷேக விசேஷத்துக்கு அழைத்து வந்து. தெரிசநம் செய்து வைத்தார்கள். அவ் வாசிரியர்? கோவிலூர், கோவில் மடத்தின் நிர்மாணத்தையும், கும்பா பிஷேகம் நடந்த வைபவத்தையும், ' ஆயிரக்கணக் கான, அடியார்களை, வைத்து ரக்ஷிக்கும் கருணை வலி, ஞாந வலி, வியவகார வலி, எல்லா வழிபாட்டின் வலி, எல்லாம் ஒருங்கே யமைந்திருப்பதையும் நோக்கி, மனிதப் பிறவியால் இவைகள் இயல்வ தல்ல. அவதார வடிவமே யென வியந்து பூரிப்பை யடைந்தனர். அக் கோவி லூரின் வளங்களைக் கண்டு, அவ் வருஷம் சித்திரை மாதம் நடத்த வேண்டிய சங்கர ஜயந்தியையும், வீரேசன் உதவியால் வெகு விமரிசை யாக நடத்தி, அங் குள்ள வேத பாடசாலையில் தங்கியிருந் தார்கள், அதன் பின், மடத்தில் அமைக்கப்பட்ட பிர்ம

சபைக்குப் பல வைபவங்களுடன் எழுந்தருளிவந்து. நம் வீரசேகரனாரால், அளவு கடந்த அன்போடு, அளவற்ற முறையில் ஆராதனை செய்யப் பெற்று, மநக் களிப்புற்ற அவ் வாசிரியக் கோமானார், முன்னர் சிருங்க கிரி ஸ்ரீசாரதா தேவியின் திருப் பணியை அழகுடன் முடித்து வைத்துக் கும்பாபிஷேகமும் செய்து வைத்தமைக்கும், இப் போது தமக்குச் செய்த ஆராதனைக்குமாக அன்பு மேலிட்டு. இவை மனிதப் பிறவியால் செய்யத் தகுந்தவை யல்ல, இவ் வீரேசர் தெய்வப் பிறவியே என உணர்த்தச், சாரதா, தேவியைப் பார்த்து, இவ் வீரேசனுக்கு அநுக்கிரகம் செய்ய வேண்டு மென்று, வீரேசன் வீரேசன் என, மகுடம் வைத்து, ஆசீர் வாத பஞ்சரத்திநத்தைச் செய்தருளினர். நம் வீர சேகரனார் அவ் வாசீர்வாதத்தை அன்போடு ஏற்று, அவர்கட்கு வேண்டிய சத்காரங்களைச் செய்து, மற்றும் பல வாழ்த்துக் களையும் பெற்று, ஜீவன் முத்தராய் வாழ்ந்து வந்தனர். இங்ஙனம் சுபாநு வருஷம், மார்கழி மாதம் முதல் விரோதி கிருது வருஷம் வைகாசி மாதம் வரை $27\frac{1}{2}$ வருஷம் மடாதிபத்தியம் வகித்து, மனிதற் கியலாத காரியங்களை எண் ணிறந்த வகையில் இயற்றி, வாழ்ந்து வந்த புதுமை தான், என்னே! என்னே!.

அநுக்ரக நிக்கிரகச் செயல்களைக் கூறின் விரியு மென் னும் பயத்தால் கூற வியல வில்லை.

16. இங்ஙனம் தாம் அவதரித்த காரியங்கள் முற்றும் பூர்த்தியாகி விட்டன வென்று எண்ணும் போது, பின் பயனைப் பயக்கும் நல் வினை பிரகடந மாக, இன்னு மொரு காரியம் குறைவுற் றுளது என்னும் எண்ணம் உதய மாயிற்று. அது யாதெனில், பல சிறப்புக்களும் பொருந்திய, சோழ வள நாட்டில், மூவரால் தேவாரப் பாடல் பெற்ற சிறந்த ஸ்தல மொன்றைச் சிறப்புறப் பணி செய்து, சிறந்த முறையில் கும்பாபிஷேகமும், திரு விழாவும், புதிய பெரு விழாக்களையும், சிறப் புறச் செய்து தெரிசிக்கவேண்டு மென் பதேயாம். சங்கர பகவற் பாதர், தான் அவதரித்துச் செய்ய வேண்டிய காரியங்கள் முழுதும் முற்றுப் பெற்றன

வென்று முடிவுற வெண்ணும் போது, முறை யாகச் செய்யும் மீண்டு மோர் காரியம் எஞ்சி யுள்ளது என்று எண்ணினர். அது 'சர்வக்ஞ சிங்காசந மேறிச் சகல பூமண்டலாபிஷேகர்' என்னும் விருது பெற வேண்டியதேயா மென்று கருதி, யக் காரியத்தையும் விரை வாகச் செய்து அமல பதத்தை யடைந்த வாறு, நம் வீர சேகரனுருக்கும் தோன்றியது வியப்பாங் கொல்லோ, இருவரும் சிவாவதார மாகலின், வியப் பன்று என்க. சங்கர பகவற் பாதர் அவதரித்த பின்னர், அநேக தேவர்களும், மால் பிரமன் முதலியோர்களும், அவதரித்து, மாணுக்க ராக வந் தடைந்த பல்லாயிர வர்களும், ஒவ் வொருவரும், ஒவ் வொரு திசையை வெல்லும் கல்வி யாற்றலும், ஞாந வலியும், தவ வலியும், யோக வலியும், உடையோரா யிருந்தனர். அவருள்ளும், பத்ம பாதர், முதலிய நால்வரும், மும் மூர்த்தி வடிவ விசேஷ தேவகைளின் அவதார மாகலின், விரிக்கமுடியாத, விசேஷ ஆற்ற லுடையோரா யின்றளவும், இனி மேலும், விசேஷ மாக விளங்கி வருதல் போல, நம் வீர சேகர முநிவருக்கும்,பல்லாயிர மாணவர்கள், பல தேவதைகளி னம்ஸ மாக வந் தவதரித்து, பர னுகிய வீர சேகரரது மாணுக்க ராய், முன் கூறிய பல ஆற்ற லுடையோ ராய் விளங்கினர். அவருள்ளும், வேங்கட்ட மா முநிவர், வெள்ளி யங்கிரி மா முநிவர், சுப்பைய்ய மா முநிவர், அண்ணுமலை மா முநிவர், நாரா யண மா முநிவர், காசிகாநந்த மா முநிவர், மகா தேவ மா முநிவர், சிவாநந்த மா முநிவர்,இவ் வெண்மரும்,விசேஷ அவதார வடிவ மாதலின், விசேஷ எல்லா ஆற்ற லுடையோராய் விளங்கினர். அவருள்ளும், வேங்கட்ட மா முநிவர், சுப்பைய்யா மா முநிவர், காசிகாநந்த மா முநிவர், சிவாநந்த மா முநிவர், ஆக இந் நால்வரும், நாற் றிசையிலு வெல்லும் எல்லா ஆற்ற லு முடைய ராய் விளங்கினர். சங்கரர் மாணுக்க ருடைமையைப் பார்க்கிலும், வீரமா முநிவர், மாணுக்க ருடைமை, ஒருபடி மேலாகக் கருதும் படியாகவே யிருந்தன. அன்னுரின் மாணுக்கர்களை யுடைய தன்மை தான், என்னே! என்னே!.

17. இங்ஙனம், நம் வீர சேகர முநிவர், வாழ்ந்து வரும் நாளில், வாத வூரர் திருப் பெருந் துறையில், திருப் பணி முடித்துத் திருந்திய பத மடையத் திருத் தில்லையை யடைந்த வாறு, நம் வீர சேகரரும், பல வளங்கள் பொருந்திய பாண்டி வள நாட்டில், முன் பல முறை மொழிந்த வாறு, பலவும் செய்து முடித்துப், பரமாந்ம லாபத்தைப் பயக்கும் பல வளங்களும் பல சிறப்புக்களும், பொருந்திய, சோழ வள நாட்டில், முன் கூறியபடி, மூவ ரால் பாடல் பெற்ற முதன்மை யான ஸ்தல மொன்றை முற்றுப் பெறச் செய்யவேண்டு மென்ற முதன்மை யாகிய எண்ணம் முடிவிலாது உதித்துக்கொண்டிருந்தன. மேற் கூறிய சோழ வள நாட்டின்கண், பூ தேவியின் திலகம் போல, இலகும் பல வளங்களும் பொருந்திய, திருக் களர் என்னும் ஒரு திவ்ய ஸ்தலம் திரு வுட னிருந்து வந்தது. அத் தல மானது, தில்லையில் பதஞ்சலி வியாக்ர பாதர் முத லிய முநிவர்களுக்கு, ஒரு நாள் தெரிசநம் கொடுத்த காலத் தில், அத் தெரிசநத்தைப் பல காரணங்களைக் கொண்டு பார்க்க இயலாத, துர்வாசர் மநக் குறையை நீக்க, முன் னூற் றறுபது நாளும் தெரிசநம் கொடுப்பதாக வர மருளி, அது போல, தெரிசநம் கொடுத்தருளியதும், கந்தமாதநப் பர்வத வாசிக ளாகிய, அறு பதி னாயிரம் இருடிகளுக்கும், பதி னாயிர வருக்கு ஒரு முக மாக, அறு பதி னாயிரவருக்கும், பஞ்சாக்ஷரத்தை, 21 முறை, எழுத்து மாற்றி, மாறி மாறி, உபதேசித் தருளிய சிறப்புடையதும், அத் துருவாசரால், தெய்வ கம்மியனைக் கொண்டு எல்லாப் பணிகளையும், மாட மாளிகையுடன் வா னளாவ இயற்றியும், பெரு விழா முதல் எல்லா விழாக்களையும், வரன் முறை யாக நடத்தி யும், வரை யறுக்க முடியாத பல காரியங்களைச் செய்தும், தெரிசித்தும், பல வரங்கள் பெற்றும், இன் றளவும், இனி மேலும், ஆநந்த தெரிசநம் பெற்று, அமர்ந்து வரும் தன்மை வாய்ந்ததும், துருவாசரா லும், மாலாதாரகன் முத லிய அநேக அரசர்களா லும், வணங்கி, அநேக மாநியம் வழங்கி, அமல பத மடையப்பெற்றதும், மூவரில் சம்பந்தர்

அப்பரால் தேவாரப் பாடல் பெற்றதும், அத் தேவாரப் பாடலில், அறைந்தபடி அநேக வளங்கள் பொருந்தியது மாகும். அத் தகைய தலம் காலாந்தரத்தில், காப்பா ரின் றிப் ஜீரண முற்று, மாநியங்களையும், அநேகர் எடுத்துக் கொண்டும், பூசை நைவேத்யம் கூடச் சிறந்த முறையில் நடக்காமலும், பகலிலேயே, கோவிலுக்குள் செல்வதுக்கும் இயலாத முறைமையில், காடுகள் மூண்டு, மிகவும் ஜீரண முற்றிருந்தது; இந்தப் பரிதாப நிலையைப் பூவ னூர் என் னும் தலத்தில் அவதரித்து ராசு முதலியார் என்னும் சிவத் தொண்ட ராய்ப் பூசல நாயனுரைப் போன்று, அத் திருக் களர் ஸ்தலத்தை முன் போலவே, திருப் பணி செய்வ தாக சதா பாவித்துக்கொண்டும், "தி ரு க் க ள ரீசன் றிருப் பணியை எவரைக் கொண்டு முடித்துக் கொள்வம்" என்ற இடையரு எண்ணத்துடன் இருந்து வந்தனர். முருகப் பெருமான் கலி யுக வரதரும் சிவ சொருபரு மாதலின், தம் இரு தொண்டர்க ளாகிய வீரமா முநிவர், இராசு முதலி யார்களின், எண்ணம் முற்றுப் பெறச் செய்யவும், அவ் வீரமா முநிவரும், தாமும், சிவ வடிவமே யாதலின், தம் முடன் ஐக்யப்படுத்திக்கொள்ள வேண்டு மென்ற எண் ணத்தினுல், தமக்குச் சுவாமி மலையில் கும்பாபிஷேகம் செய்ய வியற்றி யருளினர். இத் தகைய, ஈ றிலாச் சங்கற் பத்தால், இணை யடியார்கள், ஈ றிலா முயற்சியினுல், இணை யற்ற கும்பாபிஷேகம் செய்ய வேற்பாடு செய்தார்கள். அக் கும்பாபிஷேகத்திற்குத் தந வைசியர்கள், நம் வீரமா முநி வரை, விருப்புடன் வர வேணடு மென்று விழைதலும், விமலனும், விருப்புடன் வருவ தாக, இசைந்து வந்தருளி னர். அக் கும்பாபிஷேகத்துக்கு முற் கூறிய இராசு முதலி யாரும், சென் றிருந்தனர். இருவ ருடைய நல் வினையும் கூட்டுவிக்க, இருவருக்கும் சந்திப்பும் ஏற்பட்டது. இவ் வீரமா முநிவரது, அவதார விசேஷத்தின் பொலிவு, அந்த இராசு முதலியாருக்குச் சிவமே யெனத்தோன்றியது. "இப் பெருந்தகையாரே, நமது எண்ணத்தை இடை யின்றி

முடிக்கச். செய்யத் திருக் களரீசன் நமக்கு ஈந்தனர்'' என்று தெரிந்து, வீரமா முநிவரை, விதிப்படி வணங்கி, விநய பாவத்துடன் நிற்க, முநிவரர், யாரென்று வினவத் தமது வரலாற்றைச் சிறிது உரைத்ததுடன் திருக் களக்த் தல வரலாற்றைப் பல வகை யாக விரித் துரைத்தும், இப் போ துள்ள மேற்படி ஸ்தலத்தின் நிலமையையும், தெரி வித்தும், ''சுவாமிகள் வந்து ஒரு தரம் தெரிசிக்கின், எமது மநக் குறை நிவிர்த்தியா'' மென்றனர். அவ் வீரமா முநி வரும், திரு வுள முளதேல், ஆகுக, ''எமக்கும் தாம் மொழிந்தது போல், சிறிது எண்ண முண்டு,'' என்று மொழிந்து, கோவி லூரர் சென்றனர், ராசு முதலியாரும், தமது இருப்பிடம் சென்றனர், அது முதல், வீரமா முநி வருக்கு, திருக் களர், திருப் பணியின் எண்ணம் அதிக மாக வளர்ந்து கொண்டே யிருந்தது. அதற்கு இயைய, ராசு முதலியாரும், கோவி லூரர் சென்று, விதிப்படி வணங்கி, முருகன் சந்நதியில் சந்தித்து பேசியதை நினை வூட்டித், ''திருக் களர் க்ஷேத்திரத்துக்கு எழுந் தருள வேண்டு'' மென்று பல வாறு வேண்டினர்.

அதற் கியைந்து சுபதிநத்தில், அமரர்கள் வேண்டு கோளுக்கு இரங்கி, அறுமுகன் வந்தது போன்று, அவரு டன் திருக் களர் க்ஷேத்திரத்துக்கு வந்து, ஸ்ரீ பாரிஜாத வநேசுரரையும், அமிர்த வல்லியம்மையாரையும் தெரிசித்து, இரண் டொரு நாட்கள் தங்கி, திருப் பணி செய்யத் திரு வுளங் கொண்டு, அத் தொண்டரிடம் சிறுபான்மை செய் யலா மெனக் கூறி, அவர் மநதைச் சந்தோஷிப்பித்துக் கோவி லூருக் கெழுந்தருளினர்.

அதன் பின்னர், முத்தர் வணங்கும் வித்தகரின் சத்திய சங்கற்ப மானது, பயனை ஈயும் பொருட்டு நெருங்கி வர, முன்னர் வந்து சென்ற தொண்டர், மீண்டும் கோவி வந்து, ''வீர மா முநிவரை, விதிப்படி வணங்கி, எல்லா

ஆற்றலும் எளிதி லமைந்த இறைவனே, நீவிர் வந்து திருப் பணி தொடங்கின், இறைவ னருளால் இனிது முடியும்" என, இனிது வேண்டலும், அதற் கிசைந்து, சௌமிய ஞூ ஐப்பசிமீ 7உ ஆகிய சுபதினத்தில் திருக் களர் வந்து, சோம சுந்திரத் தபதி துணையுடன் பவத்திற் கஞ்சிய பக்குவிகட்கு அபயஸ்தம் கொடுத்தருளும் தம் திருக் கரங்களால், உளி கொண்டு கொத்தித் தச்சு செய்து, வேலை, ஆரம்பித்தரு ளிச் சுவாமி அம்மன் மற்றை பரிவார மூர்த்தங்களையும், வசந்த மண்டபத்தில் பாலாலயம் செய்து, நா லு கால பூசையை நன் முறையில் நடத்தி வரச் செய்தனர். அது முதற் கொண்டு, திருக் களரை ஆள வந்ததனுல், திருக் களர் ஆண்டவ ரென்னும் காரணப் பெயருடன் விளங்கிய தெய்வீகத் திரு வவதாரத் தேசிகோத்தமர் எடுத்த திருப் பணி, இனிது முடிவுறத், தமது அருள் வலியால், அன்ப ரிடத்தில், அ நே க ம் பொரு ளீட்டி, இடையுறுது முட் டின்றி, அண்ணிய தொண்டர்களின் அங்கப் பணியை அணி யாகக் கொண்டு, அரும் பணியை, அழ காகச் செய்து வந்தனர்.

இ ங் ங ன ம், ஆரம்பித்த மூன்ருண்டுக் குள்ளேயே, அந்தண ருருவாய் வந்து, ஸ்ரீ பாரிஜாதவனேச்சுரர் கனவிற் சொன்ன, குறிப்பின்படி, பெரிய ராஜ கோபுரமும், பெரிய திரு மதில்களும், அல்லா து, மற்றை, எல்லாத் திருப் பணி களையும், கருங் கல்லால் கண்டாரும், விசுவ கர்மாவும், வியக்கப் புதி தாகக் கட்டியும், பெரிய ராஜ கோபுரம், பெரிய திரு ம தி ல் க ள் இவைகளைப் பழுது பார்த்தும், சுவாமி அம்மன் முதல் எல்லா மூர்த்தங்களுக்கும் வெள்ளிக் கவசங்களும், த ங் க அங்கியும், வெள்ளி தங்கக் கிரீடங் களும், உத்ஸவத்துக்கு வேண்டிய தங்க வயிர நகைகளும், அமோக மாகச் செய்தும், சோடசோபசார, பூசை முதலிய வைகளுக்கு உரித் தாகிய எல்லா உபகரண சாமான்களும், எல்லாத் திப வகைகளும், எடு பிடி உபசாரத்துக் குரித் தாகிய, குடை சுருட்டி முதலிய, எல்லா வகைச் சாமான்

களும், நித்ய பூசை விசேஷ பூசைகளுக்கும், பெரு விழா முதலிய, எல்லா விழாக்களுக்கும், வேண்டிய எல்லாச் சாமான்களையும், இன்றென்று வேண்டுமென்று கருது வதற் கிடமில்லாது, பூர்ண மாகச் சேகரித்தும், பெரு விழாப் பத்து நாளைக்கும் உரித் தாகிய (24) இரு பத்து நான்கு வகை வெள்ளியிலும், மரத்திலும் வாஹநங்கள், தெய்வ லோகத்தி லிருந்து உயிருடன் வந்தனவோ, என்று நினைக்கும்படி, அணி பெற வியற்றியும், பஞ்ச மூர்த்திகளுக் கும் பஞ்ச ரதங்களும், ஐந்து தேர் முட்டிகளும், துர்வாச தீர்த்த முதலிய தீர்த்தங்களுக்கு, கற்படித் துறை முதலிய படித் துறைகள் கட்டியும், வேதாந்த மடம், குரு பூசை மடம், (3) மூன்று வேதங்கட்கு பாட சாலைகள், பசு மடம், நந்தநவநம், அக்ரகாரம், மற்றும், பல மாளிகை களைச் சிறப்புறச் செய்தும், தேரோடும் வீதிகளைப் புதிதாக சிறப்புற அமைத்தும், திருக் களர் க்ஷேத்திரத்தைக், "கருத் துயர் அறுக்கும் கைலாச" மென ஆக்கினர். நோக்கும் மற்றைய மதஸ்தர்களுக்கும், மற்றைய வுலகங்க ளாக கரு தும்படியும், தோற்ற மளித்தன. வருஷ மூன்றுக்குள் பல லெட்சம் ரூபாய் செலவு செய்து, வாத வூரடிகள் போன்று, தெய்வ சிப்பி யமைப்பிற் கொப்ப, செயற் கரிய சித்திரங்களுடன் திருப் பணி யாற்றி யருளிய வீர சேகர ஞர், அருள் விலி யிருந்த வாறு தான், என்னே! என்னே!.

18. இத் தகைய செயல், அவதார புருடர்க் கன்றி. மற்றையோர்க் கியலுங் கொலோ! அன்றேரது அநுக்ரகச் செயலும், நிக்ரகச் செயலும், அளவிடற்கு அரிய முறையி லிருந்த வாறு தான், என்னே! என்னே!.

19. இங்ஙனம் திருக்களர் க்ஷேத்திரத்தை தருக் கிளர் தண் சோலை சூழ்ந்த தெக்ஷிண கைலாசம் போல், ஆக்கி, இறைவன் றிரு வருளால், கும்பாபிஷேகம் செய்ய வெண்ணி, ஆலயம், யாக சாலை, முதலியவற்றை, சாத்திர முறைப்படி, அள வற்ற விசேஷங்களோடு கூட அலங்

கரித்தும், யாக குண்ட முதலியவற்றை யமைத்தும், எல்லா மங்கல ஒலிகளும் ஒலிக்க, விரோதி கிருது ௵ சித்திரை மாதம் 22௳ வியாழக் கிழமை பூர்வ பக்ஷம் சஷ்டி திதி சித்த யோகம் மிதுந லெக்நம் புநர் பூச நக்ஷத்திரம் கூடிய சுப திநத்தில் ஆதிசேஷனுலும், அளவிட்டுக் கூறற் கரிய முறையில், மிகுந்த விசேஷங்களோடு, கும்பாபிஷேகம் செய்தருளி, வேண்டுவர்க் கெல்லாம் வேண்டுவன, போதும் போது மென்னக் கொண்டல் போல் பொழிந்தனர். கும்பா பிஷேகத்தைக் கண்டு களிப்புற்றோர்கள் திரிவித காலத்தும் எத் தகையயோராலும், இத் தகைய கும்பாபிஷேகத்தை இயற்ற இயலா தென்று, வியந்து பாராட்டினர். இத் தகைய அருள் வலி யிருந்தமை தான், என்னே! என்னே!.

20. மேற்படி வைபவம் முடிந்தவுடன் கோவி லூருக்குச் சென்று, தன் னிலை யுணர்ந்து, முன் பல விசே ஷங்களோடு நடத்திவந்த, திரு நெல்லை யம்மையின் ஆடிப் பூர உத்ஸவத்தின் முறைகளைப் பல முறை யாக வகுத்துச் சிறிதும் தவருது, ஆராதனை முதல் வீதி வுலாவரையிலும் அனைத்தையும், ஏட்டில் எழுதுவித்தருளினர். இஃது சிவப் பணி குறையாது நடைபெற வேண்டு மென்ற சிவ நேச மும், தனக்குப் பின் வருபவர்கள் மநக் கிலேச முருதிருக்க வேண்டு மென்ற கருணையு மன்றோ? அங்ஙன மியற்றியது. மற்றும், அங்குத் தன் மாணுக்கர்களுக்குப் பாட மோதி வந்த வாசிட்ட ஞாந நூலினைப் புண்ணிய பாவநர் கதை யில், தீர்க்கதவ ருகிய தந்தை வியோக மாகும் சந்தர்ப்பத் தில், நிறுத்தியருளினர். அதனை நோக்குமிடத்து மாணுக்கர் களுக்கு பாட மோதுவித்தலி னின்றும் நீங்கித் தேக வியோக மாகு மென்பதைக் குறிப்பினுல் உணர்த்திய தாகும். அஃதன்றியும், திருக் களர் பிர்மமோத்ஸவத்துக்கு வருங் கால், தமது சகடத்தில் பூட்டிய இடபங்களை குறைந்த விலைக்கு விற்கும்படி செய்தருளினர். இனி மேல், "தாம் சகடம் ஏறுவ தில்லை" யென்பதைக் குறிப்ப தாகும். இத்

தகைய வுணர்ச்சி, ஏனையோர்க்கு யியலுமோ, நம், வீர சேகர ஞருக்கு இருந்த வாறு தான், என்னே! என்னே!.

21. பின்னர், வீர சேகரனுர் திருக் களர் வந்து, துரி தத்துடன் கும்பாபிஷேகத்தி லிருந்து 45ம் நாள் நடத்த வேண்டிய மண்டலாபிஷேகத்தை, வைகாசிமீ 13௳ வெள் ளிக் கிழமை யாகிய இரு பத் தைந்தாம் நாளிலேயே, நடத்த வேண்டு மென்று, ராசு முதலியார் முதலிய அன்பர்களிடத் தில் அருளலும், அவ் வன்பர்கள், அந்தோ! திருப் பணியி லும், கும்பாபிஷேகத்திலும், அனை வரும் மிகவும் நொந் திருக்கின்றன ராதலின், நாற் பத் தைந்து நாளும் செல்ல விடின் நய மென நவின்றனர். அதற்கு, நம் முநிவர் இரு பத் தைந்தாம் நாளிலேயே நடத்துவது, திரு வுளக் கருத்தா மெனவும், அருள் சங்கற்ப முன், மருள் சங்கற்பம், நிற்குங் கொலோ! ஆதலி னனைவரு முடன்பட்டனர். இவ் வால யத்தில் சித்திரை மாதம் நடைபெற வேண்டிய பிரம்மோத் ஸவமும், இத் தருணமே நடைபெற வேண்டு மென் றியம் பலும், அந்தோ! சுவாமிகள்! அவதார புருட ராதலின், சிரமம் தோன்ரு துறினும், எம்மனோர்க்கும், பணி யாட் களுக்கும்; இயலாத தாக விருக்கின்றதே, தமது திரு வுளப் பாங்கின்படியே' மேல் வருடம் திரு வுலா நடத்தின் யா மனைவரும் உட னிருந்து சிறப் பாக நடத்துவிக்கின்றோம்'' என்றனர். விருத்த ராகிய அருள் வலிச் சிவன் முன், மருள் வலிச் சுந்தரரின் வாதம் நிற்காதது போல, ம ரு ள் நோக்க முடைய மற்றையோர்களின் நோக்கு, அருள் நோக் குடைய வீர முநிவரின், நோக்கின் முன் நிற்குங் கொலோ! மே லாண்டு நடக்கும் விழாவை யா மிருந்து காணல் நிலை யாமோ வெனலும், எல்லா அன்பர்களும் ''அங்ஙனமே ஆகுக'' வென விசைந்தனர். பின், வீர மா முநிவர், அவ் வைகாசி மாதம் பூர்வ பக்ஷம் ச து ர் த் தி திதி புநர் பூச நக்ஷத்திரம் கூடிய சுபதிநத்தில், ஸ்ரீ அமிர்த வல்லி யம்மை சமேத பாரிசாத வநேரேசுவரருக்கு பெரு விழா நடத்தற்

பொருட்டு ரிஷபக் கொடி யேற்றியருளினர். இவ் வீர சேரேசரது, முன் னுணர்ச்சி யிருந்த வாறு, தான், என்னே! என்னே!.

22. தாம் உத்தமாம் பத வடிவா யுறையும் காலத்தை உணர்ந்த உத்தம ராம் வீரேச முநிவர், ராசு முதலியார் முதலிய வன்பர்களுடன் பத்து நாள் உத்ஸவத்தையும், பல சிறப்புக்களுடன், பஞ்ச மூர்த்திகளையும், பல வகை வாஹநங்களில், பல வ கை யலங்காரங்களோடும், பல வகைச் சிறப்போடு பலருங் கண்டு பாடும் படியான முறை யில், பல் பல நாத முழக்கங்களுடன் பாங்குற, நா லிரு விழா வரை நன் ருக வியற்றியும், ஒன்ப தாம் விழாவில் பஞ்ச மூர்த்திகளையும், ப ஞ் ச ரதங்களில் எழுந்தருளச் செய்து, ராசு முதலியார் முதலிய பல பக்தர்களைக்கொண்டு, பல ஆட்களைச் சேர்த்துப், பஞ்ச ரதங்களும், பவநி வரத் திரு வீதியில் ஈர்க்கச் செய்தனர் தாமும், தமது, அபயத் திருக் கரத்தால், திரு வடத்தைப் பற்றி ஈர்க்கலும், கணே சர், முருகேசர், தேர்கள், கரைபுரண் டோடி வடக்கு வீதி யின்கண் நிற்கவும், சுவாமியின் தேர் அதி விரை வாகச் சென்று, தென் வீதியின் கீழ்க் கோடியில் நிலைத்து நின்று விட்டது. அன்பர்கள் அதிக மாக முயன்றும் அசையவே யில்லை. அதனால், அருள் முநிவருக்கு, அருள் முத்தி யளிக் கும் நாள், அடுத்த நாள் என்பது உணர்த்தியது என்க. நம் வீர மா முநிவரும், அக் குறிப்பை, முன்னரே யுணர்ந்தவ ராதலின், அங்ஙன மாய தென் றறிந்து அருள் நோக்குடன் அரு ளிறையை அன்புடன் பணிந்து, அடியார்களுடன் ஆசிரமத்துக் கெழுந்தருளினர்.

அன் றிரவு, தம் மா ணு க் க ர் க ளு க் கு மறு நாள் நடக்கவேண்டிய அநேக கு றி ட் பு க் க ளை யுணர்த்தினர். இராசு முதலியார் முதலிய வன்பர்களுக்கு, இனி மேல் தேவாலயத்தில் நடக்கவேண்டிய காரியங்களை, நடத்திவரப் பணித்தனர். திநந் தோறும் பால் கொண்டு வந்து கொடுக்

கும் கிருஷ்ணன் என்னும் யாதவனிடத்தில், அன்ப, "இரண்டு திநம் தான் பால் தேவை நேரம் தவருது கொடுத்தி" யென வியம்பினர் கோவிலின் ஈசாநிய தசையில், தமது திரு மேனியைச் சமாதிவைக்கு மிடத்தையும், பரிவர்த்தனை செய்து, மடத்துக்குச் சொந்த மாக்கினர். குகைக்கு வேண்டிய கருங் கற்களையும், கணக் காக முன்னரே சேகரித்து வைத்தனர். அடியார்களிடத்தில், "நாளைக் கற்பூரமும், பூ மாலைகளும், அதிக மாக வேண்டிய திருக்கும்" என்றனர். இன்னும், பாரிசாதவநேசுரருக்குத் தெப்போத்ஸவம் நடத்த எல்லாச் சாமான்களையும் சேகரித்தனர். தெப்போத்ஸவம் எப்போது என்று வினவினவர்களுக்கு, "இவ் வருஷம் நடத்த இயலாததால் நிறுத்திேேறாம்" என்றனர். "வீரமா முநிவர், தொடங்கிய பணிகளில், இங்ஙனம் இயம்பியது என்று மில்லை, இன்று இவ் வணம் இசைத்தது என்னேயோ" வென்று ஒன்றும் தோன்ருது, அசை வற்றவரே யாயினர். இங்ஙனம், அநேக அறி குறிகளை அறிவித்ததும், அனைவரும் அநேக வித மாக ஆலோசித்து, அநேக ஐயப்பாடுகள் அடைந்தார்கள். முன் னுணர்வால், முற்றும் குறிப்பால், உணர்த்திய முழுக் கருணை தான், என்னே! என்னே!.

23. சண் முகப் பெருமானே பட்டபாதராகவும், திரு ஞாந சம்பந்த ராகவும், அவதரித்து, முறையே கரும பத்தி மார்க்கங்களை ஸ்தாபித்தும், சங்கரரே சங்கர ராக வந் தவதரித்து, அநேக மகிமைகளைக் காட்டி, ஞாந மார்க்கத்தை உலகின்கண் ஸ்தாபித்தும், தம் எதார்த்த வடிவங்களை, எய்தியதைப் போலச், சாக்கை வீரேசப் பெருமானே, நம் வீர மா முநிவ ராக, அவதரித்து, அனைவருக்கும் கர்ம பக்தி மார்க்கங்களை உபதேசித்து, நிலைபெறும்படிச் செய்தும், முடி வாகிய சங்கர கோவிலூர் அத்வைத ஞாந மார்க்கத்தை, அசைக்க முடியாத முறையில் அமைத்தும், அநேக மகிமைகளைக் காட்டியும், தமது அமல பத வடிவ மாக

அமர வேண்டு மென்ற சங்கற்பம் பூண்டபடி செய்து, உத் ஸவப் பத் தாம் நாள் காலையில், ராசு முதலியார் முதலிய அன்பர்களை அழைத்து, அன்பர்காள், "இன்று உச்சியம் போதுக்குள் ஐந்து ரதங்களும், அமரு மிடத்தில் வந்து அமர வேண்டும். ஆகையால், ஆட்களைச் சேர்த்து அதிவிரை வாக இழுமின்" என்று ஆஞ்ஞாபித்து, தாமும் எழுந்தருளித் தேர் வடத்தைத் தமது அபயத் திருக்கரத்தால், அன்போடு பற்றி ஈர்க்கலும், அதிவிரை வாக அருமை ரதமும், அங் ஙனே சென்றது. வீர மா முனிவரும், விமல ஆநந்தத்தால், விரிந்த முகத்தோடும் விரை வாகத் திரு மடம் வந்து, சிறிது இளைப்பாறி, அருள் நீ ராடி, பேறு மிக்க பெரு நீ றிட்டுச், சிவாநந்தச் சிற் றுண்டி யுண்டு, பாரிசாதவநேசுவரர் தேர் ஊர்வதில் நே ரிலா ஆநந்தம் பொங்க, வாத வூரர் மன்றத் துக்குச் சென்றது போன்று, திருத் தேரை நோக்கிச் சென் றருளினர். செல்லுங்கால், லயக் குறிப்பைக் காட்டுவ தாக ரத மானது, தெற்கு வீதியின்கண், துருவாச முனிவருக்கு, பாரிசாதவநேசுவரர் அருள் சுரந்து, ஆநந்தத் தாண்டவம் காட்டி யருளிய, நட ராசப் பெருமான் சந்நதியும், பிரம்ம தீர்த்த மேல் கரையு மாகிய முத்தி ஸ்தாநத்துக்குச் சென்று விட்டது. அச் சமயத்தில், அவ் விடம் எழுந்தளிய, நம் வீர மா முனிவருக்கு, அரன் றன், அருமை யடியார்கள் அறு பத்து மூவர் அருந் தொகையானது போல், நம் அமல மா முனிவருக்கும், அருமை யாகிய வருஷம் அறு பத்து மூன்றும் அமையப் பெற்றன.

அத் தகைய விரோதி கிருது வருஷம் வைகாசி மாதம் இரு பத் தேழாம் தேதி, சுக்ர வாரம், விசாக நக்ஷத்திரம், சுக்ல பக்ஷம், திரயோ தசி திதி, உச்சிப் போ தாகிய சுப திநத்தில், பாரிசாதவநேசுரர் ரதத்துக்கு முன் சென்று, பல் லாயிரம் சங்கங்கள் சூழ, வேதங்கள் ஒலிக்க, பஜனை ஒலிகள், சிவ நாம ஒலிகள், தேவார ஒலிகள், சங்க முதலிய எல்லா

வாத்திய ஒலிகளும், ஏக காலத்தில், கடல் ஒலி போல் ஒலிக்க, அப் பாரிசாத விறை இரதத்தின் வலப் பாகத்தினின்று, "அரகர மஹா தேவா" வெனப் பன் முறை புகன்று, ஆநந்தக் கூத் தாடிக் கொண்டு, இரண்டு திருக் கரங்களையும் சிரசின் மேல் குவித்துக் கொண்டு, இவ் வுடலை நீத்து, ஜோதி வடிவ சிவமே யாயினர். அத் திரு மேனியானது பூமியில் சாயும் போது, அருகில் நின்ற அந்தணர், தாங்கிக்கொண்டனர். கீழ் விழும் தருமங்களைத் தாங்குபவர் தக்கவரே யென்னும் குறிப்பும், தமக்குப் பின் தம் குரு ஸ்தானத்தை இவ் வணமே யாவரேனும் தாங்கிக்கொள்வ ரென்னும் குறிப்பு மாம். இத் தகைய அற்புத மான, நிர் வாண பத மாதலி னன்றோ! அந்தரியாமி யாகிய, பரமான் மாவின் அருளினால், சிருங்க கிரி ஜகத் குரு பீடம் ஸ்ரீ சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகள் அவர்கள்பால் தோன்றலும், அன்னார், "இன்று நமது மரபை வளர்க்கும் பெரியார் விதேக முத்தியை எய்துவர்" என்றருளினர். "வாத வூரடிகள் முதலியோர், ஜோதியுட் சென்று கலந்தனர்" என்பது நூல்களால் உணரப்படுகின்றது. அத் தகைய நிலையை ஆஸ்திகர் நம்புவ ரன்றி, நாஸ்திகர்கள் நம்பாது விடுவர். அத் தகையோர்க்கும் கண்கூடாக நம் வீர சேகரனார் விமல முத்தியை, அடைந்தமை, அத் தகைய நாஸ்திகரையும், அப் பெரியாரது அருள் நிலையை அங்கீகரிக்கும்படி வைத்தது, இவ் வீரேச முநிவரது, விமல மூர்த்தியின், பெருமை தான், என்னே! என்னே!.

24. இவ் வண்ணம், இவ் வீர முநிவரது, விமல முத்தியைக் கண்ட பல கணங்கள், பல நிமிட நேரம், பரவசமாய் ஒன்றுந் தோன்றாது, அசை வற்றவரே யாயினர்.

பின் விழிப் புற்றுப், பல் லாயிரவரும், பற் பல வா ருக இரங்கற் பாக்களைப் பாடினர். அவ் வனைத்தும் ஒன் று சேர்ந்து பெருங் கட லொழி போலக் காணப்பட்டன. அத்துடன் பிரமன் சபைக்குச் சிவ பெருமான் எழுந்தரு ளித், தேவரும், ரிஷிகளும், அன்பு மிகுதியினால், செய்வ தின்னது என் றறியாது, ஆநந்த பரவசர்களாய், எப்படி நடித்தார்களோ, அதைப் போல, முன் சொல்லிய பல் லாயிரவர்களும், பல இரங்கற் பாக்களைக் கூறியும், நினைத் தும், கசிந்தும், விழுந்தும், புரண்டும், ஆடியும், பாடியும், தேடியும், பிரலாபித்தும், இன்னும் பல விதச் செய்கையு முடைய ராயினர். அன் று திநம், திருக் களர் களரி யாகவே காணப்பட்டன. வித்தக ராகிய வீரசேகரனிடத் துப் பல ஜநங்களுக்கு இருந்த அன்பு தான், என்னே! என்னே!

25. இங்ஙனம், துருவாச முநிவர், போன் று, வந்து அருள் வலியால், அடைந்தவர்க் கருளும் பாரிசாத வநே சுரப் பெருமானுக்கு, அரும் பணிகள் செய்து, வாத வூ ரடி கள் போல், அவ் விறைவனது வடிவமே யான வீரேசப் பெருமான் விமல முத்தியின் பின்னர், வீரேசரது பல வடி யார்களிலும், தலைமை வாய்ந்தவரும், இரண்டா முறை பாடம் போதித்துக் கொண் டிருந்தவரு மாகிய அண்ணா மலை ஞாந தேசிக சுவாமிகளை, ஸ்ரீ ஆண்டவரின் குறிப்பின் படி வெள்ளி யங்கிரிச் சுவாமிகள் முதலிய அடியார்களும், தேவகோட்டை முருகப்ப செட்டியார் முதலிய தந வைசி யர்களும், சேர்ந்து, கோவி லூர் மடாலயத்துக்கு, ஆசிரிய ராக விருக்க வேண்டு மென் று வேண்டிக்கொள்ள லும், அன்னார், அதற் கிசைந்து, ஆசிரியர் ஸ்தாநத்தில் அமர்ந்

தனர். அவ் வண்ணு மலே ஞான தேசிகர், வீர மாதவரது விமலத் திரு மேனியை, அரிய பீடத்தின் மே லிட்டு, பல்லாயிர அடியார், அன்பர் குழாங்களுடன், அநேக வித அபிஷேகங்களை அள வின்றிச் செய்து, அநேக வித புஷ்ப மாலே முதலியவைகளால் அளவிட்டுக் கூறற் கரிய முறையில், அலங்கரித்தும், அநேக வித மான நைவேத்தியங்களுடன் சோடசோபசார பூசை முதலியவற்றை நடத்திப் போற்றி வணங்கிய பின்னர், பல வித புஷ்பங்களால் அலங்கரிக்கப் பட்ட புஷ்ப விமானத்தி லேற்றி, பல வைபவங்களுடன், வீதி வுலாச் செய்ய நிச்சயித்த போது, அது சமயம் ராசு முதலியார் முதலிய அன்பர்கள் வந்து, ரதங்கள் ஐந்தும், வடக்கு வீதியி லும், தெற்கு வீதியி லும், நிற்கின் றமையின், வீதி வுலாச் செய்வது, தடைப்படு மென்று கருதி, வீரேசர் சந்நதியில், தண்டம் போல் விழுந்து நமஸ்கரித்து, "வாத வூரடிகள் போல, தாங்கள் மஹாஞய் யாங்க ளனைவருங் காண முத்தி யடைந்தது உண்மையா யிருக்கின், இந்த ரதங்கள் ஐந்தும் உச்சிப் போதுக்குள் நிலேக்கு வந்து விடல் வேண்டு" மென்று பிரார்த்தித்தனர். அதன் பின்னர், ரதங்களை இழுக்கச் செய்தனர். வீரேச னருளால், ஐந்து ரதங்களும் நிலேக்கு வந்துவிட்டன. அதன் பின்னர், வீரேசரது திரு மேனியைப் பொலிவு மிக்க புஷ்ப விமானத்தில், பொலிவுற எழுந்தருளச் செய்து, செந் தூள் பறக்க, அன்பர்க ளனைவரும், ஆடியும், பாடியும், அமோக மாகத் திருவுலாக் கொண்டு சென்று, ஐந்து ரதங்களின் முன் நிறுத்தி, கற்பூர ஆரத்தி செய்யப்பெற்ற போது, பாரிசாத விறையின் ரதத்தி லிருந்து, உபய கருடன் தோன்றி, வீர முனிவரது விமானத்துள் சென்று பரிசித்து மறைந்தன. அம்மையும், அய்யனும், அங்ஙனம் தோன்றி, தன்னேடு ஐக்கியப்

படுத்திக் கொண்டதை குறிப்பா லுணர்த்திய தென்க. பின்னர், நான்கு வீதிகளிலும், கோலாகல வைபவத்துடன் திரு வுலாக் கொண்டு வந்து, முன்னரே முனிவரனார் திருவுளங் கொண்டிருந்த திருத் தலத்தின் ஈசானிய திசைக்கண் தேரோடும் வீதிக்கு வடபுற முள்ள பூமியில் வேத ஆகம விதிப்படி முன்னர் குறிக்கப் பெற்ற கருங் கற்களாலமைக்கப் பெற்ற குகையில், அடக்கம் செய்து, பல வித மான பொன், தங்கம், வெள்ளி, ரெத்நங்கள், அதி விட்டு, விபூதி, கற்பூரம், மஞ்சள், செந் தூள் முதலியவற்றால் பந்தனம் செய்து, பல வித மான ஆராதனைகள் செய்து, வணங்கிப் போற்றினர். அன்று தேவர்கள் பூ மாரி பொழிந்தது போல், சிறு மழைத் துளிகள் இடையறாது தூறிக்கொண்டே யிருந்தன. அன்று, திரு மேனிக் கபிஷேகம் செய்த தீர்த்த மனைத்தையும், துளி கூட விடாது, எல்லா ஜநங்களும் எடுத்துக் கொண்டு தம் தம் இருப்பிடம் சேர்ந்தனர். வீர முனிவர் விதேக முத்தி யடைந்த பின்னரும், விசேஷ மாக வைபவம் நடக்கும்படிச் செய்த அருட் சத்தியின் வலிமை தான், என்னே! என்னே!

26. பின்னர், அண்ணுமலை ஞாந தேசிகர், மூன்றாந் திநத்தில் செய்ய வேண்டிய மூன் றாங் கிரியையும் செய்து, மோக்ஷ தீப மென்னும் பத்தாங் கிரியையும், அளவிடற்கரிய அடியார் குழாங்களுடன் அமோக மாக அபிஷேக அலங்கார நைவேத்ய ஆராதனைகளைச் செய்தும், மகேசுவர பூசை நடத்தியும், அடியார்கள், மற்றும், ஏனைய அனைவருக்கும் ஈய வேண்டியதை இயல்புடன், போதும் போது மென்ன கொண்டல் போலக் கொடுத்தனர். மற்றும், பலர்

லிங்க வடிவ மாகிய நம் வீரேசருக்குப் பல வித உபயங் களும், பிரார்த்தனைகளும் நடத்தினர். பின்னர், சில மாணாக்கர்களாலும், தந வைசியர்களாலும், கொடுக்கப் பட்ட திரவியங்களைக் கொண்டு, அவ் வண்ணமலை ஞான தேசிகர், வீர முனிவரின் அதிஷ்டானத்துக்குக் கற்பக் கிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், விமாந முதலான வற்றை மிகவும், அழகு பொருந்தும்படி செய்து முடித்து, ஆநந்த வருஷம் தை மாதம் 21உ புதன் கிழமை சதுர்த்தி திதி உத்திர நக்ஷத்திரம் அமிர்த சித்த யோகம் மீந லெக்நத் தில், கும்பாபிஷேகமும், பல வகை வைபவங்களுடன் பாங்குறச் செய்து முடித்துப், பற் பல அடியார்களுக்குப் பற் பல தாநமும் செய்து, இரண்டு கால பூசையும் நடத்தி யும், மேற்படி பூசை நைவேத்யத்துக்கும், அடியார்களின் பிக்ஷைக்கும், பாரிசாத வநேசுவரர் கோவில் அமுது படிக் கும், விளை நிலம் வாங்குவித்து நடாத்திவந்து விதேக கைவல்ய மடைந்தனர்.

அதன் பின்னர், மகா தேவ ஞாந தேசிக சுவாமிகள் கோவிலூர் மடாலயத்தின் தலைமை ஏற்றுக்கொண்டு, பல வாறு விருத்தி செய்து கொண்டு, வேதாந்த போதகாசிரியராக இருந்து வந்ததுடன், தம் ஆசிரிய ராகிய வீர மாமுனிவரின் அதிஷ்டாநத்துக்கு திருப் பணி செய்யக் கருதி, பிரகார மண்டபம், உற்ஸவ மூர்த்தி ஆலயம், முன் ராஜ கோபுரம், முன் 16 கால் மண்டபம், முதலிய பல திருப் பணிகளை, அரிய பெரிய உரிய நய மிக்க கற்பணி யாக்கிப், பல வகைத் தீபங்களை அழகு வாய்க்க அலங்கரித்து, கண்டார்க்குக் கைலாச மெனவும், பணிந் தார்க்குப் பரம பத மெனவும், சிவாலயம் போலச் சிறக்கச் செய்து, பல வித வைபவங்களுடன் முன்னர் திருக் களர்

ஆண்டவர் சிவ பெருமானுக்கு நடத்திவந்ததைப் போல, நடத்தி வந்து கும்பாபிஷேகமும், பல சிறப்புகளுடன் செய்து முடித்து, அன்பர்களுக்கும், அடியார்களுக்கும், வேண்டிய வாறு கொடுத்து, விசேஷ சந்தோஷத்தை யடையும்படிச் செய்தனர். சாதுக்கள் போசநத்து விளை நிலங்களும் வாங்கி வைத்தனர். பின்னரும், அநேக அன்பர்கள், அநேக பிரார்த்தனைகள் செய்து, பிரார்த்தனைகள் ஈடேறி, அநேக கட்டளைகளும் நடத்தி வருகின்றனர். வீரமா முனிவர், ஜீவந் முத்தி தசையோ டிருக்கும் போது நடந்த, அநுக்ரக நிக்ரகச் செயல்களைக் காட்டிலும், விதேக முத்தி யடைந்து சமாதி கொண் டிலகும் அதிஷ்டானத்தில், நடக்கும் அநுக்ரக நிக்ரகச் செயல்கள் எளியன் மனதுக்கு எட்டிய வரையில், எழுத ஆரம்பிக்கின், எட்டி லடங்கா. எட்டாதவை, எண்ணக்கூடியவை அல்ல, இவ் வீரேசரது தவ வலிமை இருந்த வாறு தான், என்னே! என்னே!

27. இவ் வீரேசரது அதிஷ்டானத்தில், எல்லா அதிஷ்டானங்களைப் பார்க்கிலும், செல்வமும், சிறப்பும் ஓங்கியும், ஓங்கிக்கொண்டும், ஓங்கவும் இருப்பது, எல்லோருக்கும் கண்கூடே. இதற்கு விளக்கம் வேண்டாம். இவ் வீரேசரது விசித்திர மான அருள் வலியிருந்த வாறு தான், என்னே! என்னே!

வாழ்க, வீரேசர் பொற் கழல்கள்!

சுபம்! சுபம்!! சுபம்!!!

முற்றும்.

---

## திருவையாறு,
## ஸ்ரீ நாராயண சுவாமிகள் செய்த கவி.

---

நற்றுறவோ அன்போ நறியசெய லோவென்றும்,
வற்ருத மெய்ஞ்ஞான வன்மையோ—உற்றுலகில்,
வீரப்ப மாமுநியா மேவியவென் னக்களரில்,
ஆரப்ப ணிந்தோ மடி.

அன்பிருக்கு நல்ல அருளிருக்கு மெய்ஞ்ஞான,
இன்பிருக்கு மென்றே யியம்புக—கொன்பெருக்கும்,
தென்கழனி வீரப்பன் தெய்வத் திருக்களரான்,
மன்கழலைப் போற்ற வரின்.

மாதவர்க்குண் மாதவனய் மன்னுமெய்ஞ் ஞானவொளி,
யாதவனு யன்ப ரகத்திருளைக்—காதியின்பம்,
தந்துவக்கும் வீரப்ப சாமிபதங் கண்டக்கால்,
நந்துவக்கு மோமாந* நாண்.

---

*மாநம்—தேகாதி தாஞனவே சே ரபிமாநம்.

முற்றும்.



உ

சிவ மயம்

(கோயி லூர் மரபு) சிதம்பரம், கோ. சித. மடம்,

ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக சுவாமிகள் மாணுக்கர்,

திரு வை யாறு, அறு பத்து மூவர் மடம்,

*சித. நாராயண சாமிகள்,*

திருக் களர், வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் மீது

பாடிய,

## துறவு வேட்டல்.

---

கட்டளைக் கலித் துறை. (கவி 50)

அருளே வடிவா யமர்முனி யேயடி யாருளங்கொள்,
தெருளே திருக்கள ராய்வீர சேகர சின்மயனே,
உருளே யெனச்சுழல் சென்மத் துளைதர வோங்கிசிற்கும்,
இருளே யறவெற் கருளுதி யெங்க ளெழிற்குருவே. (1)

குருவே திருக்கள ராய்வீர சேகர கோதில்வன்னித்.
தருவாழ் வநத்துறை முத்துநா மேசன் றவத்தளியின்,
திருவே யெனவந்த ஞாநதி வாகர செவ்வமுறத்,
தெருவே திரிதரும் ஞாளியி னென்னைத் திரித்திடலே. (2)

திடரும் தெருவும் செறியும் வநமுந் திரிந்தடியேன்,
அடரும் பிறவி யழிதர நின்ற னடியிணையைப்,
படரு மனத்தொடு வாழ்தர வைக்குதி பண்ணவர்தம்.
இடரு மொழிக்குந் திருக்களர் மாதவ வெம்மிறையே. (3)

இறைமுத் திராமலிங் கேசனிங் கோன் கியற்றநினை,
அறமத் துணையு மொழியா தியற்றும் அருளிறையே,
நிறமொத்து வார்ந்த குழல்மட வாரை நினைக்கவிடாத்,
திறமெத்த நல்கெந் திருக்கள ராய்வீர சேகரனே. (4)

10

திருக்கள ராய்வீர சேகர ஞாந திநகரனே,
கருக்கிளர் வெம்பிற விக்கட லாழக் கனத்திழுக்குஞ்,
செருக்கினை மேவித் திரிய விடாதி தினமுஙின்ருள்.
மருக்கிளர் மாமல ரிட்டுநெஞ் சார வழுத்துவனே. (5)

வழுத்துவன் வாயின் வணங்குவன் சென்னியின் மன்ன
[நின்ருள்,
அழுத்துவன் நெஞ்சில் அருங்கழ னிப்பதி யண்ணலெந்தாய்,
விழுத்துணை வாவீர சேகர வென்னை விடாதிகண்டாய்.
புழுத்தசும் பாருடல் வாழ்வுமெய் யென்னப் புழுங்கிடவே

புழுங்குள நீத்தடி யேன்றுற வாரப் பொருத்துநின், [கும்,
கெழுங்குணத் தன்பர் தொழவின்னல் பாறிட வின்பளிக்
செழுங்கொண்ட லேவீர சேகர ஞாநமெய்த் தேசிகசீர்,
ஒழுங்கொன்று மாடத் திருக்கள ராயெங்கள் உத்தமனே 7

தமமே பெருக வுணவுண்டு போகத் தழுந்திநிற்க,
நமனூர் வெகுண்டு பிடித்துந்தி வெய்ய நரகினிடை,
அமையா தழுத்திடல் செய்யா தருநெறி யாரவைப்பாய்,
எமையாள் குருபர நல்வீர சேகர இன்னமுதே. (8)

இன்னமு தென்ன விருங்குடர் தோனரம் பென்பிறைச்சி,
துன்னுறு நாற்றம் பொதியுடல் நம்பித் துயரமுறத்,
தென்னை கமுகொடு நெல்லுஞ் செழிக்குந் திருக்களரில்,
மன்னுந் திருவீர சேகர வென்னை மடித்திடலே. (9)

மடிகொண்டு நன்மை மறந்துண் டுறங்கி மகிழ்ந்துநின்றன்,
அடிகொண்ட வன்பர் குழுத்தழு வாமல் அகன்றுநிற்கும்,
மிடிகொண்ட வென்னை விடாதருள் வாய்நல மேவுகின்ற,
படிகொண்ட சீர்த்தித் திருவீர சேகர பண்ணவனே. (10)

பண்ணமை பாடல் படைத்த திருக்களர்ப் பண்ணவற்கிங்,
கெண்ணருங் கோயி லியற்றியைந் தேரு மியற்றியெம்பால்,
தண்ணளி யுஞ்செய் திருவீர சேகர் தாழுமெனைப்,
புண்ணமை பொய்யுடல் போற்றிட வின்னும் புகுத்திடலே.

புகுந்துநின் றன்பர் குழுவினிற் சார்ந்தும் புலன்களிலே,
நகுந்தர மாகக் கிடந்துழ லாம னடத்திலெனைத்,
தகுந்தண் ணளிக்கென நின்றனக் கேபுகழ் தங்குநலம்,
தொகுந்தண் டிருக்கள ராய்வீர சேகர தூமணியே. (12)

தூயவர் நெஞ்சிடைத் தோன்றுஞ் சுடர்ஞானத் தூவெளி
நாயக நல்வீர சேகர வாரிய நற்றவனே, [யே,
பாயவிம் மண்டிணி ஞாலத்தின் வாழ்விற் படருமெனை,
நேயமோ டுற்று நினதடி போற்ற நிறுத்துதியே. (13)

நிறுத்துதி நின்னன்பர் கூட்டத்தி லேயெனை நேர்மலத்தை,
யொறுத்துப் பெருந்தொடர் மெய்ப்பொருள் கண்டிங்குள
இறுத்தற் பொருட்டு நினைந்தன னைய இராகமெலாம்,[மிறக்க,
கறுத்துக் கழித்த திருவீர சேகர கண்மணியே. (14)

கண்ணாரப் பெண்ணுரு வொன்றையுங் காணுக்
[கருத்துடைய,
அண்ணா லுனையடுத் தேனென்னை யென்று மவாக்கடலில்,
எண்ணா தழுந்த விடாதிகண் டாய்நல் லெழில்வளஞ்சேர்,
மண்ணாந் திருக்களர் வாழ்வீர சேகர மாதவனே (15)

மாதவர் வாழும் கழனிப் பதியில் மறைமுடிவு,
போதவு மாய்ந்துரை போதப் பொருடனைப் புந்தியுறப்,
போதனை செய்தருள் புண்ணிய பொய்யிற் புத்தவிடாய்,
சீதள மான திருக்கள ராய்வீர சேகரனே (16)

கரமு ஞமலியும் போலத் திரிந்து கனைகணல்லாச், [ருன்,
சிரமஞ்செய் காமச் சிறுமைகொண் டேனைத் தெழித்திவன்
நரமந்த னென்றிக மூதருள் வாயெங்கள் நாயகமெய்,
வரமுந் தருமமு மேவுந் திருக்களர் மாமுனியே. (17)

முனிதத் துவஞான முத்திரா மேசன் முதற்றளியே,
புனிதத் தளியெனச் செய்தருள் புண்ணிய பூவுலகில்,
மனிதப் பிறவி யெடுத்து மறந்து மயங்குமெனை,
யினிதொற்றி யாள்குதி யாய்வீர சேகர வெள்ளிடலே. (18)

எள்ளத் துணையும் பெற்றும்பொரு ளிஃதென வெண்ணலின்
பள்ளப் படுகுழி யாமைம் புலத்திற் பதுங்குகின்றேன். [றிப்,
அள்ளற் பிறவி யெடுத்திங் கெவரையு மாதரிக்கும்,
தள்ளைத் திருவீர சேகர வென்னையுந் தாங்குதியே. (19)

குதிகொண்டு காமங் குரோதமென் பாலே கொழுந்துவிட்
பதிகொண்டு நின்று படரா தறுத்திடப் பண்ணவனே, [டுப்,
கதிகொண்ட ஞானச் சுடர்வாளை யீகுதி காழியர்கோன்,
துதிகொண்ட நற்களர்த் தண்வீர சேகர தூமணியே (20)

மணிமறை மாமருந் தாகியஞ் ஞான மறைப்பெனுமோர்,
பிணியறுத் தன்பர் பிரத்யக பின்ன பிரமமெனத்,
துணிவுறச் செய்யும் திருவீர சேகர துன்பவழி,
யணிதரு மென்னையும் ஆண்டருள் செய்குதி யாண்டவனே.

ஆண்டுகள் திங்கள் அகவைக டோறு மழுதரற்ற,
மாண்டுகக் கண்டுமிம் மண்ணிடை வாழ்வுறும் வாழ்க்கை
வேண்டி வினைபல செய்துழ லாமல் விடுத்திதவம், [தனை,
பூண்ட திருக்கள ராண்டவ இன்பம் பொழிந்தவனே. (22)

பொழிலேழும் வந்து வணங்கவை ராகம் புரிதவங்கொண்,
டெழிலொரு ஞானம் பெறவரு வார்க்கருள் எங்கனைய,
கழுவா யிலாத நெறிபுகு வேனையுங் கைகொடுத்து,
வழுவா துறச்செய்தி மன்வீர சேகர மாதவனே. (23)

மாதவர் வேடம் புனைந்து மறநெறி வைகியையோ,
நோதக நின்றுத ளர்ந்தன னென்னையும் நோக்கியையா,
பாதகந் தீர்த்திநல் லோயென்றும் வந்துன் பணிதனையே,
மேதக வேபுரி வேன்வீர சேகர மெய்க்குருவே. (24)

குருபர மாதவ கோமள ஞானக் கொழுஞ்சுடரான்,
திருவரங் காதலித் தார்க்கருள் செய்துட் டிமிரமெலாம்,
பருவர லெய்திட நோக்குறு நோக்குமென் பாலமைத்துக்,
கருவர ளிக்குதி மன்வீர சேகர காவலனே. (25)

காவல்கை விட்டுக் கரைகடந் தோடுங் கறையுளத்தை,
நீவலி யாற்றடுத் திங்குநின் பொன்னடி நேரவைத்து,
கோவலி யாறப் புரிகுதி நன் னூல் நுழைபுலத்து,
நாவலர் வாழுந் திருக்கள ராயெங்க ணற்றவனே. (26)

நற்றவ தென்கழ ளிப்பதி வாழ்நெல்லை நாயகிக்கும்,
கொற்றவொள் வாளிறை வற்குங் குலவுறக் கோயினனி,
கற்றவர் செய்யு ளெனப்புரிந் தோய்கொடுங் காமமதால்,
வற்றவி டாயெனை மன்னுந்தி ருக்களர் வாழ்குருவே. (27)

வாழிய நின்கழ லென்னச் சொல்நா வறண்டுநனி,
பாழ்தரு வாழ்வைப் பறைதர நாளும் பதறிநின்று,
வீழ்தர வென்னை விடாதி விராக விறலுடையாய்,
சூழ்தரு சோலைத் திருக்களர் வாழுந் துறவரசே. (28)

துறவற வாழ்வே தூயநல் வாழ்வெனத் தோன்றநின்பால்,
அறவர சேயடைந் தேனந்த வாழ்வி லழுத்தமுடன்,
இறைகொளச் செய்தடி யேனையுந் துன்பமி லின்புருவாய்,
நிறைதரல் காட்டுதி வெல்வீர சேகர நின்மலனே. (29)

நின்மல நிச்சல மான மநத்திடை நேர்ந்தொளிரும்,
மன்மலர் ஞான வழிவயி ராக மடுத்திடநின்,
பொன்மலை சேவடி போற்றுகின் றேனருள் பூத்தொளிர,
நன்மலர் வாவித் திருக்களர் மாதவ நல்குதியே. (30)

நல்குதி ஞான வயிராக மெற்கு நலஞ்சிறந்து,
மல்குதி ருக்கிளர் மாதவ மாதர் மயல்வருத்த,
ஒல்கி மெலிந்து தளர்ந்தன னிந்நிலை யொழித்துலவப்,
புல்குதி மெய்வீர சேகர ஞான புரந்தரனே. (31)

புரந்தரன் மாலயன் போற்றச் சிறந்து புவனியிலே,
வரந்தர வந்தரு ளும்வீர சேகர வாழுகைக்கா,
நிரந்தர மாகப் பொருடனைத் தேடி நெரியுமெற்குத்,
திரந்தர மான நிலைபெறும் வாயில் தெரிவிப்பையே. (32)

பையுள் பெருக்கு முடம்பென்பு தோனரம் பாரிறைச்சி,
பெய்யு முதிரங் குடர்கொழு வாகிப் பெருகுபித்தம்,
ஐயுஞ் சிதற லறிந்தன னேனு மவாப்பெருக்கி,
நையு நிலையொழிப் பாய்வீர சேகர நாயகனே. (33)

நாயக மாகப் பதிகளுக் கெல்லா நறுந்துறவோர்,
தாயக மாகிய கோயிலூர் மேவுந் தவத்தலைவ,
சேயனை யைய திருவீர சேகர செல்வமெனுந்,
தீயக ருங்கடல் தள்ளிவி டாயுனைச் சிந்திப்பனே. (34)

சிந்தித்து மாயும் பொருடனை யீட்டச் சிறியவரை,
வந்தித்து வாழும் வழக்கொழிப் பாய்எற்கு மன்னமிழ்தச்,
சிந்தொத்த தண்ணளி யாய்வீர சேகர சேர்ந்தவர்கட்,
கிந்தொத்த வாநநத் தோடருள் வானிங் கிருப்பவனே. (35)

பவநோய் பிடித்து வெந்தாபம் பழுக்கப் பனித்தடியேன்,
அவமே தளர்ந்தன னையா திருக்கள ராயறிவாய்,
தவமே பொருந்தித் திருவீர சேகர தத்துவமாஞ்,
சிவமே பெறவிழி வைக்குதி யென்பாற் றிருத்தகவே. (36)

திருத்தக வாழ்பவர் மேவுந் திருக்களர்த் திப்பியமாம்,
நிருத்தம தாரக் காண்டுரு வாச நிமலநிறை.
பொருத்த திருவீர சேகர ஞாநம் பிறங்கவெனை,
யருத்தி யில்லாதிங் கமரவைப் பாய்நன் காதரித்தே. (37)

ஆதர வின்றி யலைந்து திரிந்தே னதையறிந்தும்,
நோத லொழித்திலை வெம்பவ நோய்கள் நொறுங்கிடவே,
தீதறு நற்றுற வாநெறி சேரத் திருக்களர்வாழ்,
மாதவ மாவீர சேகர நல்ல வரமருளே. (38)

வரமார் திருக்களர் மாமுனி யேமெய்ம்மை மன்னுமன்பர்,
சிரமா ரடிபணிந் தேனடி யேனுந் திடம்பொருந்தும்,
உரமார் தருவழி யாந்துற வார்தர வுற்றுதவி,
திரமா வருளுதி யெம்வீர சேகர திவ்வியனே, (39)

திவ்விய மாகுந் திருக்கள ராய்ஞான தேசிகவாய்,
கவ்விய வாமகக் காத்திடும் பூசையிற் காத்தியெனை,
வவ்விய வுள்ளிரு ளோட்டிடும் ஞான வளந்தரவே,
செவ்விய தண்ணளி யாய்வீர சேகர தேசிகனே. (40)

தேசமு டன்கால வத்துப ரிச்சேதந் தீர்த்திடவே,
ஆசற யானிருக் கின்றே னெனநன் றறிந்துவக்கப்;
பாசம கோட்டுந் துறவுகொண் டாரப் பளகறுக்கும்,
தேசுறு ஞானத் திருவீர சேகர செய்குதியே. (41)

செய்யுட் கரும்புசெஞ் சாலி செழிக்குந் திருக்களராய்,[யான்,
மையின் மனத்தொளிர் மெய்ஞ்ஞான தேசிக வைகலும்
நையும் வினைபுரிந் தெய்ப்புற னீங்க நடாத்திகண்டாய்.
வையம் புகழ்வீர சேகர நின்னை வழுத்துவனே. (42)

வழுவா நிலைகொண்ட மாதவர் என்றும் வழுத்தநனி,
தழுவா வருள்வீர சேகர ஞான தயாபரனே,
புழுவாய்ப் பிறக்கினும் போகத் தழுந்தல் புறக்கணித்துத்,
தொழுவா யருளுதி நின்னையெஞ் ஞான்றுந் துயரறவே (43

துயருற லற்றின்பந் துய்த்திட வெண்ணித் துறந்துமையோ,
அயர்வுகொண் டின்னல் வழிபடார்ந் தென்று மலைந்தனிச்,
செயிர்வழி மாற்றுதி மெய்வீர சேகர தீங்குறுத்தும்,
மயர்வறயார்க்குமெய்ஞ் ஞானம் வழங்கும் வரோதயனே.44

வரமார் புகழ்கொளுங் கோயிலூர்த் தண்ணளி மாநிதிபால்,
வருவீர சேகர மாமருந் தேமுத்தி வாழ்வளிக்கும்,
திருஞான பண்டித தீயா வரணத் தெறுவிடங்கொன்,
றுரமார் தரச்செயு முன்னர்த் துறவி லுறப்புரியே. (45)

புரிந்து படித்தனன் நூல்பல நன்கு புவனியில்வாய்,
நெரிந்து வருந்தப் புகல்வ னருணெறி நின்றறியேன்.
தெரிந்தெனே யாடரி னின்புக மாரச் சிறக்குமன்றே.
விரிந்தமெய்ஞ் ஞானத் திருவீர சேகர மெய்ப்பொருளே. (46

மெய்ப்பொருள் சீவ சிவபேத மற்று விளங்கறிவாம்,
பொய்ப்பொருள் மாயை யுலகங்க ளென்னப் புலங்கொளச்
வைப்பக மாங்கள ராய்வயி ராக வழியிலெனே, [சீர்,
உய்ப்ப விரும்பின னுள்வீர சேகர வுத்தமனே. (47)

உத்தம னத்த னுடையா னெனத்தின முன்றனையே,
நத்திவ ணங்கின னன்ஞான மார்க்க நலந்தருவாய்,
சித்தம கிழ்ந்திறை வன்னடஞ் செய்யுந் திருக்களர்வாழ்,
புத்தமு தேவீர சேகர மாதவப் பூதரமே. (48)

பூவா லருச்சனை நாளும் புரிந்துன் புகழ்தொடுத்து:
நாவா லுரைத்துனைக் கும்பிட்டு நின்று நறுந்துறவில்,
ஓவா துறைதர வெற்கருள் செய்குதி யோங்குபுகழ்,
தாவா தடைதர வாழ்வீர சேகர சற்குருவே, (49)

சச்சிதா னந்த வடிவ நமது தனிவடிவம்,
பொயச்சக மில்லை யெனத்தெளிந் தாறப் புலன்களையான்,
இச்சைசெய் யாமல் இறைவீர சேகர எற்குனதாள்.
நச்சி வழிபட நாளுந் தருகுதி நல்லருளே. (50)

ஸ்ரீ வீர சேகர ஞான தேசிகர் திரு அடிகளே சரணம்.

---

உ

சிவ மயம்

கோவிலூர் மடம்,

ஸ்ரீ அண்ணாமலை ஞான தேசிகர் மாணாக்கர்,

வேதாரண்யம். பொ. க. சாதுக்கள் மடம்.

## ஸ்ரீ மகேசுவராநந்த சுவாமிகள் எழுதியது, திருக்களராண்டவர் பாராட்டுரை.

---

இவ்வுலகில் பரமேசுவரன் பக்தர்களின் அநுக்கிரகத்தின் பொருட்டு, பல விதமான திரு விளையாடல்களைச் செய்த நாடு பாண்டிய நாடென்பது பிரசித்தமாம். அத்தகைய பாண்டிய நாட்டில் கோவிலூர் மடாலயம், ஒன்று கன்னியாகுமரி, முதல் ஹிமாலயம் வரையும்; பிரசித்தி பெற்றுள்ளது. அத்தகைய மடாலயம், திருநெல்லையம்மையுடன் நேரே பல தடவைகளிலும், சம்பாஷணை செய்து கொண்டிருந்த ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகரால் நிர்மாணஞ் செய்யப் பெற்றுச் சுமார் 25 வருட காலமாக வேதாந்த பாடங்களைத் தன்னைச் சரணடைந்த அடியார்களுக்கு உபதேசித்து, அந்திய காலத்தில் தம் சீடருள் ஒருவரான துறவாண்டவரென வழங்கும் ஸ்ரீ அருணாசலசுவாமிகளை நியமித்து, ஷை சுவாமிகளுக்குப் பின், கருணாநிதி என வழங்கும் ஸ்ரீ சிதம்பர சுவாமிகளை நியமிக்கும்படி ஆக்ஞாபித்து சிவ பதத்தை யடைந்தனர் மேற்படி துறவு சுவாமிகள் ஒரு வருடம் அடியார்களுக்கு, ஆன்ம ஞானமுபதேசித்து அந்திய காலத்தில், கருணாநிதியை நியமித்துச் சிவ பத மடைந்தனர் மேற்படி கருணாநிதி ஸ்வாமிகள்

நீண்ட காலம் அடியார்களுக்கு, ஆந்மோபதேசஞ் செய்து, அந்திய காலத்தில், தம் அடியவருள் ஒருவ ரான காரைக்குடியில் அவதரித்த இராம சாமிச் சுவாமிகளை நியமித்து சிவ மாக இருந்தபடியே இருக்க லாயினர்.

ஷை இராம சாமி சுவாமிகள், கொஞ்ச காலம் அடியார்களுக்கு ஆத்மாபதேசஞ் செய்து, தம் அந்திய காலத்தில் தமது சகபாடியா யிருந்த புது வயலில் அவதரித்த ஸ்ரீ வீரப்ப சுவாமிகளை நியமித்துச் சிவ பத மடைந்தனர். மேற்படி வீரப்ப சுவாமிகள் மடத்தில் பற்றில்லாமல், பரம வைராக்கிய சாலியாகப் பல புண்ய ஸ்தலங்களில் சென்று, கைப் பிக்ஷை ஏற்று புசித்துச் சதா காலமும், பிரம்ம நிஷ்டராய், காலங் கழித்து வந்தனர். ஷை சுவாமிகளின் மாதா பிதாக்கள் பிள்ளை யில்லாமல், புது வயலின் சமீபத்தி லுள்ள சாக் கோட்டையில் வீர விருக்ஷத்தின் அடியில் பக்தர்களின் அநுக்கிரஹத்தின்பொருட்டு எழுந்தருளியிருப்பதால், வீர சேகர னெனப் பெயரி பரமேசுவரனைப் பூசித்து அவரது அநுக்கிரஹத்தால் அவதரித்ததால் வீர சேகர னென அக் குழந்தைக்குப் பெயர் வைத்தனர்.

மேற்படி சுவாமிகள் சிறு குழந்தை யாய்ப் பள்ளியில் பயின்று வருங் காலத்திலேயே பூர்வ புண்ய வசத்தால் இல் லற வாழ்க்கையில் வைராக்கிய முண்டாகத் துறந்து, கோவி லூரில் எழுந்தருளி யுள்ள கருணா நிதி என வழங்கும் சிதம்பர ஸ்வாமிகளின் திரு வடிகளைச் சர ணடைந்து மெய் ஞானம் பயின்று, சின்னாள் அடியவருடன் கூடி யிருந்து, குரு சேவை செய்து, சிறப் புற்று வாழுங் காலத்தில், குரு மூர்த்திகள் சிவ பத மடைய, பொன்

னம்பல ஸ்வாமி முதலிய பெரியோர்களுடன் கூடி தீர்த்த யாத்திரை செய்து, சின்னுள் சிதம்பரத்தில் வாசஞ் செய்து, வருங் காலத்தில் கோவி லூரில் எழுந்தருளி யிருந்தவரும், தம் சகபாடியு மான ஸ்ரீ இராம சாமி சுவாமிகள் தன்னை மடாதிபதி யாக நியமித்து சிவ பத மடைந்ததைக் கேள்வி யுற்றும், கோவிலூருக்குப் போகாமலே, மேற்படி மடத் தில் பற்றில்லாமல் சிதம்பரத்திலேயே வாசஞ் செய்து வந் தனர். அக்கால் பல அடியவர்கள் சென்று, கோவிலூருக்கு எழுந்தருள வேண்டு மென் றழைக்க, பிக்ஷை ஏற் றுண்டு பெரும் பத மடைதலே நன் றென்று சொல்லி மடம் வேண்டாமென் று மறுக்க, பின்னர், பொன் னம்பல சுவாமி கள் முதலிய பெரியோர்கள் நிர்ப்பந்தஞ் செய்து, கோவி லூருக்கு அழைத்துச் சென்று, குரு ஸ் தா ந த் தி ல் எழுந் தருளச் செய்து, தன்னைச் சர ணடைந்த மக்களுக்கு ஆந் மோபதேசஞ் செய்தலே, பிக்ஷை ஏற் றுண்டு பிரஹ்ம நிஷ்டையில் இருத்தலைப் பார்க்கிலும் மிக்க மேன்மையா மெனக் கூறி குரு ஸ்தாநத்தில் அமர்த்தினர்.

மேற்படி குரு ஸ்தாநத்தில், அடியார்களுக்கு ஆந் மோபதேசஞ் செய்தும், கொற்ற வா ளீ சு ர ர் , திரு நெல்லை யம்மன் ஆலயத்தை நன்கு திருப் பணி செய்து, சிறப் பாகக் கும்பாபிஷேகம் நடத்தியும், நகரத்தார்களை ஆலயத் திருப் பணி, வேத பாட சாலை, தேவார பாட சாலை, சத்திரம், பசு மடம், ந ந் த வ ந ம் முதலிய சற்காரியத்திற் செலுத்தி அநுக்கிரகம் செய்தும், வைராக்யம், சதாசாரம் ஞாநோபதேசம் முதலியவற்றால் சீடர்களுக்குச் சிறப்பைச் செய்தும், வைராக்யம் அசேஷ சாஸ்த்ர பாண்டித்யம் சதா சாரம், முதலியவைகளால் சிறப்பு வாய்ந்த சீடர்க ளாகிய, ஸ்ரீ அண்ணு மலை ஞாந தேசிக சுவாமிகள், ஸ்ரீ மகா தேவ ஞாந தேசிக சுவாமிகள், ஸ்ரீ சு ப் பை ய ா ஸ்வாமிகள்,

ஸ்ரீ காசிகாநந்த ஸ்வாமிகள், ஸ்ரீ சிவாநந்த ஸ்வாமிகள், ஸ்ரீ நாராயண ஸ்வாமிகள், முதலிய அடியவர்களால், காசி முதல் கன்னியா குமரி பரியந்தமும், தனது புகழ் பரவப் பெற்றும், சோழ நாட்டில் சம்பந்த ஸ்வாமிகளால் பாடல் பெற்ற திருக் களரென்னும் திவ்ய க்ஷேத்திரத்தில், சீரணித் திருந்த சிவாலயத்தைச் சிறப்பாக அமைத்து, கும்பாபிஷேகம் செய்து, தேர்களையும், வாகநங்களையும் புதிதாகச் செய்து, பிரம்மோற்சவம் நடத்தி வருங் காலத்தில் வைகாசி விசாகத்தில் தெற்கு வீதியில் முதல் நாள் நிலை பெற்றிருந்த ரதத்தை, மறு நாள் சுமார் 11மணிக்கு அன்பர்களோடும், அடியார்களோடும் இழுக்க, சக்கரம் நிலை பெயர்ந்து நகர்ந்த சமயத்தில் இரு கரங்களையும் சிரமேற் கூப்பிக் கொண்டு அரஹர மகா தேவ என்று சொல்லிக் கொண்டே பாரிஜாத வநேசுவரரோடு, ஐக்ய மாகி விட்டார்கள். திருமேனி பின் புறம் சாய சமீபத்திலிருந்த அந்தணர்கள், அடியார்கள் அத் திருமேனியைக் கரத்தாற் றூங்கி எடுத்து வந்து மடத்தில் வைத்து, அபிஷேக ஆராதனை செய்து, பின் சமாதி வைத்து, ஆலய மமைத்து நித்தியப் படி பூசை நைவேத்தியமும், வருஷாந்தக் குரு பூசையும் சிறப்பாக நடந்து வருகின்றன ஆண்டவர் சந்நிதானத்தில் பிரார்த்தனை செய்து, வழிபடுகிற அன்பர்களுக்கு, இன்று கண்கூடாக இஷ்ட சித்தி நடந்து வருகிறது. உலகப் பிரசித்தம். இத் தகை மகிமை வாய்ந்த வீர சேகர ஞாந தேசிக ருடைய அளவு கடந்த திரு விளையாடல்களில், அடியேனது சிற்றிவுக்கு எட்டின வளவில், சில திரு விளையாடல்களை எனது மனதும், வாக்கும், தூய்மை யடைதற் பொருட்டு, எழுதி முடித்துச் சுவாமிகளின் திரு வடிகளுக்கு அர்ப்பணஞ் செய்கிறேன்.

மஹேசுவராநந்த கிரி சுவாமி,

பொ. க. சாதுக்கள் மடம், வேதாரண்யம்.

---

உ
சிவமயம்.
ஓம் : தத் சத்:
பரப்பிரஹ்மணே நம:

சோம சுந்தர ஞாந தேசிகர் மாணுக்கர், மதுரை, பிரஹ்மாநந்த சாமி மடம், சிவ ஞாந போத வேதாந்தப் பிரகாசிகை உரை யாசிரியர்:

*சிந்மயாநந்த சுவாமிகள் எழுதியது.*

திருக் களர் ஆண்டவ ராகிய

## ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகரின் வர லாறு.

---

விருத்தம்.

பகவிலா மெய்மை பதிதர நெல்லிப்
பழமென வுரைத்திடு பவனைச்,
சகமெலா மின்ன றவிர்த்தின்ப முறவே,
தகுதிகொள் ஞாநநூல் தளிர்த்துத்,
திகழ்வதாம் கோயி லூர்தனி லிருந்து
திருக்களர்ப் பதிதனை வணங்கிப்,
புகழ்மல ரேத்தும் வீரசே கரமா
புநிதனைத் தொழுதுவாழ்த் திடுவாம்.

திருவுறு மெய்மைத் திறத்தினை யார்க்கும்
தெளிவிக்க வருளுருக் கொண்டு,
மருவுறு சோலைக் கோவிலூ ரதனில்
மன்னியே மாயைக் கெடுத்திங்,
குருவுறு களரில் தங்கியே வந்த
வுத்தமர்க் கருளிடும் ஞாநத்,
தருவினைக் கண்டு மும்மலத் தாபம்
தவிர்ந்திடத் தாடலைக் கணிவாம்.

மலர்தரும் பலப் பல உலக மனைத்தையுஞ் செலுத்துத லாலும், வேதாகம புராண அளவைகளையும், மற்று முள்ள வருணாச்சிரம முத லான கட்டுப்பாடுகளையுங் கடந்திருத்த லாலும், எல்லாம் வல்ல இறைவன் ஒருவன் உண் டென் பது, மக்க ளனைவருக்கும் ஒப்ப முடிந்த கருத்தே யாகும்.

அத் தகைய உண்மைப் பொருளைச் சாதந சதுட்டய சம்பன்னர்க ளான மக்களுக்குப் பக்குவம் நோக்கி அறி வுறுத்தற் பொருட்டு ஆசிரியர் ஒரு தலை யாக வேண்டற் பால ரன்றோ? அவ் வாசிரியரும், முழு முதற் கடவுளின், அநுக்கிரக வ டி வ ரே யாவர், என்பது சகல நூல்களின். கருத் தாகும்,

"அருவ னுயினு மன்பர்க் குருவனாய்,
வருவ னென்பது மாமறை சொல்லுமே".

"புருட னென்றுரை செயப்படு வதுபரி பூரண மாகின்ற,
சொருப நின்றவா நிற்கவிங் கருளொடு தோன்றவல்
[லவன்றனே.
ஈச னிங்கருள் செய்யவந் திருக்கிற விடமிவன் றிருமேனி"

என்ற ஆன் றோ ர் வாக்கியங்களால் இ த னை அறிய லாம்.

வேதாகமங்களிலும், சமய நூல்களிலும். இலை மறை கா யென மறைந்து கிடந்த அத்வைத நெறியை உல கெல் லாவற்றிற்கும், வெளிப்படையாய் எ டு த் து உபதேசஞ் செய்தருளியவர், ஸ்ரீ சங்கர பூஜ்ய பகவத் பாதாசிரியரே என்பது துணிபு. அவரால் எடுத் தாளப்பட்ட அத்துவிதக் கொள்கை, எச் சமயத்தாராலும், மறுத்தர்க்கியலாத தாம். அந் நெறியே, எல்லாச் சமயங்களையும் வெற்றிகொள்வது மாம்.

பரத கண்டத்திலே பாண்டிய நாட்டின் கீழ்த் திசையில், மதுப் பிரிய ரிஷி வேண்டுகோளுக் கிணங்க, ஸ்ரீ ராஜகட்க பரமேசுவரர், ஸ்ரீ சாலிவாடீசுவரி யென்னும் அம்மையாரோடு எழுந் தருளப் பெற்றதும், மது புட்கரணி யென்கிற தீர்த்தத்தோடு கூடியதும், சந்நியாசிகளால், சேவிக்கப் பட்டதும். ஆகிய சடிலவநச் சேத்திர மென்னுங் கோயிலூர்ப் பதி யொன் றுண்டு, அப் பதியில்,

அஸ்தூலாதி அதத்வ்யாவி ருத்தி லக்ஷணரும். ஜக சிருஷ்டி யாதி தடத்த லக்ஷணரும், சச்சிதாநந்தாதி சொருப லக்ஷணரும், ஆகிய இறைவனே, ஸ்ரீ முத்து ராம லிங்க ஞாந தேசிக ராய்த், திரு வுருக்கொண் டாவிர்ப்பவித்து, ஸ்ரீ சாலிவாடீசுவரி அநுக்கிரகத்தால், வேதாந்த மடம் நிறுவி, ஸ்ரீ உகந்த லிங்க ஞாந தேசிகரிடத்தில் தான் பெற்ற ஞாநத்தையும், அந்த ஞாந சாதநங்களையும், தன்னைச் சரணடைந்த துறவு ஆண்டவ ரென்னும் அருணசல ஞாந தேசிகர், மதுரை பிரஹ்மாநந்த சுவாமிகளின் குரு மூர்த்தியான அரசப்ப சுவாமிகள், குட்டைய சுவாமிகள், கருணை நிதி யென்னும், சிதம்பர ஞாந தேசிகர், இன்னும் அநேக சீடர்களுக்கும் உபதேசித்துத் துறவு ஆண்டவ ரென்னும் அருணசல ஞாந தேசிகரை மடத்தின் தலைவ ராக யேற்படுத்தி நிருவாண தசை யடைந்தார்கள். அநந்தரம், ஸ்ரீ துறவு ஆண்டவரும், சிறிது கால மாகத் தன் சீடர்களான - பஞ்ச தசி, தமிழ் மொழி பெயர்ப் பாசிரிய ரான- நித்தியாநந்த சுவாமிகள், முதலியவர்களுக்கு உபதேசஞ் செய்திருந்து. தனக்குப் பின் கருணை நிதி யென்னும், சிதம்பர ஞாந தேசிகரைத் தலைவ ராக நியமித்து சித்தி யடைந்தார்கள்.

கருணை நிதி யென்னும் சிதம்பர ஞாந தேசிகரும், குரு பரம்பரை முறையே தன்னைச் சரணகதி யடைந்த சிதம்பரம் பொன் னம்பல ஞாந தேசிகர் முதலிய சீடர்களுக்கு ஞாந ஞாந சாதநங்களை உபதேசித்து வரும் ஞான்று, சாக்

கோட்டை புது வ ய ல் யென்னும் ஊரில், தந வைசியர் குலத்தில், பூர்வஞ் செய்த நிஷ்காமிய புண்ணிய புஞ்ச பரி பாகத்தால், திரு வுருக் கொண் டாவிர்ப்பவித்து, வீரப் பய்யா யென்னும் திரு நாமம் பூண்டு, இளமையிலேயே கல்வி கற்று, வைராக்கியாதி சாதந சம்பத் தடைந்து, அழல் மிதித்தான் போன்று, மாதா பிதா சுற்றம் ஆகிய எல்லா வற்றையும் விட்டுக், கோயி லூர் வந்து. கருணை நிதி யென் னும் சிதம்பர ஞாந தேசிகரைச் சரணுகதி யாக வடைந்து, ஆத்தம், அங்கம், தாநம், சத்பாவம் என்னும், சதுர் வித பணிவிடைகளையும், ஆ சி ரி ய ர் மநம் உவக்கச் செய்து, சந்நியாசம் பூண்டு, குருவால் உபதேசிக்கப்பட்ட நாநா ஜீவ வாதக் கட்டளை முதல் ஞாந வாசிட்டம் ஈ றுன பதி னு று சாத்திரங்களையும், ஐதரேய முதலிய உபநிஷதப் பொருள் களையும், பாகவதம், ஆணடவர் சுவா நுபவத் திரு வாக்கு. முதலிய நூல்களையும், பக்தி சிரத்தையுடன் சிரவணித்தும், தான் சென் றடைவதற்கு முன் குருவின் திரு வடிகளை யடைந்த பெரியோர்களோடு சேர்ந்து, ஐயந் திரிபு. நீங்க ஆராய்ந்து வருவாராயினர்.

ஆராய்ச்சி செ ய் து, அள வற்ற சுக சொருபமாயும், அழி வற்ற தாயும், எல்லாவற்றிற்கும், மேலாயும், அஞ் ஞாந மாகிற இருட்டோ, அதன் காரிய மாகிற ஜகத்தோ இல்லாதா யிருக்கும் பிரஹ்ம சொருபமே நான் என்னும் திட நிச்சய முடையவ ராய், 'மன மெங்குச் சரிக்கும் ஆண் டாண் டெலாஞ் ச ம ா தி ' என்ப தாய்ச் சகஜ சமாதி கொண்டு வரு நாளில், ஆ சி ரி ய ர் விதேக கைவல்யம் அடைந்த பின்னர், கோயி லூர் மடாலயத்தி லிருந் தேகி, தேச சஞ்சார நிமித்தம் மாய்ப் பல கிராமங்க டோறும், மதுகரப் பிச்சை வாங்கி யுண்டு, சஞ்சாரஞ் செய்து, வருவா ராயினர்.

அவ் வாறு, சஞ்சாரஞ் செய்து, வருங் காலத்தில், திரு வா வடு துறைக்குச் சென்ற போது, அப் போ திருந்த திரு வா வடு துறை மடத்தின் தலைவ ரான சந்நிதாநங்கள்

ஆண்டவ ராகிய வீர சேகர ஞாந தேசிகரை அழைத்து நீங்கள் யாவர் எங் கிருக்கிறீர்கள்'' என்று விசாரிக்கத் தான், காரைக் குடிக்கு அருகாமையி லுள்ள கோயிலூர் மடத்தி லிருப்ப தாகக் கூறவும், அதைக் கேட்ட தம்பி ரான் சுவாமிகள், கோயி லூரைப் பற்றி முன்னரே பலர் சொல்லக் கேட்டிருக்கின்றோம். ஆங்கு, ஞாந சாஸ்திரங்க ளாகிய கீதை வாசிட்டம் முதலிய நூல்கள் பாடம் நடப்ப தாகக் கூறியுள்ளார்கள். நீங்கள் அம் மடத்தில் பாடங் கேட்டிருப்பீர்கள். அப்படிக் கேட் டிருப்பின் வாசிட் டத்தில் ஒரு செய்யுள் கூறுங்க ளென்று கேட்டவுடன், ஆண்டவ ராகிய வீரசேகர ஞாந தேசிகர்.

> "அற்ப முனக்கொன் றினிதாகி லதனுல் பிறப்பி
> [லகப்பட்டாய்,
> பொற்ப வுனக்கொன் றினுமினிமை பூணு தென்னிற்
> [பிறப்பகன்ருய்,
> நிற்ப நடப்பப் பொருட்டிரளி னினக்குத் திரண
> [முதலாகத்,
> தற்ப முறுபொன் முடிவாகச் சற்று மினிமை
> [யுறவேண்டா."

என்னுஞ் செய்யுளைச் சொன்ன மாத்திரத்தில், தம்பிரான் சுவாமிகள், சந்தோஷித்துச் "சுகர் போன்று, வைராக்கிய புருஷ ருக விளங்குகின்றீ'' ரென்று தக்க மரி யாதை செய்து அனுப்ப, தான் அப்படி வைராக்கிய புருஷ ராகச் சஞ்சாரஞ் செய்து, வருங்காலத்தில் சிதம்பரம் பொன் னம்பல ஞாந தேசிகரா லும், நகரத்தார்களா லும், ஆண்டவ ராகிய வீர ஞாந தேசிகர் வரவழைக்கப்பட்டு, கோயிலூர், மடத்துக்கு அதிபதி யாக நியமிக்கப்பட்டார்கள்.

அவ் வாறு, வீ ர சே க ர ஆண்டவர் அதிபதி யாக மடத்தி லிருக்கும் போது, முன் ஆண்டவ ரான முத்து

கோட்டை புது வயல் லென்னும் ஊரில், தந வைசியர் குலத்தில், பூர்வஞ் செய்த நிஷ்காமிய புண்ணிய புஞ்ச பரி பாகத்தால், திரு வுருக் கொண் டாவிர்ப்பவித்து, வீரப் பய்யா வென்னும் திரு நாமம் பூண்டு, இளமையிலேயே கல்வி கற்று, வைராக்கியாதி சாதந சம்பத்தடைந்து, அழல் மிதித்தான் போன்று, மாதா பிதா சுற்றம் ஆகிய எல்லா வற்றையும் விட்டுக், கோயி லூர் வந்து, கருணை நிதி யென் னும் சிதம்பர ஞாந தேசிகரைச் சரணுகதி யாக வடைந்து, ஆத்தம், அங்கம், தாநம், சத்பாவம் என்னும், சதுர் வித பணிவிடைகளையும், ஆசிரியர் மநம் உவக்கச் செய்து, சந்நியாசம் பூண்டு, குருவால் உபதேசிக்கப்பட்ட நாநா ஜீவ வாதக் கட்டளை முதல் ஞாந வாசிட்டம் ஈ ருன பதி னுறு சாத்திரங்களையும், ஐதரேய முதலிய உபநிஷதப் பொருள் களையும், பாகவதம், ஆணடவர் சுவா நுபவத் திரு வாக்கு. முதலிய நூல்களையும், பக்தி சிரத்தையுடன் சிரவணித்தும், தான் சென் றடைவதற்கு முன் குருவின் திரு வடிகளை யடைந்த பெரியோர்களோடு சேர்ந்து, ஐயந் திரிபு. நீங்க ஆராய்ந்து வருவாராயினர்.

ஆராய்ச்சி செய்து, அள வற்ற சுக சொருபமாயும், அழி வற்ற தாயும், எல்லாவற்றிற்கும், மேலாயும், அஞ் ஞாந மாகிற இருட்டோ, அதன் காரிய மாகிற ஜகத்தோ இல்லாதா யிருக்கும் பிரஹ்ம சொருபமே நான் என்னும் திட நிச்சய முடையவ ராய், 'மன மெங்குச் சரிக்கும் ஆண் டாண் டெலாஞ் சமாதி' என்ப தாய்ச் சகஜ சமாதி கொண்டு வரு நாளில், ஆசிரியர் விதேக கைவல்யம் அடைந்த பின்னர், கோயி லூர் மடாலயத்தி லிருந் தேகி, தேச சஞ்சார நிமித்தம் மாய்ப் பல கிராமங்க டோறும், மதுகரப் பிச்சை வாங்கி யுண்டு, சஞ்சாரஞ் செய்து, வருவா ராயினர்.

அவ் வாறு, சஞ்சாரஞ் செய்து, வருங் காலத்தில். திரு வா வடு துறைக்குச் சென்ற போது, அப் போ திருந்த திரு வா வடு துறை மடத்தின் தலைவ ரான சந்நிதாநங்கள்

ஆண்டவ ராகிய வீர சேகர ஞான தேசிகரை அழைத்து நீங்கள் யாவர் எங் கிருக்கிறீர்கள்'' என்று விசாரிக்கத் தான், காரைக் குடிக்கு அருகாமையி லுள்ள கோயி லூர் மடத்தி லிருப்ப தாகக் கூறவும், அதைக் கேட்ட தம்பி ரான் சுவாமிகள், கோயி லூரைப் பற்றி முன்னரே பலர் சொல்லக் கேட்டிருக்கின்றோம். ஆங்கு, ஞான சாஸ்திரங்க ளாகிய கீதை வாசிட்டம் முதலிய நூல்கள் பாடம் நடப்ப தாகக் கூறியுள்ளார்கள். நீங்கள் அம் மடத்தில் பாடங் கேட்டிருப்பீர்கள். அப்படிக் கேட் டிருப்பின் வாசிட் டத்தில் ஒரு செய்யுள் கூறுங்க ளென்று கேட்டவுடன், ஆண்டவ ராகிய வீரசேகர ஞான தேசிகர்.

''அற்ப முனக்கொன் றினிதாகி லதனால் பிறப்பி
[லகப்பட்டாய்,
பொற்ப வுனக்கொன் றினுமினிமை பூணு தென்னிற்
[பிறப்பகன்றாய்,
நிற்ப நடப்பப் பொருட்டிரளி னினக்குத் திரண
[முதலாகத்,
தற்ப முறுபொன் முடிவாகச் சற்று மினிமை
[யுறவேண்டா.''

என்னுஞ் செய்யுளைச் சொன்ன மாத்திரத்தில், தம் பிரான் சுவாமிகள், சந்தோஷித்துச் ''சுகர் போன்று, வைராக்கிய புருஷ ராகை விளங்குகின்றீ'' ரென்று தக்க மரி யாதை செய்து அனுப்ப, தான் அப்படி வைராக்கிய புருஷ ராகச் சஞ்சாரஞ் செய்து, வருங்காலத்தில் சிதம்பரம் பொன் னம்பல ஞான தேசிகராலும், நகரத்தார்களாலும், ஆண்டவ ராகிய வீர ஞான தேசிகர் வரவழைக்கப்பட்டு, கோயிலூர், மடத்துக்கு அதிபதி யாக நியமிக்கப்பட்டார்கள்.

அவ் வாறு, வீ ர சே க ர ஆண்டவர் அதிபதி யாக மடத்தி லிருக்கும் போது, முன் ஆண்டவ ரான முத்து

ராம லிங்க ஞாந தேசிகர், துறவு ஆண்டவர், கருணை நிதி, இவர்களால் ஆரம்பித்துத் திருப் பணி செய்துவந்த சாலிவா டீசுவரி சமேத இராஜ கட்க பரமேசுவரர் ஆலயத் திருப் பணிக ளனைத்தையும், பூர்த்தி செய்தும். எவ் விடத்திலும் எவர்களாலுஞ் செய்தற் கரிய கும்பாபிஷேகஞ் செய்து முடித்தும், தன்னைச் சர ணடைந்த ஸ்ரீ அண்ணுமலை ஞாந தேசிகர், ஸ்ரீ மகா தேவ ஞாந தேசிகர், இரண்டாம் பாட ஸ்ரீ வேங்கடாசல சுவாமிகள், ஸ்ரீ சுப்பைய சுவாமிகள், ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகள், ஸ்ரீ சி வ ா ந ந் த சுவாமிகள், ஸ்ரீ நாராயண சுவாமிகள், ஸ்ரீ மழ பாடிச் சுவாமிகள், ஸ்ரீ நடேச சுவாமிகள், ஸ்ரீ சோமசுந்தர சுவாமிகள், முதலிய அநேக சிஷ்யர் குழாஞ் சூழ ஞாநத்தையும், ஞாந சாதநங் களையும், உபதேசித்தும்,. மைத்திரியாதி சற் கு ண ங் க ணிறைந்த ஜீ வ ன் முத்த ராயும், பிரஹ்ம நிஷ்ட ராயும், விளங்கி வந்தனர்.

துர்வாச முநிவரால், தேவ லோகத்தி லிருந்து பாரி ஜாத விருக்ஷத்தைக் கொண்டு வந்து ஸ்தாபித்து, அவ் விருக்ஷத்தின் கீழ் அமுத வல்லி சமேத பாரிஜாத வநேசு வரர், என்னும் லிங்கம் பிரதிஷ்டை செய்து, தான் தவம் ஆற்றி, சாபா நுக்கிரக சாமார்த்தியம் பெற்றதும், பிரம்மா, இந்திரன் முதலிய தேவர்களும், அநேக முநிவர்களும், தரி சிக்கும்படியாகத் துர்வாச முநிவருக்கு, சிவ பெருமான் ஆநந்த நடநஞ் செய்தருளியது மான, பாரிஜாத வந மென் னும், திருக் களர்ப் பதியி லுள்ள ஆலயம் ஜீர்ணமா யிருந் ததை, அவ் ஊர் அடியவர்கள், இந்த ஜீர்ணோத்தாரணத் திருப் பணியைக், கோயி லூர், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசி கரே முடித்துவைக்க, அதாவது, செப்பஞ் செய்ய, ஆற் ற லுடையவ ரென்று கருதி கோயிலூர் வந்து, திருக் களர் ஆலயம் ஜீரணமா யிருப்பதைத் தாங்கள் வந்து பார்வை யிடவேண்டு மென்று, பிரார்த்திக்க. அவ் வழைப்பிற் கிணங்கி ஆண்டவ ராகிய வீர சேகர ஞாந தேசிகர் திருக் களர் வந்து, ஆலயத்துள் நுழையும் போதே, துர்வாச மக

ரிஷி அம்ச மானதால், மயிர்க்கூச் செறிந்து பக்திமே லிட்டு அமிர்த வல்லி, சமேத பாரிஜாத வநேசுவரரை வழிபட்டு, அக் கோயில் ஜீர்ணமா யிருப்பதைப் பார்த்து. நகரத்தார் களிடம், பொருளுதவி பெற்று, திருக் களர் ஆலயம், திருக் குளம் முதலிய, அனைத்தையும் ஜீரணோத்தாரணம் பண்ணி யும், வேத பாட சாலை, தேவார பாட சாலை, அறு பத்து மூன்று நாயன் மார்கள், குரு பூஜா மடம், பசு மடம் முத லியவைகளையும், அங்கு அமைத்து, உற்சவாதிகளும், சிறப் பாக நடாத்தியும், திருக் களர் க்ஷேத்திரத்திலேயே, திருக் குளக் கரையில், கோ. ஆ. வீர. மடம் என்னும், வேதாந்த மடம் ஸ்தாபநஞ் செய்தும், மாணுக்கர்களுக்கு உபதேசாதியும், செய்திருந்தனர்.

பின்னர், வைகாசி மாசம் விசாகத் தன்று, திருத் தேர் தெற்கு வீதியில் வரும் போது, ஆண்டவ ராகிய வீர சேகர ஞாந தேசிகர், சாதுக்களும், பக்த ஜநங்களும், சமீ பம் நிற்ப, "ஹர ஹர மகா தேவ" என்று உச்சாரணஞ் செய்து, பிராரப்த கரும க்ஷய மான தூல தேக முத்தியும், சூக்கும தேகம் உலை யிரும் புண்ட நீர் போல, துரிய மாய் விபு வாய் நின்ற சொரூபத் திலிறந்தது மான, உபாதி யொழிந்த விதேக முத்தியும் அடைந்தார்கள்.

திருக் களர்ப் பதியிலேயே, ஆண்டவரைச் சமாதி வைத்து, ஆலயமுஞ் சிறப் பாக அமைக்கப்பட்டு, நித்திய பூஜை முதலியவைகளும், ஒவ் வொரு ஆண்டுதோறும், குரு பூஜையும், சிறப் பாக நடைபெற்று வருகின்றன.

49-ஆண்டு குரு பூஜை சார்வரிஞு வைகாசிமீ 25ந் தேதி (7—6—1960) நடந்து முடிந்தது. இனி வரும் ஐம்ப தாம் ஆண்டுக் குரு பூஜை, பிலவ வருஷம் வைகாசி மாசம் 16உ திங்கள் கிழமை விசாக நக்ஷத்திரத் தன்று நடப்ப தற்கு சாதுக்களும், அன்பர்களும், ஆண்டவர் வீர சேகர ஞாந தேசிகரின் பெருமையைப் பற்றி எழுத வேண்டு

மென்று, ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள் உத்திர விட்டனர். அதன்படி பரம குரு வான திருக் களர் ஆண்டவரென்னும், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகரின் பாத சேகரரான ஸ்ரீ சோம சுந்தர ஞாந தேசிக ரென்னும், விசுத்தாநந்த சுவாமிகளின் சிஷ்ய னுன சிந்மயாநந்த சுவாமி யாகிய அடியேன், மதிக் கெட்டிய மட்டிலும், குரு பரம குரு வருளினுல் எழுத லாயினேன்.

வீர சேகரன் விரை கழல் வாழ்க.

---

உ

சிவமயம்.

கோவிற் பட்டி முக்தாநந்த சுவாமிகள் மடம்,

## ஸ்ரீ விமலாநந்த சுவாமிகள் எழுதியது.

## திருக் களர், வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள், பாராட் டுரை.

---

முன் னுரை.

உலக மிதில் எந் நாட்டிலும், சிறந்த நந் நா டாகிய தென் நாட்டின்கண் பல் வளமும், சீரும், சிறப்பும், வாய்ந்ததும், தேவாலயங்கள், மடாலயங்கள் நிறைந்ததும், சாது மகாத்மாக்கள், அந்தண ராதிய யாவரும். அக மகிழ்ந்து வாழ்வதற் குரியது மான கோவி லூர் என்னும், மகா க்ஷேத்திரத்தின்கண் மும் மூர்த்திகள் போன்ற, ஸ்ரீ முத்து ராம லிங்க ஞாந தேசிக சுவாமிகள், 'துற வாண்டவர்' என்னும், ஸ்ரீ அருணுசல ஞாந தேசிக சுவாமிகள், 'கருணுநிதி' என்னும், ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக சுவாமிகள் ஆகிய இம் மூவரும், கோவில் கொண் டெழுந் தருளி யுள்ள, மாட்சி நிறைந்த மடாலத்தில், ஐந் தாவது பட்டம் வகிக்க

இசைந்து, அமரர்களும், வியக்கும்படி தேவாலய மடாலயத் திருப் பணிகள், பலவற்றை அழகுறச் செய்து, வேதாந்தப் பாடங்களை, வெகு முறையோடு நூற்றுக் கணக்கான சாது மகாத்மாக்களுக்கும், ஏனைய அன்பர்களுக்கும், ஓதுவித்த, நமது ஸ்ரீலஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகப் பெருந்தகையாரைப் பற்றிய பாராட்டுரைகள், முப் பத் தாறு சாதுக்கள், தனித் தனி எழுதியநுப்ப வேண்டு மெனக் கட்டளை பிறப்பித் துள்ள, ஸ்ரீ சாதுக்கள், சங்கத்திற்குத் தற் காலத் தலைவரா யமர்ந்துள்ள, ஸ்ரீலஸ்ரீ கருணை மா கட லாகிய காசிகாநந்த ஞாநாச்சாரிய நந் நாயக மெனும், சுவாமிகளின் ஆக்ஞைப் படி அடியேனும், சிற் றறிவிற்கு எட்டிய வாறு இப் பாராட் டுரையைச் செய்துள்ளேன்.

(வெண்பா)

உலகமிதில் வீரேச உண்மைத் துறவோன்,
நிலவுமதி போலே நிறையப்—பலகலைகள்,
கற்றும் பலர்க்குரைத்துங் காட்சிபல செய்துவீ,
டுற்றன னென்றே உணர்.

சேது நாட்டில் வைசியச் செல்வர்கள் நிறைந்த புது வயல் என்னும் நகரத்தில், அருணசலஞ் செட்டியாரும், உமை அம்மையாரும், உத்தம வாழ்க்கை வாழ்ந்து வந் தார்கள். புது வயலுக் கருகில், அளகை யென் றழைக் கப்படும் சாக்கைக் கோட்டையில், கோயில் கொண் டுள்ள வீர சேகரேசப் பெருமா னருளால், அவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக் குழந்தையே நம் தவச் செல்வ ராகிய திருக் களர் ஆண்டவ ராகும். அம் மகவு. கலி 4949க் குச் சரியான கீலக வருடம் ஆவணிமீ 12ம் நாள் அவதரித் தது.

அவதரித்ததும் அதற்குச் சாதகம் கணிக்கப்பட்டது. அந்த அவதார மகவின் சாதக மானது, “அளவிலாப்

பெருமை வாய்ந்த மகா புருட சாதகம்" என்பதை சோதிட நிபுணர்கள் சொன்னார்கள். அக் குழந்தைக்கு முதலாவது ஆண்டு நிறையவும், தமிழ் மொழிகளை நன்றாகப் பேசத் தொடங்கு மாற்றலும் வந் தமைந்தது. மூன்றாவ தாண்டு முற்றியவுடன், தந வைசிய குல மரபுப்படி நல்ல நேரத்தில், காப்புக் கட்டுப் புதுமை முதலியவைகளை பெற்றோரும், உற்றாரும், விதிப்படி செய்து, விழாப் பல கொண்டாடினார்கள். சிறிது நாளில் அதன் தந்தை காலஞ் சென்றார்.

"இளமையிற் கல்" என்பதற் கிணங்க அந்தக் குழந்தையின் ஐந் தாம் ஆண்டில் அதற்குச் சேது உபாத்தியாயர், அக்ஷராப்பியாசம் செய்து வைத்தார். அது, தலை மாணாக்கன் இலக்கணத்தைக் கொண்டிருந்தது. ஆசிரியர், ஒரு முறை உரைக்கின், அதை மறவாது மநதிற் கொள்ளும். அவர் ஒரு பங்கு போதித்தால், அது இரண்டு பங்கு கற்று வந்தது. தமது அருட் சக்தியால், சகல கலைகளையும் கற் றுணர்ந்தது. இளமையிலேயே அளகையில் எழுந்தருளியுள்ள வீர சேகரேசரையும், உமை யம்மையையும், பக்தியோடு, இவ் வீரேசச் சிறுவர் வழிபட்டு வந்தார்.

அவர்கள், அருட் செல்வம் பிறவியிலேயே நிறைந்தவர்களாக விருந்தும், பொருட் செல்வத்தைத் தேடுவதிலும், பின் வாங்கினார்க ளில்லை; "திரைகட லோடியுந் திரவியந்" தேடினார்கள்; திரவியந் தேடும் முறையையும், எளிதில் கற்று, மிகுதி யான திரவியத்தைத் தேடினார்கள்; "பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள" என்ற உண்மையை உணரவே, அவர்களுக்கு பொருட் செல்வந் தேடுவதில், திட ரென்று அருவருப்பு ஏற்பட்டது; பின் அவர்களுடைய நாட்ட மெல்லாம் செல்வத்துள் செல்வ மாகிய அருட் செல்வத்தில் சென்றது. "தவமும் தவ முடையார்க்கே ஆகும்" என்பது வீர சேகரர் வாழ்க்கையில், உண்மை யாயிற்று.

பின் புது வயலில் வாழ்ந்து வந்த, வீரப் பையா அவர்களை வழிபட்டு நல் லுணர்வு, நல் லொழுக்கம் முதலியவைகளை, வீர சேகரர் ஈட்டி வந்தார்கள். அப்படி யிருக்கும் நாளில், முறைப்படி வேதாந்த நூற்களைப் பயின்ற அழகப் பையா, வீர சேகரரிடம் பட்டினத் தடிகளின் திருப்பாடலை, எடுத்துக் கொடுத்து, அதைப் படிக்கும்படி ஊக்குவித்தார்கள். அவர்களின் தூண்டுதலால் அஞ்ஞவதைப் பரணி என்ற ஞான நூலையும், வீர சேகரர் படித்தார்கள்.

இப்படி, நல்லாரோடு இணக்கங்கொண்டு, ஞான நூல்களை ஆராய்ந்து வருங் காலத்தில், அவர்களுக்கு மோக்ஷ வேட்கை அதிகரித்தது. அதைக் கண்ட, வீரப் பையா, அவர்களைப் பார்த்து, "நீ சோவி லூரி லுள்ள வேதாந்த மடத்துக்குச் செல்; அதனால் உனக்கு எல்லா நன்மைகளும், உய்வும், உண்டாகும்" என்று சொன்னார்கள். அதைத் தலைமேற் கொண்டு, அதற் காக காலங் கருதி, காத்திருந்தார்கள். உண்மை யான பிரமச்சாரியாகவும், வாழ்ந்து வந்தார்கள்.

அப் பொழுது அவர்களது அன்னையாரும், மற்றவர்களும், சேர்ந்து அவ் வீரேசப் பெருந் தகையை மணஞ் செய்து கொள்ள, இசையும்படி வேண்டிக்கொண்டார்கள். ஆனால், அவர்களுக்கு அளித்த பதில் மௌனமே. வீர சேகரனர், அப் போது, மனதில் எண்ணிய எண்ணங்கள் இவையே; "இல் லறத்தின் மேலாகிய நல் லறமான்து துறவறமே யாம் மற்றும், "தாரதந மிகுமாகில் தளையாகும்; அத்தளையை யகற்றும் ஆற்ற லுடையாரும் உளரோ.?" அதனா லன்றோ சுகர், சங்கரர், சதா சிவப் பிரமம் முதலிய, பெரியோர்கள், அத் தளையிற் சிக்காது விலகிக் கொண்டனர்! அதைக் கருதி யன்றோ, திரு நாவ லூரர்ப் பெருமானை, சிவ பெருமானே வந்து தடுத் தாட் கொண்டதும், ஏனைய

வர்களால், மேரு வொத்த சுந்தரர், தீரர், வீரர் முதலியோ ரையும், சிவ விஷ்ணு வாதிகளையுந், துரும் பென அலைக்கும் அக் காமக் கடலைக், கடத்தற் கெளி தாமோ?

நம் வீர சேகரப் பெருமான் மாதி லுள்ள எண்ணங் களை, அவர்களின் அன்னையாரும், மற்றவர்களும், அறிந்து கொள்ளாது, அவர்களுக்குத் தகுதி யான ஒரு பெண்ணைப் பேசி முடித்தனர். அதைக் கேட்ட அருட் டாகங் கொண்ட நம் வீர சேகரச் சிங்கம், வீரப்பையா, சொற்களைத் தலை மேற் கொண்டு, வீட்டை விட்டு, கோவி லூர், வேதாந்த மடத்துக்கு விரைந்து சென்றார்கள். "இல் லறத்தாரிடத்து ஞான மிருக்கினும், இரும்பிற் புல்லிய மா ரத்திநம்" என ஒளி குறையும் என்பதும், "து றவறத்தாரிடத்தி லிருக்கும் ஞானம் நற் றங்கத்திற் பதித்த உயர் இரத்திநம் என ஒளி மிகும்" என்பதும், நம் பிரம வித்து வீர சேகரருக்குத் தெரியாததா? அங்கே ஸ்ரீ பொன் னம்பல ஞா ந தேசிக சுவாமி அவர்களையும், ஸ்ரீ சிதம்பர ஞாந சேசிக சுவாமி அவர்களையும், தரிசித்தார்கள். தொடக்க நூ லாகிய, நாநா ஜீவ வர்தக் கட்டளையைக் கற் றறிந்தார்கள்.

பின், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமி அவர்கள், சிக்கலுக்குச் சென்று, ஸ்ரீ சட்டை யப்ப சுவாமிகளிடத் துக் காவி யாடை ஏற்றுக் கொண்டு, அதன் பின், கோவி லூர் வந்து ஆசிரியரிடம், வாசிட்டம் வரை வேதாந்தப் பாடம் கேட்டார்கள்; அதன் பின், யாத்திரை சென்று, சிதம்பரத்தை யடைந்தார்கள். கோவி லூர் மடாலயத் தலைமை வகிக்க மறுத்து வெளியேறினார்கள். எனினும், கோவி லூர் மடாலயக் குரு பீடத்தை வகிக்க, ஒரு வாறு சம்மதித்தார்கள். அவர்கள் கா ல த் தி ல் மடம் விருத்தி யடைந்தது. ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரிய சுவாமி அவர் கள் போன்ற பல உத்தம மாணவர்கள் அவர்களைச் சர ணடைந்தார்கள்.

"ஒன்ஞர்த் தெறலு முவந்தாரை யாக்கலு,
மெண்ணிற் றவத்தான் வரும்"

என்பது பேருண்மை. இந்த உண்மைக்கு, திருக்களர் ஆண்டவரின், தவ வலிமை எடுத்துக் காட்டாகியது. "நெல்லை யம்மன் திருப் பணிக்கு விக்நம் செய்த, இராமன் செட்டி, நேச மற்று நாச மாவான்" என்று, ஆண்டவர் திரு வுள்ளங் கொள்ள, அதன்படியே இராமன் செட்டியார் மனைவி, மக்கள், பொருள், வீடு எல்லாம் இழந்தார். கோனுப் பட்டு பழனி யப்ப செட்டியார் வியாபாரத்தில் நஷ்ட மடைந்து கஷ்ட மடைந்ததை முறையிட ஆண்டவர், "பொருள் வரும்; அஞ்சற்க," எனத் திரு வாய்மலர்ந் தருள, அத் திரு வாக்குப்படியே அவருக்குப் பொருள் வந்தது.

கோவி லூரில், திரு நெல்லை யம்பாள் ஆலயம், கருங் கல்லால் கட்டப்படுவதற் காகப் பிரிக்கப்பட்டது. அந்த வேலை நடவாது தயங்கும் சமயம், ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமி அவர்களின் தியானத்தில், நெல்லை யம்பாள் வந்து, "எடுத்த காரியங்கள் யாவும், நினைப்பின் வண்ணம் தடை யின்றி முடிவு பெறும்; இனி எந்தக் காரியத்தினையும் ஆரம்பிக்கலாம்" என்று ஆசி கூறிச் சென்றனள். அது முதல் எடுத்த சத் காரியங்கள் யாவும், முட் டின்றி முடிந்தன.

நம் ஆண்டவர், தம் சரீர யாத்திரை முடிவு பெறும், நாளை முன்ன தாகவே அறிந்து கொண்டார்கள். அதனு லேயே திருக் களர் கும்பாபிஷேகத்தி லிருந்து, 45-வது நாளில் நடத்த வேண்டிய, மண்டலாபிடேகத்தை, 25-வது நாளில் நடத்தினர்கள். மறு ஆண்டு நடை பெற வேண் டிய பிரமோற்சவத்தையும், இத் தருணத்தில் நடை பெறச் செய்தார்கள். தாம் சவாரிக்கு வைத் திருந்த இரண்டு

வண்டி மாடுகளையும், குறைந்த விலைக்கு விற்றுவிட்டார்கள். என்னே! அவர்களது தீர்க்க தெரிசநம்!!

இவ் விதம் பூரண மாக ஈசுவர கிருபையைப் பெற்ற. ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமி அவர்கள், பாரிஜாத வநேசர் தேரோட்டத்தின் போது, இரதத்தின் முன், ஸ்ரீ நட ராஜப் பெருமான் ஸந்நதியில், "ஹர ஹர மஹா தேவா" எனப் பல முறை சொல்லிக் கொண்டும், ஆநந்தக் கூத் தாடிக் கொண்டும், இரண்டு கைகளையும், சிரசின் மேல் வைத்த வண்ணம், சாய்ந்தார்கள்; சாய்ந்த அத் திரு மேனியை அந்தணர்கள், ஏந்தினார்கள். இப்படி நம், "திருக் களர் ஆண்டவர்" என்னும், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமி அவர்கள். அற்புதமாக விதேக முக்தி யடைந்தார்கள்.

வீரேசன் விரை கழல் வாழ்க.

---

உ

*சிவமயம்.*

கோவி லூர் மடம் ஸ்ரீ அண்ணுமலை ஞாந தேசிகர்

மாணுக்கர், துறை யூர் சின்ன மடம்,

*ஸ்ரீ பெருமாளையா எழுதியது.*

திருக் கள ராண்டவ ரென்னும்,

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ராய,

***தமது பரமாசாரியன் பாராட் டுரை.***

---

(20 பிரிவினது.)

எம்மை வழி வழி அடிமை கொண்ட மறுவிலாப் புகழ் வீரேச!

1. விரிந்து பரந்த கடலால் சூழப்பட்ட இந் நிலவுலகத்துப், பாண்டி நாடே பழம் பதி யென ஆன்றோரால் விதந்

தோதப் பெற்ற, தென் ஞ டென்னுங், கன்னி நன் ஞட்டினில், நில மகட் கோர் திலக மென மிளிர்தரும் இரு நிதிக் கிழவ னோர் பெரு நிதிக் குவையர் வாழ், புது வய லெனு முயர் பதி யதன்கண், நினது தாய் தந்தைய ராம் இரு முது குரவர் செய்த தவப் பேற்ருல், "பனிச் சுடர் வெண் ணித் திலங்க ளுத்தம மாம் மூங்கி லல்லாற் படுவ துண்டோ" எனப் பண்டையோர் பாலித்த மொழிப்படி உத்தம மாகிய நின் னன்னை உமை ய ம் மை ம ய ா ரணி மணி வயிற்றில் அருணேதயம் போல் அவதரித்து மக்கட் பே றிலா மனக் கவலை யெனும், பே ரிருளை மாற்றினை. நீ அவதரித்த திரு மேனியின் திருக் குறிகளைக் கண்டு மூதாதையர், அகில முவக்க, அடியார்க ளுய்ய, பற் பல செயற் கரிய செயல்கள் நடத்திக் காட்டித் திரு வுள்ளங் கொண்டு அளகை வீரேசப் பெருமானே திரு வவதரித்தனர், எனத் தெரிந்து நினக்கு வீ ர சே க ர ன் எனப் பிள்ளைத் திரு நாமஞ் சூட்டப் பெற்றனை.

2. பின் தந்தையார் தேக வியோக மான பிறகு, அன்னையார் அரும் பெறற் றநய ஞம் நினக்கு இளமையிற் கல்வி கற்பிக்க முயன்று திநம், திதி, கரணம், யோக முத லிய நன் ஞளில் அக்ஷரப் பயிற்சிக்கு ஆசிரியர்பா லுய்க்க, அவ் வாசிரியரும், முறைப்படி ஒலி வடிவும், வரி வடிவும், உள்ளத்திற் பதியு மாறு நன்கு பயிற்ற, ஆசிரியர் முன்னிலையில் ஓதி யுணர்ந்த பாவனை போல, ஓதா துணர்ந்த உயர் நலமும் பெற்றனை.

3. நின் னுய ரறிவிற் கேற்ப அடியார் பக்தியும், சிவ பக்தியும், நினக் களவு கடந்த வாற்ருல் பிள்ளைப் பருவத்திலேயே அளகை யம்பதி யெனும், அற்புதப் பதியில் திருக் கோயில் கொண்ட மான் மழுத் தாங்கிய உமா தேவியார், சமேத வீர சேகரப் பெருமனுக்குக், கடுங் குளிரும் பனி மழையும் பொரு ளாகக் கருதா து மிக முயன்று நனி மல ரெடுத்தும், தொடுத்தும், அலங்கரித்தும், பூசனை புரிந்தும், புண்ணிய வடி வாம் புலி முநிக்கு ஒப்பாயினை.

4. அரு ணலம் பாலிக்கு மைய! நினக் காண்டு பத்துக் கழிந்த பின்னர்த் தங்குல, மரபிற் கேற்பத், "திரைகடலோடியுந் திரவியந் தேடு" என்ற ஔவையார் அருளிய அருண் மொழி வழாது கடல் கடந்து நும்மவரோடு கூடி பொருள் மிக வரு நெறி போதவும் பயின்று, பொரு ளீட்டி வருங்கால், பட்டினத் தடிகள் பத்திர கிரியார் இவர்களைப் போல், ஈட்டிய பொருள் முதலானவற்றைப் பற்றும் மூவேடனை யெனு முதலை வாய்க்குத் தப்பி வீர புருட னாய் விளங்கினை யெனின், நின் செயற் கரிய செயற்கு எவர் தானைய இறும்பூது கொள்ளார்.

5. அன்றியும், நமது முக் கரணங்களாலும், மூவா மல ரடிக்கு, நாற் பணியும் செய்யு மாறு, நம்மை வழி வழியடிமை கொள்ளும் ஆ சி ரி ய ன்மார்கள் கோயி லாக் கொண்ட கழனி யம் பதி யெனுங் கோவி லூரை யடைந்து, ஆசிரியன்மல ரடி பணிந்து, முறைப்படி வேதாந்த சாஸ்திராப்பியாசம் செய்து, சாதநம் நான்கும் தவ றறக் கைவரப் பெற்ற, புது வயல் வீரப் பையா எனு மறிஞர்பால் அணுகி யணுகி நா டோறும் நற் பழக்கங் கைக்கொண்டதோடு, அழகப் பையா வெனும் அன் புருவினர்பால் நூல் சில கற்றனை; நுண் ணறிவு மெய்தினை.

வீரப்பையா வெனும் பெரியார் நின் நுண் ணறிவு கண்டு நின்பால், "கழனி வாசல், சாலி வாடி, சமிவநம், ஸ்ரீ வல்லபம் என்னுந் திப்பியத் திரு நாமங்கள் தெளிவுறப் பெற்ற கோவி லூர் என்னு மோர் நகர முண்டு, அதன்கண்.

*"தெளிதரு புகழ்வே தாந்த சிரவணந் திருந்தச் செய்தே,
யொளிதரு மனன மாதி யிரண்டினு முரவோ ராகிக்,
களிதரு பவஞ்ச முற்றுங் கான்றிடு சோற்றிற் கண்டு,
வெளிதரு பிரம மேயாய் மேவுவார் மடமொன் றுண்டு"

* கோவிலூர் புராணம் திரு நகரப் படலம் பாட்டு 63.

அதனுள், "இந்திர பதமென் றுனு மிம்மியும் விருப் பங் கொள்ளார், இன்பதுன் பங்கள் எல்லாம் இருவினைப் பயனென் றுள்ளிப், பருவர லுவத்தல் செய்யார் பசும் பொனே யோடாக் காண்பார், பெருகிய பெருமை பேணுர்.

சிறுமைக்குஞ் சிந்தை நோகார், உதிக்குமுன் எழுந்து கொள்வார், ஒள்ளிய புனலிற் ருேய்வார், காதலான் நீறு பூசிக் கண்டியும் பூண்டு கொள்வார், அன் பொடும் ஐந்தெ ழுத்தை அங்குலி யெணச்செ பிப்பார், பணிவொடு கேட்ட பாடம் பதிவுறச் சிந்தை செய்வார்." ஆய இத் திறத்த அடியர் குழாங்கள் நிரம்பப் பெற்ற அம் மடா லயம் நோக்கி நெருப்பி லிடு வெண் ணெய் யென நெஞ் சுருகி யெனை யாள வந்த கருணை வெள்ள மிருக்குமிட மிதுவே யென உள்ளத் துறுதி கொண்டு செல்வையேல் நீ கருதியது கைகூடும், எண்ணிய எண்ணி யாங்கு ஈடே றும், இது உண்மை" என உறுதி கூறி நின்னைக் கோவி லூருக்கு ஆற்றுப்படுத்த, அதற் குடன்பட்டு ஆகுங் காலம் அணுகும் வரைக், காலம் நோக்கிக் காத்திருந்தனை. நின் மன மடக்க மிருந்த வாறு தான் என்னே.

இத் தருணத்து நின் னன்னையார், "மைந்த! நின் தாதைக்குப் பின் நீ யன்ருே நமது குடும்பத் தலைவன். இனி யுனக்குத் திரு மணச் சடங்குக்கு ஆம் காலம் நணு கியதால், அதனைச் செய்ய முயல்வோமா என வினவ, நின் உள்ளக் கருத்தை விள்ளாது, "தாலி, கட்டயிலே தொ டுத்து நடுக் கட்டையிலே கிடத்து மட்டுங் கவலை தானே," என மநத்துட் கொண்டு மௌநியு மாயினை.

மௌந நிலை மணத்துக் கிணக்கம் என மனத்துட் கொண்டு, அன்னுர் பெண் பேசிய விடயம் நின் செவிப் புகலலும், அதற் கிணங்காது, வீரப் பையா யெனும் பெரியார் உரைப்படி வைராக்ங் கொண்டு துச்சில் நீங்கிப் புக்கில் தேடிப் புறப்பட்டு கோயி லூரை அடைந்தனை.

6. ஆங்குக் குரு ராயன் சந்நிதியில், ஒற்றை யாடையும், கட்டிய கையும், பொத்திய வாயும், ஐயன் திரு வாக்குக்கு மறுவாக் கின்றி, திருச் சேவை புரியும் தொண்டர்களின் அடக்க ஒடுக்க பழக்க வழக்க நடை உடை பாவனை அனைத்தும், நன் குணர்ந்து, துணுக் குற்று, என்னே, இது கண்ணுதற் கடவுள் கல்லாலி லி ருந்து, சநகாதியருக்கு உபதேசம் உதவி அருளிய, கைலையோ வென ஐயுற்று, பின் தெளிந்து, பார்த்த பார்வையில், இரும் புண்ட, நீ ரென பருகும் தீர்த்தனும். சிதம்பர ஞான தேசிக னடி பணிந்து, அவர்பால் மடாலய மரபிற் கேற்ப, முதல் நூ லாம், நாநா ஜீ வ வா த க் கட்டளையைக் கேட்டுச் சிந்தித்துக் கொண்டு இருந்தனே.

7. அது சமயம் சுற்றத்தாரும் ஏனையோரும், திரு மணத்தின் நிமித்தம் இல்லத்திற்கு வரவேண்டும் என மீண்டும் வேண்டக், கழனி வாசலை யடுத்தவர் பழைய வாசலை மிதிப்பரோ, எனும் முது மொழிக் கிணங்க, சுற்றமும், தொடர்பு நீத்துத் துறந்த நா ன் மறந்தும் வாரேன், என்று மறுத்துப் பேசிய மனோ திடம், மற்ற வர்க்கும் வருங் கொலோ,

8. நாம் இனி இந்த ஆசிரமத்தோடு இருத்தல் ஒண்ணுது என உள்ளங் கொண்டு, சி க் க ல் பொருள் வைத்த சேரி சென்று, அம் மடாலயத் தலைவர் சட்டை யப்ப ஞான தேசிகரிடம் சந்நியாசமும். பெற்றனே.

9. ஆங் கி ரு ந் து புறப்பட்டு, அங் கை யேற்று அரும் பசி தணித்துக், கூப குளாதிகளில் நீ ர ரு ந் தி பாதசாரியாய் மீண்டும் கோவி லூர் அடைந்தனே.

10. அப்பால் வேதாந்த நூல்க ளாகிய நாநா ஜீவ வாதக் கட்டளை முதல் வாசிட்டம் வரை யுள பதி னுறு நூற்களையும் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தனே.

பல தல யாத்திரை புரிந்து, தில்லைச் க்ஷேத்திரம் அடைந்து, பொன்னம்பல ஞாந தேசிகரைத் தரிசித்து, அன்னார் ஆணையைச் சிர மேற்கொண்டு சிரவணம் செய்து, கொண்டிருந்தனே.

11. அக் காலை கோவிலூர் மடாலயத் தலைவர் காரைக்குடி இராம சாமி ஞாந தேசிக ரவர்கள், விதேக கைவல்யம் அடைந்த செய்தியைச் செவி யுற்றுப் பொன்னம்பல ஞாந தேசிக ருடைய திரு வாக்கில் எழுந்த சொற் பொருளுக் கஞ்சி வளவனூர் மடம் வந்து புகுந்தனே.

12. அது தெரிந்த பொன்னம்பல ஞாந தேசிகர் குமரப் பையாவுடன் தன் சீடர் குழாங்களை யனுப்பித் தில்லைக்கு வருமாறு வேண்ட, தனது மனோ நிலையை விண்ணப்பித்து, விடுதலை பெறுவான் எண்ணி மீண்டும் வரத் துணிந்தனே.

13. அன்னாரை யடைந்து அவர் தம் நல்லுரை ஏற்றுக் கோவிலூர் மடாலயத் தலைமை பூண்டு, தன்னை யடுத்த பற் பல சில மாணவ ரடி தொழுந் தேசிகோத்தம னுய்ப் போதகல் செயும் புண்ணியச் செல்வனுய்ப் பொலிந்த நின் தோற்றப் பொலிவு கண்டு வியவாதா ரெவரே.

14. கோவிலூர் திரு மடத்தில், ஆதி யாண்டவர் செய்த, திருப் பணிகளைச் சீறுறச் செய்தும், கைலாச கொட்டகை, பிரம சபை, நெற் களஞ்சியம், மலர் தொடுக்கும் மண்டபம், தேனுற்றில் பாலம், அடியவர்களாச்சிரமம், ஊருணிக்குக் கல்லணை, கற் படிகள், ஆய பல பணிகள் செய்து முடித்தும், சிருங்க கிரியில் உள்ள சாரதாம்பாள் ஆலயத்தைக் கருங்கற் பணியாகச் செய்தும், கோவிலூர்ச் சிவாலயம் செழித் தோங்கச் சொற் கேட்டான் மண்டபம், சபா மண்டபம், தீர்த்த மண்டபம், உற்சவ மண்டபம்,

நட ராஜர் மண்டபம், நாற் புற அணி வெ ட் டு க் கால் மண்டபம், நந்தி மண்டபம், நாற் பக்கப் பிராகாரம், விமாந கோபுரம், மடைப் பள்ளி. இராஜ கோபுரம், திரு மதில் கள் ஆகியவற்றைப் புதுப்பித்தும், வெள்ளி யிடபங்கள், வெள்ளி விமாநங்கள், காம தேநு, ஔதாக் கொட்கை, ஆயவற்றைப் புதிதாய், தோற்றுவித்தும், மறை யோதல், ஆராதனை செய்தல், வாத்திய முழங்கல், பாராயணஞ் செய் தல், ஆய முறைமைகள் வகுத்தும், உற்சவக் கிரமங்கள் தொகுத்து வேத கீத நாத தமிழ் மறை யோசை முழங்க கும்பாபிடேக மிறுதியாக உள்ள பல திருப் பணிச் செயல் களால் நின் திரு வருள் வலியினை, உலகிற் குணர்த்தினை.

15. திரு நெல்லை யம்மை திருப் பணிக்குத் திரவிய ஆர்ஜிதம் செய்ய அக்கரை செ ன் ற அன்பர்களுக்குச் செய் யொண்ணு இடையூறு இராமன் செட்டியார் செய் ததைச் செவி மடுத்து, தெய்வப் பணிக்கும் ஒருவன் தீங் கிழைத்தனனே என உளம் வெம்பி வேதனை யடைய, அக் கணமே அன்னார் தா ர புத்திர தநாதிகள், அழிந் தொழிந்ததும்,

பள்ளத்தூர் சென்று ஆலயத் திருப் பணிக்கு வரி எழுத வரு மா று, கருப்பன் செட்டியாரை அழைக்க, அவர் மனக் கோ ட் ட ம் கொண்டு, "சந்நியாசிகட்கு இது தா ன் தொழிலோ" என்று கடிந்து பேசிய சுடு மொழி கேட்டு, ஆஹா, அப்படியும் சொற்றனனே என நின் உள்ளம் புழுங்கப், "பெரியோர்கள் திரு வுள்ளம் பேதித்தால் எ ப் பொ ரு ளு ம் பேதியாதோ" என்ற பொது விதிப்படி, அன்னார் செல்வ மிழந்து சீ ரிடிந்து செல்ல லுற்றதும், கண்ணுதற் பெருமான் கைங்கிரியத் திற்கு இடையூறு செய்த கழினி வாசல் சின்ன சாமி ஆசாரியை முனிந்து, "ஆலயப் பணிகளுக் கினி ஆகா தொழிவாய்" எனலும், நின் னிறை மொழியால் அன்று முதல் அவன் எப் பணிக்கும் ஆகாது போனதும், கோளுப்

பட்டு நகரத்தில் குடி சிறந்து விளங்கிய பழனி யப்பச் செட்டியார் எனும் தநவைசியருக்கு வாணிகத்தில் இழந்த பொருளை மீண்டும் அவர் கைக்கு வருமாறு செய்ததும், நீ. உரு உடல் நீத்த பின், அருவுருவாய் கனவிற் றோன்றி அன்னார் தனையனுக் குற்ற தவப் பெரும் பிணியை தணிவித்தது மாய நிறை மொழி வன்மைக்கு அஞ்சாது மில்லை, அடங்காது மில்லை.

16. பூவனூர் இராசு முதலியார் வேண்டு. கோட் கிணங்கி, திருக் களர் சென்று அமுதவல்லி சமேத பாரிஜாத வநேசரைத் தரிசித்து, அம் முதலியார் அக மகிழு மாறு அவ் வாலயத்தினை புதுப்பிக்கத் திருவுளங் கொண்டு மீண்டனை.

17. மற்றும் சின்னுட் சென்ற பின், அம் முதலியார் வேண்டுகோளின்படி திருக் களர் ஆலயத் திருப் பணி தொடங்கினை.

தொடங்கிய மூவாண்டிற்குள், அவ் வாலயத்துள் அமைந்த தெய்வ பிம்பங்களுக்கு ஏற்ற வாறு, மண்டபங்கள் அமைத்தும், கோபுர மாதிகள் புதுப்பித்தும், பொன், வெள்ளி, ரத்நங்களால் பற் பல அணிகலன்களைச் செய்தும், நித்யோற்சவம், மாதோற்சவம், வருடோத் சவங்களுக்கு ஆவன வாகிய சாமக் கிரியைகள் அனைத்தும் குறை வின்றிச் சேமித்தும், பாட சாலை, பசு மடம், அறுபான் மூவர் மடம், வேதாந்த மடங்களை அழகுற அமைத்தும், 'கண்டோர் இது கைலாயமே' யெனு மாறு ஆக்கி அருளினை.

18. அதற்கு, நல் லோரை கண்டு, சகல சம்பிரமத் துடன் கும்பாபிடேகமும் குறை வற நடத்தினை.

நின் பின் வரு நிலையை முன்னரே யறிந்து, கோவி லூர், ஆடிப் பூர உற்சவ முறைகளை வழி வழி குரு பீடத் தமர்பவர்களுக்கு ஐய மற ஏட்டினில் எழுதிக் காட்டினை.

19. திருக் களரில் சில திங்கள் சென்று, செய்யும் உற்சவ வைபவத்தை, நீ எண்ணிய திங்களிலே முடிக்கக் கருத, அதற்கு ஊறு பல விளைய நினது சத்திய சங்கற்பத் தின்படி அவ் விழாவினைத் தொடங்கிப் பஞ்ச ரதங்களும், பவனி வரும் போது, தென் கீழ்த் திசையில் வந்து தேங்கி விட்டதால். அதை மநத்துட் கொண்டு, உற்சவ மூர்த்தி களைத் தரிசித்துவிட்டு. மடாலய மடைந்து இறைவ னடி கலக்குங் காலம் நமக்கு நணித்தது என்று, நன் குணர்ந்து, அழகப் பையா எனும், அன்பரை கூய், தில்லை நட ராஜப் பெருமானுக்கு அங்கப் பாவாடைக் கட்டளை அமைக்க வேண்டு மென ஆணை யிட்டதும், பூவ னூர் இராசு முதலி யாரை அருகில் அழைத்து. தேவாலயத் திருப் பணிகளை யும், உற்சவாதிகளையும். இனி நீவிரே நடத்தி வருவீராக' எனக் குறிப்பிட்டதும், தன் திரு மேனியை யடக்கஞ் செய்யுங் குகாலயம் ஆக்கிக் கொள்ள, நில மாற்றம் செய்த தும், பன் னுளும் பால் கொடுத்து வரும் கிருஷ்ணக் கோனை யழைத்து, உனக் கினி இரண் டொரு திநத்திற்குத் தான் பால் கொடுக்கும் உரிமை யுண்டு' என்ற ஆஞ்ஞை யும், "அன்பர்களையும், அடியார்களையும், அண்மையில் விளித்து, நாளை கற்பூரம் மலர் மாலைகளையும், அதிகம் சேமித்து வைம்மின்" என்று திரு வாய் மலர்ந்த திருக் குறிப்பும், எமது சிந்தையில் விட் டகலாது குடிகொண்ட வாறு தான் என்னே, என்னே.

20. பள கற்ற நின் குறி பழுது றுது, பல் லாயிரம். அன்பர் பக்கம் சூழப், பாரிஜாத வநப் பெருமான் ரதத்தின் வலப் புறம் நின்று மறைக ளொ லியிடப் பல்லிய முழங்கப் பெருமானைப், பார்த்த கண்ணும், வேர்த்த வுடலும், தொழுத கையும், அழுத

கண்ணீரும், ஆடிய கூத்து மாய், "ஹர, ஹர, மகா தேவ" எனப் பன் முறை பகன்ற பனி மொழி மாறுது, அடியவர் ஆராமை கொள்ள, மக்கள் மநங் கலங்கப், பக்தர் பதறிடப் பூத உடல் நீத்து, ஐயனுக்கு ஆராதனை செய் பூரச் சுடரில் புக்குப் புக முடம்பாய்ப் பொலிந்தனை என்ருல் எண்ணு வார் நெஞ்சம் என் னுருது.

நீ செய்த செயற் கருஞ் செய்கையும், பெறற் கரும் புகழும், எம் சிந்தைக் குகையில், திரு வீற்றிருந்து அந்த மாதியி லளவில் காலம், வாழிய வருண் மதி! வாழிய வருண் மதி!

பாராட் டுரை முற்றும்.

---

உ

*சிவமயம்.*

கோவி லூர் மடம், மகா தேவ ஞாந தேசிக சுவாமிகள் மாணுக்கர், தஞ்சை நன் னிலம்,

## ஸ்ரீ கோவிந்த சாமிகள் எழுதியது

ஸ்ரீ திருக் களர் ஆண்டவ ரென வழங்கும், வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள், கற்றபின், அதற்குத் தக நின்ற விராக ஞாந,

:: *வாழ்க்கைச் சிறப்பும்,* ::

அவ் வாழ்க்கையின் மூலம், உலகுக்கு அறிவித் துள்ள,

:: :: *அறிவிப்புச் சிறப்பும்.* :: ::

---

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள், தமது குரு வாகிய கோவி லூர் ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக சுவாமிக ளிடம், வேதாந்த நூல்க ளாகிய 1. நாநா ஜீவ வாதக் கட்

டளை, 2. கீதா சாரத் தாலாட்டு, 3. சசி வன்ன போதம், 4. மகா ராஜத் துறவு, 5. வைராக்கிய சதகம், 6. வைராக் கிய தீபம், 7. இலக்ஷுணுவிருத்தி, 8. அஞ்ஞ வதைப் பரணி, 9. விவேக சூடாமணி, 10. வேதாந்த சூடாமணி, 11. கைவல்லிய நவநீதம், 12. பஞ்ச தசி, 13. ஈசுவர கீதை, 14. பகவற் கீதை, 15. பிரஹ்ம கீதை, 16. லகு யோக வாசிட்டம் என்னும், பதினாறு நூல்களையும், சிரவணஞ் செய்த பின், உலகிலுள்ள அதிகாரிகட்கு உய்யும் நெறியைத் தாம் ஒழுகி யுணர்த்தக் கருதி, தமது ஞானாசிரியரிடத்தில், நல் லாஞ்ஞையை பெற்றுக் கொண்டு அவ் விட மிருந்து புறப் பட்டு ஐய மேற்றுப் புசித்து, ஆங் காங் குள்ள ஆலய வணக்கங்கள் புரிந்து கொண்டு, ஆதிரை நாயகன், ஆநந்தத் தாண்டவம் புரியும் அற்புதச் சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்து, தில்லைக் கூத்தனை எல்லை யில்லா அன்புடன் வணங்கி, ஆங் குள்ள அருட் டிரு மௌந தேசிகர் மடாலயஞ் சென்று, மௌநத்துடன் தனித் திருக்கும் விருப்பின ராய், ஆங் குள்ள ஒரு சிறு அறையில் தங்கி, இடையறு நிட்டை யுடையராய்ப், பிரம்மாநுசந்தாந விருத்திப் பிரவாகத்தைப் பெருகப் பேணிக் கொண்டும், ஒவ் வொரு கால் விருத்தி வெளிப்படும் போது, ஐய மேற்றுப் புசித்து அம்பலத்தி லாடும் நம்பனைத் தரிசித்துக் கொண்டும், பன் னிரு வருட காலம் மிகுந்த வைராக்கிய ஞானாப்பியாசத்துடன் தவ நாட் கழித்து வந்தனர்.

பின்னர், "தத்துவஞானி காணினும் சகத்தைக் கண்டிலன் தத்துவமே கண்டான்" என்னும் வாசிட்டக் கருத்தின்படியே விவகார வேளை யெலாஞ் சமாதி யுற்று வாழ்ந்து வந்தனர் என்பதற்கு அவர் திரு வாய் மலர்ந்த வாக்கியங்களும் ஒழுக்க நிகழ்ச்சிகளும் வரு மாறு.

பின்னர், திரு வாவடுதுறை சுப்பிரமணிய தேசிகர் வேதாந்த முணர்த்தும் செய்யு ளொன்று கூறுமின் என்று வீரசேகரரை நோக்கிக் கூற, "அற்ப முனக்

கொன் றினிதாகி லதனுற் பிறப்பி லகப்பட்டாய், பொற்ப வுனக்கொன் றினு மினிமை பூ ணு தென்னிற் பிறப் பகன்றுய், நிற்ப நடப்ப பொருட்டிரளி னினக்குத் திரண முதலாகத், தற்ப முறுபொன் முடிவாகச் சற்று மினிமை யுறவேண்டாம். * சொற்பம் உனக் கொரு பொருள் இனிமையைப் பயக்கு மென்று நினைப்பாயானல் அக் காரணத்திலேலே ஜநந மரண சம்சாரத்தில் கட்டுப் பட்டவ ளுகின்ருய். அழகுடையோனே! இது நன்கு என்று உன் றனக்கு, எதன்கண்ணேனும் இனி தாந் தன்மை உண்டாகாது என்றிடில் ஜநந மரணம் விடுபட்டவன் ஆவாய், சராசரப் பிரபஞ்ச சமுதாயத்தில் உனக்குத் துரும்பு முத லாகக் கருவ முறும் தேவதா வடிவ மீருகச் சிறிதும் இனிமையைப் பயக்கு மென்னும் எண்ணம் உறல் வேண்டாம் என்பதாம். என்னும் ஞாந வாசிட்டச் செய்யுளைக் கூற, மேற்படி சுப்பிர மணிய தேசிகர், "இப் போது இச் செய்யுளை யாண்டுத் தேடியுரைத்தீரோ அருமை அருமை" என்று கூறுதல் வாயி லாக மிகவும் பாராட்டி யுள்ளனர்.

பின்னர், கோவி லூர், ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக சுவாமிகளின் திரு வருள் பெற்றுச் சிதம்பரத்தி லெழுந் தருளியிருந்த ஸ்ரீ பொன் னம்பல ஞாந தேசிக சுவாமிகள் கோவி லூர் மடாலயத்தின் தலைவரா யிருந்த கரைக் குடி இராம சாமி ஞாந தேசிக சுவாமிகள், அங்கு விதேக கைவல்ய மடைந்ததைக் கேள்வியுற்று, "இனிமேல் நமது குரு ஸ்தாந மாகிய கோவி லூர் வேதாந்த மடாலயத் தைப் பாதுகாத்து வரத் தக்கவர் வீர முநிவரைத் தவிர்த்து வே றியாவருள்ளார்" என்னுந் திரு வாக்கை யுரைக்க, அம் மொழியைச் செவி மடுத்த, ஸ்ரீ வீர முநிவர் ஈண் டிருக்கின் பெரியா ரரு மொழியை யொரு காலும் மறுக்க முடியாது. அதைக் கொள்ளினே நமது

*(டிப்பணம்) இக் கவியின் பொருள்

வேண்டாமைச் செல்வம் குறைவதுடன் பொன் விலங் கிட்டுக் கொண்ட தொக்கும். அதனால் பிரம்மாநுசந்தாநம் விச்சிந்நப்பட்டு பகிர் முக திருஷ்ட துக்க முண்டாம் எனச் சிந்தித்து, ஏனைய சொற்ப அறிவினராகிய வாய்ப் பிதற்றுத லுடைய வேட ஞாநிகள் விராக நெறிக்குப் பயந் தோடி யொளிப்பது போலவும், சாகாரப் பிரமநிட்டர்கள் நிராகார நிர்க்குணப் பிரம நிட்டைக்குப் பயப்படு மாறு போலவும், பயந் தோடி வளவ னூரி லுள்ள, ஸ்ரீ சண்முக ஞாந தேசிக சுவாமிகள் மடாலயத் திற்குச் சென்று ஒளிந்து கொண்டனர். பின்பு, ஸ்ரீ பொன்னம்பல ஞாந தேசிக சுவாமிகள், வீர முநிவர் வளவ னூரி லிருப்பதைக் கேள்வியுற்றுப், பல பெரி யார்களை, வளவ னூர் மடாலயத்திற்கு அனுப்பி, இத வசநங்களைக் கூறி யழைக்கச் செய்தனர். அப் போது சாதக தசையிலும், சாத்திய தசையிலும், சீவன் முத்தித் தசையிலும், சிறி தளவேனும் சித்தத்தை யலைக்க வல்ல உலக வியவகாரத்தின் வலிமையை யுணர்ந் துள்ள வீர சேகர முநிவர் இவ்வாறு கருதலானார். ஸ்ரீ பொன் னம்பல ஞாந தேசிக சுவாமிகளிடம் சென்று, "சுவாமி என் மனம் பின்னரும் உலக வியவகாரத்தில் ஊடாட எள் ளளவும் ஏற்க வில்லை. ஆதலின், இது விஷயத்தில் விடுதலை செய்ய மிகவும் கேட்டுக் கொள்கிறேன்" என்று கேட்டு, மடாலயத் தலைமை விஷயமாய் விடுதலை பெற்றுக்கொள்ளலா மென்று கருதித் துணிந்து அவர் களுடன் சிதம்பரம் வந்து சேர்ந்தனர்.

பின்னர், வீர சேகர முநிவர் தம் கருத்தைப் பொன் னம்பல ஞாந தேசிக சுவாமிகளிடம் கூறித் தெரிவிக்க; அதற்குப் பொன் னம்பல ஞாந தேசிக சுவாமிகள் கூறிய தாவது, "அறி வொழுக்கங்களிற் சிறந்த அன்புடையீர்! உமது வார்த்தையோ சாத்திரங்கட்கும், ஆன்றோர்க்கும், எமக்கும், ஒப்ப முடிந்த உண்மை யுரையே யாம். ஆயி னும், எம்மை யறியாது நமது குருத் தாநத்தி லுள்ள

அபிமானமானது இங்ஙனம் பிரேரிப்பிக்கின்றது. அஃதன்றியும், நாம் கோவிலூராதீனத்தைக் கொண்டன்றோ கடைத்தேறினோம். அதை நும் போல. முன்னுள்ள பெரியோர்களும், பேணாது கைவிடின், நாம் கடைத்தேற நல்வழி கிட்டலும் அரிதன்றோ! ஞானிகள் விவகாரம் உலகுபகாரமேயன்றோ. மூன்று லோகத்துள்ளும் அடையவேண்டிய தொன்றுமில்லாத கண்ணபிரானும் உலகுபகாரமாய் பார்த்தனுக்குத் தேர் செலுத்தவில்லையோ. மற்றும், ஜநகர். இராமர், வசிட்டர் முதலியோர்கள், வியவகாரங்களில், மநதைச் செலுத்தியும், இலக்ஷியம் நழுவாது இருந்து வரவில்லையோ! குரு ஸ்தாநத்தைப் பேணாவிடின், நாம் செய்யும், கைமாறு தான் என்னை கொல்லோ?'' என்று பல நீதிகளைக் கூற அதை வீரசேகர முநிவர் மறுக்க இயலாது சிறுபான்மை யங்கீகாரத்துடன் ஏற்றுக் கொண்டனர். அவ்வாறு மடாலயத் தலைமை ஏற்கச் சிறுபான்மை சம்மதித்தும் உள்ளத்தில், ''சமாதியில்லாத விடத்து விருத்தியானது விடயவடிவமாகியே விடும்'' என்னும் பதஞ்சலி பகவானுரையையும், ''உருவ முதலிவற்றை யடைந்த சித்தம் கருக்குகையில் விடப்பட்ட தாமிர நீரைப் போன்றும், வயலை யடைந்த நீரைப் போன்றும், விடயாகரமாகியே விடும்'' என்னும் ஆன்றோர்களின் அரிய உரையையும், சிந்தித்துக் கொண்டு சிறிது மனங் கலங்கி, ''வியவகார மென்பதே இராகத்துவேஷ முதலியவற்றிற்கு நிலைக்கள மானது; மோக்ஷமடைவிக்கும் வியவகார மெனினும், யாகத்திற் செய்யும் பசு ஹிம்சை புண்ணியத்தைத் தருவதாயினும், பாவத்தையுமீயு மாறு, சிறிது மநச் சஞ்சலத்தைக் கொடா தொழியுமோ? அக்கினிச்குச் சூடு இயற்கையா மாறு, வியவகாரத்திற்கு விக்ஷேபம் இயற்கை யன்றோ'' என்று எண்ணிக் கிலேச முற்றிருப்பதைக் குறிப்பாற் கண்டறிந்த பொன்னம்பல ஞாந தேசிக சுவாமிகள், வீர சேகரரின் மனதைப் பல நீதிகளை யறிவிக்கும் வாயிலாகத் தேற்றி வியவகார

வேளையிலும் இலக்ஷியம் மாருதிருக்கும் முறைமையில் நிற்கும் நிலையை யறிவித்துக், கோவிலூர் மடாலயத்தின், தலைமை தாங்கு மாறு செய்தனர். வீர சேகர ஞான தேசிக சுவாமிகள், கோவிலூர் மடாலயத்தின் தலைமை தாங்கி இலக்ஷியம் மாருதிருந்து பரிபாலநம் செய்து வந்தனர்.

இவ் வாறு, இறைவனும் பாராட்டும் அற்புதத் தவச் செல்வரா யிருந்தமையால், திருக் களரில் ஸ்ரீ பாரிஜாத வநேசுவராது ஆலய முதலிய திருப்பணிகளைச் செய்து, இரதோற்சவம் நிகழ்த்துங் காலத்தில், பல சுப நிகழ்ச்சிகளும் நிகழ்ந்துகொண் டிருக்க, ஸ்ரீ பாரிஜாத வநேசர் இரதத்தின் முன் னின்ற வீர சேகர ஞான தேசிக சுவாமிகள் அவ் விறைவனுடன் ஐக்கிய மடைதலாகிய விதேக முக்தி யடைந்து, யாவரும் வியந்து பாராட்டிப் போற்றுமா றமைந்தனர்.

இத் தகைய வீர சேகர ஞான தேசிக சுவாமிகளடைந்த மநோ நிலைமை யாகிய உலகப் பற் றற்ற நிரந்தர பிரஹ்மாநுசந்தாந நிலைமையின் சிறப்பையும், அதன் மூலம் உலகத்திற்கு அறிவித்த அறிவிப்புச் சிறப்பையும், புகழ்ந்து பாராட்டாத வேதாகமங்களும் இல்லை. கீதையாதிகளும் இல்லை. புராணாதிகளு மில்லை, என்பது உலகப் பிரசித்தமா யிருக்க, நா மனைவரும் பாராட்டுதல் மிகையாமோ, ஆகா தாம். ஆகவே, அவ் வீர சேகர ஞான தேசிக சுவாமிகளின் திரு வடிகட்கு உள முவந்த வணக்கம் புரிவதோடு, அவர் நடந்து காட்டியதன் மூலம் அவ் வா றொழுகும்படி நமக்கு அறிவித்த வண்ணம் வழுவாது நாமும் சொல்லோடு நில்லாமல் ஒழுகும் வாயிலாக அவ் வீர சேகர ஞான தேசிக சுவாமிகட்கு, நம் மந முவந்த பாராட்டைச் செய்து, சர்வ துக்க நிவிர்த்தி, பரமாநந்தப் பிராப்தி யாகி முக்தியை யுறுவோ மாக.

இருபத்தெண் சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீர்மிகு நகரப் புதுவய லதனிற்
சிவனரு ளுருவமாய்ப் பவித்துச்,
சிறந்திடுங் கோயி லூர்க்குரு பரனுஞ்
சிதம்பர தேசிகன் பிரிய,
சீடனுய்ச் சிரவ ணுதிகள் செய்து
சிதம்பரஞ் சென்றுளந் தெளிந்து,
திரும்பிநற் கோயி லூர்க்குரு பீடம்
திகழவைந் தாவதாங் குருவாய்,
நேர்மிகுஞ் சீடர்க் கருளியா லயங்கள்
நிறைகுளம் மாமடம் இயற்றி,
நிகிலரும் வியக்கக் குடமுழுக் காட்டி
நீர்மையாந் திருக்களர் அடைந்து,
நித்தியப் பாரி சாதவ னேசன்
நீடருள் அமுதவல் லியின்சீர்,
நிலவுமா லயதீர்த் தாதிமா மடங்கள்
நிறுவிநற் குடமுழுக் காட்டித்,
தேர்மிகுந் திருவி ழாமிகு சிறப்பாச்
செயத்திரு ரதங்கள்தென் வீதி,
திருநடச் சபைமுன் செலவரன் ரதமுன்
சென்றிரு கரஞ்சிரங் கூப்பிச்,
சிவமகா தேவ வென்நடம் புரிந்து
தெருட்பரன் உருவமாய் அமைந்தான்,
செப்பருங் கலியை யாயிரத் தோடு
சேர்பனி ரெண்டெனும் ஆண்டில்,
பேர்மிகு விரோதி கிருதுவை காசி
பேணிரு பத்திரே டேழில்,
பேறுறும் வெள்ளி வாரமும் வளரும்
பிறைதிர யோதசி திதியும்,
பெறுபிர தோடம் விசாகநல் லுடுநாள்
பெருமைவீ ரேசதே சிகனே,
பிறங்கவன் பாதம் பணிந்துபா ராட்டிப்
பேரருள் அடைந்துவாழ்ந் திடுவாம்.

உ
சிவமயம்

கோவிலூர் மடம் ஸ்ரீ மகா தேவ ஞான தேசிகர் மாணுக்கர்
சென்னை, வியாசர் பாடி, கர பாத்திர,
சிவப் பிரகாச சுவாமிகள் மடம், சங்க மூர்த்தி
*ஸ்ரீ சுப்பைய சுவாமிகள் எழுதியது.*

## ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமிகள்,
## புகழுரை.

---

"தென்னாடுடைய சிவனே போற்றி" என்று மணிவாசகப் பெருமானால், புகழ்ந்து ஓதப் பெற்ற பாண்டி வள நாட்டில், புது வயல் என்னும் நகரத்தில், மக்கள் செய்த, தவப் பயனால், நம் வீர சேகரனார் கி. பி. 1847-ம் வருடம் திரு அவதாரஞ் செய்தருளினார். நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமு மாக வளர்ந்து, வித்தை கற்று குல சம்பிரதாயப்படி திரை கடல் தாண்டி திரவியம் சம்பாதித்து வருங்கால், பூர்வ புண்ணியம், "தண்டுதலின்றி முன்தானே தலைப்படும்" என்ற கீதா வாக்கியத்திற் கிணங்க பொருள் தேடுதலில், அருவருப்பு உற்று, அருள் தேடுதலில், நாட்டங் கொண்டார். தமது ஊரை யடைந்து சிதம்பரச் சேத்திரம் சென்று, முதலில் பட்டினத்தார் பாடலைப் படித்து, அதன் பொருள்களை யுணர்ந்தார். மனதில் திட வைராக்கியம் உதித்தது. அஞ்ஞ வதைப் பரணி பயின்றார். அஞ்ஞானத்தை வேரோடு களையும் மெய்ஞ்ஞான பானு வாதற்கு விழைந்தார்.

கோவிலூரை யடைந்து, "கருணாநிதி" என்ற ஸ்ரீ சிதம்பர ஞான தேசிகர்பால், வேதாந்த நூற்களைப் பாடங் கேட்டுச் சிந்தித்து வந்தார். பின்னர் நாகப்பட்டினத்தை அடுத்த சிக்கல் திரு மடாலயத்திற்குச் சென்று, சட்டை யப்ப

சுவாமிகளிடம் சந்நியாசம் பெற்றுக்கொண்டார். யாத்திரை யாகச் சிதம்பரஞ் சென்று, கர பாத்திர பிச்சை யேற்று உண்டு, பிரம்ம அநுசந்தாந பரராய் விளங்கினர். பொன் னம்பல ஞாந தேசிக சுவாமிகள் மடத்தில் தங்கி யிருந்து, வேதாந்த சிரவணம் செய்து வந்தார். அப் பொழுது கோவி லூரில் இருந்த ஸ்ரீ இராம சாமி ஞாந தேசிக சுவாமி கள் பரிபூரண மானார்கள். நம் வீர சேகரனர் முதலில், அம் மடாலயத் தலைமை ஏற்க ஒத்துக்கொள்ள வில்லை யாயி னும், ஸ்ரீ பொன் னம்பல ஞாந தேசிக சுவாமிகளது வற் புறுத்தலுக் கிணங்கி, கோவி லூர் மடாலயத் தலைமை ஏற்று இரு பத் தெட்டு வருஷ காலம் இருந்தனர். கோவி லூர் கொற்ற வா ளீசர், திரு நெல்லை யம்மன் கோவில் திருப் பணிகளும், மடாலயத்தில், கருணு நிதி சமாதி ஆல யம், கருங் கல் மண்டபம், கைலாசக் கொட்டகை பிரம சபை முதலிய திருப் பணிகளும் செய்து முடித்து, கும்பா பிடேகமும், சிறந்த முறையில் மந்திர லோபம், திரவிய லோபம், கிரியா லோபங்க ளில்லாமல், நிறைவேற்றினர் கள்.

வேதாந்த பாடங்கள், அவர்கள் காலத்தில், ஏழு முறை வாசிட்டம் வரை நடந்திருக்கின் றன. சிருங்க கிரி ஜகத் குரு சங்கராச்சார்ய சுவாமிகள் பீடம் ஸ்ரீ சச்சிதா நந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகளைக் கோவி லூருக்கு அழைத்து வந்து, ஒரு மாதம் வைத்திருந்து, பாத பூசை செய்து, சாரதாம்பாள் கோவில் திருப் பணிக்கு அரை லக்ஷ ரூபாய் சேகரித்துக் கொடுத்தார்கள். ஜகத் குரு நம் வீர சேகரனர் மேல் ஆசீர்வாத பஞ்ச ரத்நம் என்ற ஐந்து வட மொழிச் சுலோகங்களை இயற்றிக் கொடுத்தார் கள். நான்கு சாதநங்களும், நிரம்பப் பெற்று வைராக்கிய சீலர்களாயும், நிஷ்டாநுபவிகளாயும், அசேஷ சாஸ்திர பாண்டித்யம் பெற்றவர்களாயு முள்ள பல சிஷ்யர்கள் நம் வீர சேகரனர்க்கு உரியவர்கள் ஆனார்கள். அவ் வனை வரும், வீர சேகரனர் புகழை வா னளாவ ஓங்கச் செய்

தார்கள். செய்கின்றார்கள், அவர்களில் சென்னைச், சுப்பைய ஞான தேசிக சுவாமிகள், இரண்டாம் பாடம் வெங்கடாசல சுவாமிகள், நாராயண சுவாமிகள், வெள்ளி யங் கிரி சுவாமிகள், சிவானந்த சுவாமிகள், திருப் பூ வணம் காசிகாநந்த ஞானாச்சார்ய சுவாமிகள் ஆகிய இவர்கள், முக்கிய ராகக் கருதப்படுகிறார்கள். மேலே சொல்லிய ஆறு சீடர்களில் முன்னைய ஐவரும் விதேக முத்தி அடைந்துவிட் டார்கள். திருப் பூ வண சுவாமிகளோ என்றால், இப் பொழுதும் இருந்து பயன் கருதாது, பல் லாயிர ரூபாய்கள் செலவு செய்து. நம் வீர சேகர இறைவர் புகழ்களைப் பாடல்களாகச் செய்தும், செய்வித்தும், திரு வெம் பாவை பாடச் செய்தும், அச்சு வாகநம் ஏற்றி'வைத்துப் புத்தக மாக ஆக்கியும், பரப்புகிறார்கள். இவர்களின் குரு பக்தி தான், என்னே! என்னே!!

நம் வீர சேகர இறைவர் சோழ நாட்டில், திருக் களர் க்ஷேத்திரத்தில், ஆலயத் திருப் பணி செய்து, மடா லயமும், ஸ்தாபித்துக், கும்பாபிடேகமும் சிறப்புற நடத்தி னார்கள். தமது முற் றறி வுண்மையால், தேக வியோகம் சமீபிப்பது தெரிந்து, கும்பாபிடேக மான மறு மாதமே பிரமோற்சவம் நடத்தி, 1911ம் வருஷம் தேர்த் திரு விழா வன்று ரத வீதியில், சுவாமி அம்பாள் ரதத்தில் ஆரோகணித் திருக்கும் சமயத்தில், "மகா தேவ! மகா தேவ!" என்ற திவ்ய சப்தம் ஒலிக்க, விதேக கைவல்யம் அடைந்தார்கள். திருக் களரில்' சமாதி ஆலயங் கட்டி நித்தியப்படி பூசை சாது சங்க வேதாந்த விசாரணை நடந்துவருகின்றன.

சுருங்கச் சொல்லின், நம் வீர சேகரனார் நிஷ்டையில் சநகாதி முனிவர் போன்றும், வியவகாரத்திலும், தத்துவ ஞானத்திலும், சநக ராஜாவைப் போன்றும், சாஸ்திரத்தில் வியாசரைப் போன்றும், துறவில் பட்டிநத் தடிகளாரைப் போன்றும், சிவத் திருப் பணியில் மணி வாசகப் பெருமா னைப் போன்றும், குரு பக்தியில் தத்துவ ராய சுவாமி

களைப் போன்றும், நிர்வாண தசையில் திரு ஞான சம்பந்த சுவாமிகள், சுந்தர மூர்த்தி சுவாமிகளைப் போன்றும், விளங்கிய நம் வீர சேகர எந்தை யாரது திருப் புகழ்ப் பிரபாவத்தை, இந்த அவர்களது ஐம் பதாவது குரு பூசைப் பொன் விழாத் திநத்தில், நினைவு கூர்கின்ற நம் மனோர்க்கும், திட ஞாநத்தோடு கூடிய உள்ளத் தெளிவும், கெம்பீரமும், உண்டாகும் என்பது மிகையாகாது.

வீர சேகரன் விரை மலர்த் தாள் வாழ்க!

---

ஓம் தத் ஸத்:

கோவி லூர் ஆதிநம், 7வது சந்நிதாநம்,

ஸ்ரீ மஹா தேவ ஞாந தேசிகரின் பாத சேகரன்,

அத்வைதாநந்தன், பர குருவின்,

**50வது ஆண்டு பொன் விழாவில் எழுதிய மலர்.**

---

விருத்தம்.

ஓது வார்க்கிருள் ஒழித்திடும் வலம்புரி இறையை,
மாது பாகனுக் கருளிய மஞ்ஞையூர் குகனைப்,
பாது காத்தருள் பண்ணவி யமுதவல் லியினை,
காது மேமுறல் கழற்றிய களிறை காப்பாம்.

பாரி டைப்பவக் கடலினிற் பதைத்தபக் குவர்க்குப்,
பேரி னிற்பொரு ளொன்றெனும் பெரும்பட கீந்து,
தேரி டைத்தெளி யாதவன் திருவருட் திறத்தைத்,
தூர மன்றிது தேரெனத் துரிசறக் காட்டி,

குளகம்.

காரி டைப்பெருங் கைவளஞ் சோரவெண் ணீறைக்,
காரி கைமுத லியாவற்குங் கரத்தினு லீந்த,
வீறு டைப்பெரு மெந்தையாம் வீரசே கரன்றன்,
பாரி ஜாதவ னடிமலர் சேர்ந்தசீர் பகர்வாம்.

உலகில் செந் தமிழ் நாடு மிகச் சிறந்தது. அதில், சோழ நாடு சோறுடைத் தென்ப. நீருளார் கயல் வாவி சூழ் பொழில் நீண்ட மா வயல்களும், கொங்குலா மலர்ச் சோலை வண்டினங் கிண்டி மா மது வுண் டிசைபாடுவதும், தெங்கும் பைங் கமுகும் புடைசூழ்ந்ததும், தொன்மையாம் துருவாச மா முநிக்கு, அம்பலத் துறைவான் திருக் கூத் துகந்ததும், பண் ணியாழ் பயில்கின்ற மங்கையர் பாட லாடலோ டார வாழ்வதும், பாக்கியம் பல செய்த பக்தர்கள் பாட்டோடு பணிகள் செய்வதும், ஆகுலர்க் கருள் செய இடப்பா லழகேசுவரி, சமேத களர், முளையீசன் திருக் கோவில் கொண்டிருப்பதும், "அடைந்தார்க் கருளாயே" என்ற ஞான சம்பந்தர் வாக்கின்படி வீர சேகர ஞான தேசிகருக்கு முத்திப் பே றளித்ததும், மூர்த்தி தலம் தீர்த்தம் முறை யாக வமையப் பெற்றதும், பூ மா துக்குத் திலகம் போன்றது மாய, திருக் களரைக் கண்டு கேட்டுத் தொழுது வலஞ் செய் துருகார் மந மென்ன மநமே

எக் காலமு மடியா ருறையுந் திருத் தல மாகிய அத் தலத்தில் வீர சேகர முநீசுவரரது 50வது ஆண்டு நிறைவு பொன் விழாவி லவரது சீர் பரவ வரையும் பாக்கியம் பெற்ற பேறு நற் பேறே யாம்.

## 1. அவதாரம்.

சீர் காழி சிவ பாத விருதயரும், பகவதியாரும், மகப் பெறுவான் தவ மியற்றிறைற் போல, பாண்டி நாடே பழம் பதியாகவும், "தென் னுடைய சிவனே-போற்றி" என்றும், சோம சுந்தரப் பெருமான் பாண்டிய னய் ஆண்டதும், நரை பழுத்த துறைத் தீந் தமிழ் ஒழுகுஞ் சங்கத் தலைவ னுக வீற்றிருந்ததும், மீநாக்ஷி ஆட்சி இயற்றியது மாய, வள மிகு பாண்டி நாட்டில், தொண் ணூற் ருறு நகரங்களை யுடைய தந வணிகர் குலத்தில், புதுவய லென்னும் நகரத்தில், அருள் நெறி மாரு அருணுசலஞ் செட்டியாரும், உண்மை நெறி யுறு முமையா ளாச்சியும்,

நா டோறுஞ், சா க் கி க் கோட்டையில், திருக் கோவில் கொண்ட வுமை யாம்பாள் சமேத வீரேசுவரரை முக் கரணங்களா லும் வழிபாடியற்றி நன் மகப் பேறு வேண்டிப் பிரார்த்தித்து, அவ் விறை யருளால், 1848ம் ஆண்டில், ஆண் மகவைப் பெற்று, அவ் வீரேசுவரர் நாமத்தையே சூட்டிக் கண் மணி யெனக் காதலித்து வளர்த்து வந்தார் கள்.

## 2. கல்வி பயில்தல்.

நா ளொரு மேனியும் பொழு தொரு வண்ணமு மாக வளர்ந்து, அறிவுக் கல்வியுந் தொழிற் கல்வியும் பயின்று பொரு ளீட்டி வருங்கால், "கற்க கசடற கற்பவை கற்ற பின் நிற்க அதற்குத் தக" எனப் பொய்யா மொழியின் படி எய்தற் கரிய வாக்கை யெய்திற்று? உய்தற் குரிய நெறி யாது? நீர்க்குமிழிக்கு நிக ரானது ஆக்கை செல்வம் நில்லாது என வுசாவுங்கால், அவ் வூர் பெரியார் அழகப்ப ஐயா வீரப்ப ஐயா இவர்கள் சந்தித்து வைராக்கியம், பக்தி, ஞானம், பொதிந்த நூற்களை ஈ ந் து கற்கும்படி செய்ய, அந் நூற்களைத் தான் பழம் பாடல்கள் போல், எளிதில் கற்று அவர்களிடம் ஒப்புவிக்க கண்டு, "தேசார் குரு நூல், மாணுக்கன் சிறக்க இம் மூ வருங்கூடிற், பாசா தீதப் பர மெய்து மென வெண்ணி அவ் வீர சேகரனைத் தவருறை யுங்" கழநிநகர்க் கனுப்புவித்தார்கள்.

## 3. குருவை நாடி வரல்.

வட லூர்ப் பதி ஸ்ரீ அருட் பிரகாச இராம லிங்க வள் ளலார் முன் சிதம்பரத்தி லிருக்கும் நா ளில் அடியவர் காட்டிய ஏட்டின் பாடல்களைப் பார்த்து, அவ் வேட்டினை கண்களில் ஒத்தி சிரசில் வைத்துக் கொண்டு, இதற்கு முகவரி (டைடல்பேஜ்) ஆண்டவர் சுவா நுபவத் திரு வாக்கு என்று எழுதி யச்சிட வேண்டு மெனக் கூறிய

அநுபூதி நிறைந்த நம் கோவி லூர் ஸ்ரீ முத்தி ராம லிங்க வரு ளிறைவர், திரு நெல்லை யம்பா ளாலயத்தையும், மடாலயத்தையும், சிறப்புறச் செய்ய வல்ல, "வீரன் வருவா" னெனக் கூறிய திரு வாக்கின்படி வருகின்ற வீர சேகரர், திண்ணனுர் காளத்தி நாதனைக் காணச் சென்றது போலக், கோவி லூர் சென்று, வேத வாகமச் சென்னியில் விளை பொரு ளபேதம் பேத மாகிய பிணக் கறுத்து இருட் பிணி யவிழ்த்து நாத னுகிய தன்னையும், என்னையும், நல் கும் போத னுகிய குருபரன் கிடைத்த ஆர்வத்தால் பாத கமலத்தில் வீழ்ந்து வணங்க, அருளே திரு மேனி யாக சிருங்க கிரி நர சிம்ம பாரதி சுவாமிகளால் கருணை நிதி யெனக் காரணப் பேர் சூட்டிய, அச் சிதம்பர ஞான தேசிக மூர்த்திகள், ஆமை மீன் பறவை போலத் தீட்சை செய்ய, இரும் புண்ட நீ ரென, வீர சேகரரைப் பார்த்துத் திரு வாதவூ ரடிகளை யொப்பா னெனக் கருதிச் சிக்கலுக் குத் தனது பரம குருவின் சந்நிதானத்திற்கு அநுப்பு விக்க, அங்கு கல் லாடை பெற்று, சிதம்பரம் ஆச்சாள் புரம் முதலிய க்ஷேத்திரங்களில் பிச்சை யேற் றுண்டு, பேத மற்று, இச்சை விட்டு, ஏகாந்த முற்றுத், தம்மை மறந்து, அரு ளமுத முண்டு சமாதி நிட்டராக விருந்து வந்தார்கள்.

கோவி லூரில் 5வது குரு மஹா சந்நிதான மாக அமர்தல்.

வணிகர் குல வோஷிகள் தழயப் பிறவி வெப்பத்திற் சுழலும் பக்குவர்கட்கு வுபதேச மழை பொழிய, அவத ரித்து ஆண்டவர் வாக்கியத்தைப் பூர்த்தி செய்யப், பெரிய சுவாமிகளின் திரு வாக்கிற் கெதிர் வாக்குச் சொல்லாது மடாலய வதிபதி ஸ்தானத்தை யேற்று அம்பா ளாலயத் தையும், மடத்தையும், கோவி லூரையும், பார்ப்பவர்கள் இது கைலாசமோ, பிர்ம லோகமோ, எனப் பிரமிக்க அழகு படுத்தியும், திரு நெல்லை யம்பாள், கோவி லூர் ஆண்டவ ரிடம் கொடுத்த தேங்காய் பழம் பூவைக் கொண்டு மாரு தந்நதானம் நடைபெறத் தச்சுச் செய்வதற்கு ஏற்ப விழை

நிலங்கள் வாங்கியும், சிக்க லாண்டவர் சந்நிதாநம் கோவி லூர்ப் பரம்பரையின் குரு ஸ்தாந மென நிலை நாட்டியும், சிதம்பரத்தில் அர்த்த சாமத்தில் சம்பா கொஸ்துக் கட்டளை ஏற்படுத்தியும், இன்னும் பல அறங்களை, "நற் பாத்திர மென அறிந்து வேண்டும் போ தெல்லாம் வேண்டியதைப் பாரி யென வழங்கும் தந வணிகரால் கொடுத்த தநங்களைக் கொண்டு செய்து வந்தார்கள்.

திருக் களர் செல்லுதல்.

பூவ னூர் இராஜு முதலியார், பாரி ஜாத வநேசுவரர் ஆலயத்தை ஜீரணோத்தாரணஞ் செய்து முடிக்க விருப்பங் கொண்டு. வீர சேகர ஞாந தேசிகர் து தவ மகிமையும், திருப் பணிகள் கும்பாபிஷேகஞ் செய்து, முடிக்கு மாற்ற லையும், கேள்விப்பட்டு, கோவி லூர் சென்று தெரிசித்து விண்ணப்பிக்கத், திருக் களருக்கு எழுந்தருளி அமிர்தவல்லி சமேத கள ரீசனைக் கண்டு களி மிகக் கொண்டு, பணி செய் யப் பிரயத்தந முற்றும், புநித ஞகி நிராசைதனை யுள்ளே தேக்கிப், புறத்தே யாசையாற் றொழில்கள் பூண்டான் போலா, யதனு ளுட் சீதள மாய்ப், புறம் வெய் தாகி யாவரத முலகில் விளையாடும் வீர சேகரனுர், பொரு ளீட்டி திருப் பணியைப் பூர்த்தி செய்து, கலி 5013க்கு விரோதி கிருது வூ சித்திரைமீ 22உ குரு வாரத் தன்று, கும்டாபிஷேகஞ் செய்வித்த காக்ஷியைக் காணக் கண்க ளிரண்டு போதாதன வாக விருந்தன என்பர்.

முத்திப் பேறு.

உடன் கோவி லூர் சென்று அங் காண்டவர் சந்நிதி யிலும், திரு நெல்லை யம்பா ளாடிப் பூர உத்ஸவமும், நடைபெற வேண்டிய முறைகளையும், ஏட்டில் எழுதும்படி செய்வித்தும், தான் திருக் களருக்குப் பிரயாண மாகி யறந் தாங்கி வந்து, காளைகளை விற்றுவிட்டு, வண்டியை வாட

கைக்கு மாடு கூட்டிக், கோவி லூர் மடம் கொண்டு சேர்ப்பிக்க உத்தரவு கொடுத்துவிட்டு, புகை வண்டியில், திருக்களருக்கு வந்து சேர்ந்தவுடன், இராஜு முதலியாரை அழைப்பித்து, 25ம் நாள் வைகாசித் திங்கள் 13உ அரைமண்டலத்தில் அபிஷேகஞ் செய்து, உடனே பிரமோத்ஸவமும், நடத்த வேண்டு மென வுத்தரவு செய்ய, முதலியார் முதலிய அன்பர்கள், மதுரையில் வந்தியின் கூலி யாளாய் வந்தவனையும், மணி வாசகரையு மறியாப் பாண்டியனைப் போல, வீரசைவரை யறியாதவர்க ளாய்ப், பணியாளர்கள் சிரம முறுவார்கள்,வரு மாண்டு சிறப்புற நடத்தலா மெனப் பிரார்த்திக்க. மருணீங்கி மாசறு காக்ஷியராகிய நம் ஆண்டவர் அம் மொழியைக் கேட்டு, இன்றிருந்தவரை நாளை யிவ் வுலகி லிருந்திடக் கண்டிலே, மாகையால், வரு மாண்டு நா மிருந்து நடத்தல் நிச்சயமோ, ஆகையால், இவ் வைகாசித் திங்கள் பூர்வ பக்ஷம் சதுர்த்தி திதி புநர் பூச நக்ஷத்திரத்தில் கொடி யேற்றி விசாக நக்ஷத்திரத் தன்று, தீர்த்த வாரி நடத்தும்படி செய்யுங்க ளென வுத்திர விட்டு மறு வாண்டு சித்திரை மாதத்தில் வழக்கம் போல் நீங்கள் நடத்திக் கொள்ளுங்க ளென, அவ் வுத்தரவை யேற்று, விழாவைத் தொடங்க, அது நடந்தேறி வருங்கால், அவ் விழாவிற்கு அவசியம் வந்து சேரும்படி, பக்தர்களுக்கும், அடியார்களுக்கும், முடங்க லனுப்பி, எல்லோரும் வந்து இந்திர லோகம் போல, விளங்கும் திருக் களரையும், விழாவையுங் கண்டு, களி மிகுத்திருக்கும் 8ந் திரு விழா பூர்த்தி யாக 9ம் நாள் பஞ்ச மூர்த்தியையும், ரதாரோகணஞ் செய்வித்து வடந் தொட்டிழுத்து தென் கிழக்கு மூலை திரும்பினவுடன் ஆண்டவர், மடத்துக்கு யெழுந்தருளி, களை யாறிய பின், அடியார்களை யழைப்பித்து நாளைக்கு வேண்டிய பூமாலைகள் தயார் செய்து வைக்கும்படி உத்தரவிட்டு, மணியகாரரை யழைத்து கர்ப்பூரம் விபூதி தயார் செய்து வைக்கும்படியும் உத்தரவு செய்து,நாளை ஆட்டுப் பால் வேண்டிய தில்லை எனக் கூறியு மிருக்குங் கால், இராஜு முதலியார் தென் கிழக்கு மூலையி லிருந்து, தேர் நகர வில்லை, ஆட்கள்

களைத்து விட்டார்கள் நாளைக் காலையில் வந்து இழுத்து நிலை சேர்க்கக் கருதுகிறோமெனக் கூற, அவ்விதமே நடக்கட்டும் நாளையிலிருந்து சகலத்தையும் நீரே கவனித்து நடத்தி, வாரும் என்று கூறி யனுப்பிவிட்டார்கள். சூரியனும், நாமும் நாளை யதிகாலையில் வரலாமென, மேற்குச் சமுத்திரத்தி லாழ்ந்தான்.

10ம் திருநாள் இந்திரன் திசை எழுங் கதிரவன், களரீச னருள் காண, விரைந் தெழலும் ரத மீர்க்கும் பக்தர் குழாங்கள் கூடிப் பேரொலியுடன் வந்து சேர்ந்து, ரத மீர்க்க வாரம்பித் தீர்க்குங்கால், நம்மை யெல்லா முய்விக்க வந்த வீர சேகர மூர்த்தி, நித்திய கடன்களை முடித்துக் கொண்டு, அடியார்களும், நகரத்தார்களும், பக்தர்களும், புடை சூழ தெற்கு வீதியில் பிரம தீர்த்த மேல் கரையும், திருக் கூத்தன் சந்நிதியு மான ஸ்தலத்தில் தேரின் முன், எழுந்தருளி ஐந்து ரதாரோஹண மூர்த்திகளுக்கும் 5 கிளை கற்பூரார்த்தி, ஏக காலத்தில் செய்யும்படி தெரிவித்து, செய்யுந் தருணம், "ஹர ஹர மஹா தேவ" என்று சொல்லி, மக்கள் "நமப் பார்வதி பதயே" என கோஷிக்க, ஆண்டவர் ஆநந்தக் கண்ணீர் சோரத் தாண்டவஞ் செய்து, தலைமே லஞ்சலி ஹஸ்தராய் ஆக்கை சோர் வடைய அறிவு பேரறி வெய்தி, ஜோதியாகப் பக்கலில் நின்றோராய அந்தணர், அடியார்கள், ஆண்டவரைக் கைகளால் தாங்கி மடாலயம் கொண்டு வந்து சேர்த்தார்கள். நம தாண்டவர், "கோலியொரு சுமை சுமப்பான் குறித்த எல்லை கொண்டு போய் போடுவ போல் குரம்பை போட்டு, மாலுருபற் றொன்றின்றிப் பூவின் நாற்றம் வானுறல்போல் பரமபத வாழ்வை" கலி 5013க்கு, விரோதி கிருதுஹூ வைகாசிமீ 27உ சுக்கிர வாரம் விசாக நக்ஷத்திரத் தன்று, பெற்றூர்கள். அந்த நா டொடங்கி 50வது ஆண்டு பூர்த்தியாயினவாகையால், அவ் வாண்டவர் பெருமையை வரையும் பாக்கியம் பெற்றேன்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

உ

சிவ மயம்.

கோவிலூர் மடம், ஸ்ரீ மகா தேவ ஞான தேசிகர் மாணுக்கர்
திருக் களர், கோ. ஆ. வீர. மடம்,
*ஸ்ரீ சோம சுந்தர ஐயா எழுதியது.*

## நீடூழி வாழ்க!

---

புண்ணிய பூமி யாகிய நம் பரத கண்டத்தில், தொன்று தொட்டே பிரம்ம ஞானிகள் இருந்து வருகிறார்கள், இருந்து வரினும், "தாரகைக ளொருகோடி வானத் திருக்கினுஞ் சந்திரற் கீடாகுமோ" என்பதற் கேற்ப ஏக தேசம் ஏதோ ஒரு காலத்தில் சில மகா புருஷர்கள் அவதரிக்கிறார்கள். அத் தகைய மகா புருஷர்கள் தங்களை அண்டி யடுத்த ஜீவர்களையுங் கடைத் தேற்றித் தாங்களுங் கடைத் தேறுகிறார்கள்.

அப்படி யவதரித்தோர் யாவ ரெனின்;- ஸ்ரீலஸ்ரீ ஆதி குரு சங்கராச்சாரிய சுவாமிகள் முதலியோர்கள், ஸ்ரீ திரு ஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் முதலிய சைவ சமயா சிரியர்கள். நம்மாழ்வார் முதலிய வைஷ்ணவப் பெரியார்கள், ஸ்ரீ மெய்கண்ட சிவாசாரியார் முதலிய சைவ சந்தான குரவர்கள், துறவரச ராகிய பட்டினத்துச் சுவாமிகள், ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள், ஸ்ரீ தத்துவ ராய சுவாமிகள், ஸ்ரீ சிவ ஞான பாலைய தேசிக சுவாமிகள், துறை மங்கலம்—சிவப் பிரகாச சுவாமிகள், துறையூர்ச் சிவப் பிரகாச சுவாமிகள், ஸ்ரீ சாந்த லிங்க சுவாமிகள், ஸ்ரீ குமார தேவ சுவாமிகள், திருப் போரூர்ச் சிதம்பர சுவாமிகள், அத்வைத அமிர்த வருஷம் பொழியும் மகான் தாயு மான சுவாமிகள், நெரூர் சதா சிவப் பிரமேந்திர சுவாமிகள், திரு விசநல்லூர் ஸ்ரீதர வேங்கடேச சுவாமிகள்,

கோவிந்த புரம்—போதேந்திர சுவாமிகள், வடலூர் இராம லிங்க சுவாமிகள், ஸ்ரீ ராம கிருஷ்ண பரம ஹம்ஸ சுவாமிகள், முதலியவர்கள் ஆவர். இவர்க ளெல்லாம் "செயற் கரிய செய்வார் பெரியர்" எனத் தமிழ் மறை கூறும் இலக்கணத்துக்கு இலக்கிய மாய் வாழ்ந்தவர்கள்.

இத் தகைய மகோந்நத அவதார புருஷர்களின் வரிசையில் ஒருவ ராய் வந்த புண்ணிய புருஷர், நம் திருக் களர் ஆண்டவர் என்னும் ஸ்ரீலஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் அவர்கள். இம் மகான் தேட்டுக் கடங்காச் செல்வ மிகுந்த நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் குலத்தில், கண்ட னூருக்குச் சமீப முள்ள புது வயல் என்னும் ஊரில், அருணாசலஞ் செட்டியார் உமை யம்மையார் என்னும் இருவர்களின் தவப் புதல்வ ராய்க் கல்யப்தம் 4949க்குச் சரி யான கீலகஞு ஆவணிமீ 12உ வெள்ளிக் கிழமை யன்று திரு அவதாரம் புரிந்து, வளர்ந்து கல்வி பயின்று இளமையில் துறவி யாகிச் சிந்திப்பன தருஞ் சிந்தா மணி யாய் விளங்குங் காரைக் குடியைச் சேர்ந்த (ஸ்ரீ சாலி வாடீசுவரி சமேத ஸ்ரீ ராஜ கட்க பரமேசுவரர் எழுந்தருளி விளங்கும் ஸ்ரீ சமிவந க்ஷேத்திரம் என்னும்) கோயிலூர் ஸ்ரீலஸ்ரீ முத்து ராமலிங்க ஞாந தேசிகர் அவர்கள், ஞாந பீடத்தில் ஐந் தாங் குரு மூர்த்தி யாய் விளங்கிஞர்கள்.

சிருங்க கிரி ஆதி குரு ஸ்ரீலஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமி கள் அவர்களது சாரதா பீடத்தை அலங்கரித்தவர்களில் பதி ேஞராவது பட்டம் வகித்தவர்கள், ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள் அவர்கள். இவ் வித்தியாரண்ய சுவாமிகளிடம் அநுக்கிரகம் பெற்ற அநந்தம் பெரியோர்களில், ஸ்ரீ சுப்பிர மணிய தேசிகர் என்பவ ரொருவர். அன்ஞர் சீடர் நயினி யப்ப தேசிகர். அவரது சீடர் அழகப்ப ஞாந தேசிகர். அவர் தம் சீடர் வீர பத்திர சுவாமிகள், அப் பெரு மானது சீடர். முத்தைய சுவாமிகள், அப் பெரியா

ருடைய மாணவர், சிக்கல் உதந்த லிங்க தேசிகர். அம் மகானது அநுக்கிரகம் பெற்றவர், கோயி லூர் முத்துராம லிங்க சுவாமிகள். அப் புண்ணிய புருஷரது சீடர், துறவு அருணசல சுவாமிகள். அவரது சீடர் கருணாநிதி சிதம் பர சுவாமிகள். அவரது சீடர்கள், ஸ்ரீ பொன் னம்பல ஞாந தேசிகர், காரைக் குடி இராம சாமி சுவாமிகள், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் முத லாக அநந்தம் பெரியோர்கள். இவர்களில், காரைக் குடி இ ரா ம சா மி சுவாமிகள் கோயி லூரில், நா ன் காங் குரு மூர்த்தி யாகவும், ந ம் வீரசேகர ஞாந தேசிகர் அவர்கள், ஐந் தாங் குரு மூர்த்தி யாகவும் விளங்கினார்கள் (ஸ்ரீ பொன் னம்பல ஞா ந தேசிகர் அ வ ர் க ள், சிதம்பரத்தில் ம ட ம் ஏற்படுத்தி வீற்றிருந்து அம் மடத்திலேயே சமாதி கொண்டு விளங்கு கிறார்கள்.) கோவி லூர் மடத்தில், நம் வீர சேகர ஞாந தேசிகப் பெருந்தகையாருக்குப் பின், ஸ்ரீ அண்ணா மலை ஞாந தேசிகர் அவர்கள் ஆறாங் குரு மூர்த்தி யாயும், (எமது குரு நாதர்) ஸ்ரீ மகா தேவ ஞாந தேசிகர் அவர்கள், ஏ ழாங் குரு மூர்த்தியாயும், வீற்றிருந்தார்கள். இப் போது ஸ்ரீ சோ ம சுந்தர ஞாந தேசிக சுவாமிகள், அவர்கள் எட்டாங் குரு மூர்த்தியா யிருந்து வருகிறார்கள்.

இது நிற்க: நம் வீர சேகரனார் பாலியத்திலேயே துற வொழுக்கத்தில், நிற்க விரும்பினார்கள். உள் ளூரிலேயே வேதாந்த நூல் சிறிது கற்றார். பல ஊர்களில் சஞ்சரித்தார். சோழ நாட்டி லுள்ள, சிக்கல்-பொருள் வைத்த சேரியைச் சார்ந்தார். மகான் ஸ்ரீ உகந்த லிங்க ஞாந தேசிகர் அவர்கள் ஞாந பீ ட த் தி ல் அக் காலத்தில் வீற்றிருந் தருளிய ஸ்ரீ சட்டை யப்ப சுவாமிகள் என்னும், பெரியாரிடம் (துறவு நூல் முறைப்படி) சந்நியாசம் பெற்றார். அங்கு வசிக்குங் காலத்தில், தாயாதியரில் ஒருவ ராகிய நல்ல தம்பி செட்டியார் என்பவர் சென்று கண்டு, பி றப் பிட மாகிய புது வயலுக்கு வர வேண்டு மென்று அழைத்தார். அதற்கு நம் வீர சேகரனார், "சுட்ட மண்ணும் பச்சை

மண்ணும் பொருந்துமோ, சுடு காடு போன பிணந் திரும்புமோ'' என்று சொல்லி விட்டனர்.

பின்பு பல ஊர்களில் பிச்சை யேற் றுண்டு சஞ்சரித்துக் கொண்டிருந்து காரைக் குடியைச் சேர்ந்து விளங்கும் கோவி லூர் மடத்தில், அப் பொழுது மூன்றாங் குரு மூர்த்தியாய் வீற்றிருந் தருளிய ஸ்ரீ கருணா நிதி, சிதம்பர சுவாமிகளிடம், வந்து சர ணடைந்து. ஆங் குள்ள நியமப்படி சில காலத்தில், நாநா ஜீவ வாதக் கட்டளை முதல் ஞாந வாசிட்டம் வரை பதி ணறு நூற்களையும், முறை யாகப் பாடங் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து, நிட்டைகூடி ஞாந தீரராய் விளங்கினார். பின்னரும் பல தலங்களில் சஞ்சாரம் செய்து, ஒரு சமயம் சிதம்பரம் சென்று. (கோவி லூரில் தனக்கு இரண்டாம் பாடம், போதித்த ஞாந புருஷ ராகிய) மகான் ஸ்ரீ பொன் னம்பல சுவாமிகளிடம் தங்கியிருந்தார். அச்சமயம் தம் குரு ஸ்தாந மாகிய கோவி லூரில் கருணா நிதி யவர்களுக்குப் பிறகு அந்த ஸ்தாநத்தை வகித்து நடத்தி வந்த (காரைக் குடி) ஸ்ரீ இராம சாமி சுவாமிகள், விதேக கைவல்லியம், அடைந்து விட்டார்க ளாதலால், பல பெரியோர்களும், ஒரே மனப் பான்மையுடன் நமது வீர சேகர பெருந்தகையாரைக் கோயி லூர் ஞாந பீடத்தில், ஐந் தாங் கு ரு மூர்த்தி யாக விருக்க வேண்டு மென்று விரும்பி வற்புறுத்திக் கூ றி னா ர் க ள். விராகத்திலேயே சிறந் தி ரு ந் த மை ய ா ல், நமது வீர சேகரனார் ஒத்துக் கொள்ள வில்லை. மகான் ஸ்ரீ பொன் னம்பல சுவாமிகள் இன் னுரை கூற ஆரம்பித்து, "முன்னோர்கள் அந்த ஸ்தாநத்தை யே ற் று நடத்தி வந்ததனு லல்லவோ, நம் போன் றவர்க ளெல்லோரும் கடைத் தேற ஏதுவா யிருந்தது; ஆதலால், அதை யேற்றுக் கொண்டால், பலர்க் குபகாரமா யிருக்கும்'' என்று சொன்னார்கள். அதை நம் வீர சேகரனார் அங்கீகரித்தனர். மகான் பொன் னம்பல சுவாமிகள், அன்னாரைக் கூட்டிக்கொண்டு அடியார் கணங்களுடன் சிதம்பரத்தினின் றும், புறப்பட்டுக் கோயி லூர் வந்து

சேர்ந்து, மூல லிங்க மாகிய ஸ்ரீ முத்து ராம லிங்க மூர்த்திகள் முதலிய மூர்த்திகளுக் கெல்லாம் அபிஷேக ஆராதனைகள் செய்து, சாதுக்களுக்கும், கிருகஸ்தர்களுக்கும் போஜநாதிகள் செய்வித்து, சுபாநுஸு மார்கழிமீ சுபமுகூர்த்த காலத்தில், கோயி லூர் ஞாந பீடத்தில் வீற்றிருந்தருளச் செய்து, பூஜித்துப் போற்றி வாழ்த்தி வேதாந்தோபதேசம் செய்யும் வண்ணம் நியமித்தார்கள்.

அதன் பின்னர், நம் வீர சேகர ஞாந தேசிக ரவர்கள் செய்த, செயற்கருஞ் செயல்கள் பல. மடாலயத்தை விருத்தி பண்ண எவ் வளவோ கிராமம் பூ மி க ள் வாங்கினார்கள். மடத்தில் புதுப் புது நியமங்கள் ஏற்படுத்தினார்கள். தம்மைச் சரணாகதி யடைந்த எவ்வளவோ மாணவர்களைக் கிருத கிருத்தியர்க ளாக்கிவிட்டார்கள்.

ஸ்ரீ நெல்லை யம்பாள் சமே ஸ்ரீ கொற்றவா ளீசுவரர் ஆலயத்தை (தமிழ் நாட்டு மூ வேந்தர்) கட்டியது போல், கட்டி முடிக்க வெண்ணி, இருபத் தைந்து லட்சம் வெண் பொற் காசுகள் செல வழித்துக் கட்டி முடித்து, ஐந்து லட்சம் வெண் பொற் காசுகள் செல வழித்துக் கும்பாபிஷேகம் நடத்தினார்கள்.

அக் காலத்தில், சிருங்க கிரி ஸ்ரீ சா ர தா பீடத்தை யலங்கரித்துக் கொண்டிருந்த, ஜகத் குரு ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபி நவ நரசிம்ம பாரதி யதீந்திர சுவாமிகள் அவர்களை அழைத்து வரச் செய்து, ஒரு மாத காலம் வரையில் கோயிலூரில் வீற்றிருந் தருளப்பண்ணிப், பூஜித்துச் சமஸ்தோபசாரங்களும் செய்து, அன்னார் திரு வாய் மலர்ந் தருளிய ஆசீர்வாத பஞ்ச ரத்ந சுலோகங்களை யேற்று, ஸ்ரீ சாரதாம்பாள் திருக் கோயில் கல்லாற் கட்ட ஐ ம் ப தி னாயிரம் வெண் பொற் காசுகளைக் குரு தட்சிணை யாக வைத்துக் கொடுத்து, மகிழ்ச்சி யுண்டாக்கினார்கள்.

சோழ நாட்டில், திருத் துறைப் பூண்டிக்கு மேற்கே, திரு ஞாந சம்பந்த மூர்த்தி சுவாமிகள் பதிகம் பெற்ற, திருக் களர் என்னுந் தலத்தி லுள்ள, ஸ்ரீ அமிர்த வல்லி யம்பாள் சமேத ஸ்ரீ பாரி ஜாத வநேசுவரர் ஆலயத்தை நான்கு லட்சம் வெண் பொற் காசுகள் செல வழித்துக் கட்டி முடித்துக் கும்பாபிஷேகஞ் செய்தார்கள். இன்னும் எவ்வளவோ அற்புதங்கள் இயற்றினார்கள்.

அவைகளை யெல்லாம், இந்தச் சிறு கட்டுரையில் விளக்க முடியாததலால், அறிய விரும்புவோர் ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசாரிய சுவாமிகள் அவர்களால் வெளியிடப் பெற்ற, "ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் புராணம்" என்னும் நூலிற் கண் டறிக

எவ் வளவோ, அற்புத மான செயற் கருஞ் செயல்கள் பல செய்து, தமது அறு பத்து மூன் றுவது வயதில், கலியப்தம் 5013க்குச் சரி யான விரோதிகிருது ஞு வைகாசிமீ 27உ வெள்ளிக் கிழமை விசாக நட்சத்திரத்தில் (அதாவது திருக் களர் ஸ்ரீ பாரி ஜாத வநேசுவரருக்குத் தாம் நடத்திய திரு விழாவில்,) தே ரோட்டத் தன்று, தாம் தேரின் மீது வலப் பக்கத்தில் நின்று வரும் போது, தெற்கு வீதியில் வந்த சமயம், சகல வாத்தியங்களு முழங்கிக் கொண்டிருக்கப், பார்த்தோர் பரவசப்படு முறையில் இரு கரங்களையும் உச்சிமேற் கூப்பிக்கொண்டு, "மஹாதேவ! மஹாதேவ!!" என உச்சரித்துக் கொண்டே, மஹாநந்த பிரம்ம சுபாவ மாயினர். ஆச்சரியம்! ஆச்சரியம்!! இஃதன்றோ பூர்வ புண்ணிய சுகிருதம்.

நம் வீர சேகரப் பெருந் தகையார் சீடர்கள்;-வேங்கட முனிவர், வெள்ளி யங்கிரி சுவாமிகள், அண்ணாமலை ஞாந தேசிக சுவாமிகள், நியாயச் சந்திர வேதாந்த பாஸ்கர, சுப்பைய ஞாந தேசிக சுவாமிகள், மெய்யப்ப ஞாந தேசிக

சுவாமிகள், கேரளம், நாராயண சுவாமிகள், காசிகாநந்த ஞாநாசாரிய சுவாமிகள், மகா தேவ ஞாந தேசிக சுவாமிகள், வேத.மொழி பெயர்ப் பாசிரியர் சிவாநந்த சுவாமிகள், முதலிய பல துற வற வடியார்களும், காரைக் குடி வெங்கடாசல ஐயா முதலிய பல இல் லற வடியார்களும் ஆவர்கள்.

இவர்களுள், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசாரிய சுவாமிகள் அவர்கள், தீர்க்காயுசுடன் இப் பொழுதும் இருந்து வருகிருர்கள். தம் குரு மூர்த்தியின் பெருமையைத் தேசங் குலவ வளர்த்து வருகிருர்கள்.

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் அவர்கள், பரிபூரண மாகி இற்றைக்கு ஐம் பது வருடங்க ளாகி விட்டன. அப் பெருந் தகையாரின் ஐம் பதாம் ஆண்டுக் குரு பூஜை விழா நா ளாகிய (பிலவஞு வைகாசிமீ 16உ (29—5—61) திங்கட் கிழமை யாகிய) இன்றைய திநமே பொன் விழா வும் நடை பெறுகிறது. இப் பொன் விழா வானது, ஸ்ரீகாசிகாநந்த ஞாநாசாரிய சுவாமிகள் அவர்களது முயற்சி யாலும், இத் திருக் களர் மடத்தை சுமார் நாற்பது வருடங்க ளாகக் கவனித்து நடத்தி விருத்தி பண்ணிவரும் ஸ்ரீ மகா—கிருஷ்ணாநந்த சுவாமிகள் அவர்களது முயற்சி யாலும், மிக்க விமரிசையுடன் நடைபெறுகிறது. நம் ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் பெருமை நீடுழி வாழ்க!

---

உ
சிவமயம்

சிதம்பரம், நீலகண்ட சுவாமிகள் மாணுக்கர்,
திரு ரீ-சண்முகாநந்தன், எழுதியது,
ஆசிரியன், தத்துவ சன் மார்க்க சங்கம், ஆத்தூர்.

## :: வீரேசன் சோடச மாலை. ::

காப்பு.

தேனுருஞ் சோலைத் திருக்களரில் வீரேசன்
கானுரும் ஞானவொளிக் கான்மலரில்—வானுருஞ்
சந்தத் தமிழ்மாலை சாத்தக் கணபதியின்
அந்தக் கழலே யரண்.

பன்னிரு சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்.

திருவார் மார்பச் சீதரனுந் திசைமா முகனும் பன்னெடுநாட்-சிந்தித் தறியாத் திகழ்ஞானச் செந்தா மரைநேர் திருவடியுங், குருவார் மதிநல் லாவிதழி குலவுஞ் சடையுங் கொந்தளகக்-கொடுவிற் புருவ மதிநுதலாள் குடிகொ ளிடமுங் கொண்டபிரான், உருவார் திருவா லயமதனி லொருவா திலகுந் திருக்களரி-லொளியு மிருப்பு மின்புமென வுலையா வுருவ முற்றருள்வோய்!, கருவாய் பிறவிக் கடலேறுங் கழலாம் புணையீந் தருளுமொரு-கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 1

ஒன்றே யிரண்டு பொருளில்லை யுலகு முயிரு மொரு பொருளென் - றுரைக்கும் வேதப் பொருளையெலா முளங்கை யதனிற் கனியே போல், நன்றே நவின்ற நாயகனே! ஞானக் கொழுந்தே! நவநிதியே!- நாநா வாத சிவநிலை நவிலு மேக வாதமதிற், சென்றே யடங்கு மெய்யுணர்த்தித்

திகழும் பிரம நீயெனயே தெருளா ருபேத சந்தனையே செய் தோய்! செல்வச் சிவஞாநக், கன்றே! முழுதுங் கற்றவர் வாழ் கவிஞர் ஞாநத் திருக்களரில்-கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 2

மரத்தை மறைத்த மாமதமா மரத்தில் மறைந்த மாண் பது போல்-வரமாம் பிரமப் பொருளதனில் வைய மறைந்த மறையதனைத், திரத்திற் றெரித்த தேசிகனே! சிதையா ஞாநச் சிற்பரனே!- சிறப்புற் றெருளிருந் திருக்களரில் றிகழ்வே தியனே! தீயசுரர், புரத்திற் செறித்த புண்ணியனே! புலவோர்க் கருளும் புரந்தரனே!- பொறியும் புலனுங் கழன்றவொரு பொருளாய் நிற்குந் தவநிலையைக், கரத்திற் குறித்த கற்பகமே! கலையா யிரத்துக் கதிரவனே!-கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 3

பதியும் பசுவும் பாசமெனப் பகரும் பழைய முப் பொருளும் - பரமே யன்றிப் பிறபொருளாய்ப் பகரா ஞாநப் பழமறையும், தநியு மிழுதுந் தண்ணீருந் தனிப்பா லன்றி யிலையதனுற் - றமையே யன்றி யவையில்லை தாமே யவையா மெனும்பொருளை, மதியின் மதித்த மறை யுடையார் வதியுந் தெய்வத் திருக்களரில்-வரமே தருவா னுற்றருள்வோய்! வளியாய்ப் புனலாய் வான்கனலாய்க், கதிராய் மதியாய் மண்ணுயிராய்க் கவினும் வடிவ மெட் டுடையாய்!-கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 4

சோலைச் சிறுவர் மறைபாடச் சுகங்ன் றெலிக்கத் தோகைமயில் - சூழ்ந்தே நடிக்கத் தொங்குபலா, சொரி தேன் பரிசாற் சொல்விளையும், பாலைப் பழிக்கு மொயுழிமை யாள் பாலைப் பருகும் பண்மறையோன்-பாடற் பெறுநற் றிருக்களரைப் பாடும் பணியின் பண்பறியேன், மேலைத் தவத்து விண்ணவரும் விழையும் வரமே பெற்றிடுவான்-

மேவிப் புரியும் வந்தனையால் விரைவி லருள்செய் வேதியனே!, காலைக் கதிருங் கவினழலுங் கலையார் மதிமுக் கண்ணுடையோய்!-கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 5

பேதை பெதும்பை யெனும்பருவப் பெண்மை நலத்தார் சிற்றின்பம்-பெறுமா றுண்டோ பேருலகிற் பேரா ராகத் துவேடமுளேன், வாதையுறுவ னேயல்லால் மன்பே ரின்பம் மன்னுவனே-மன்னு வுலகில் மண்பொருளை மன்னு மெனவே மதித்திடுவேன், மேதையுடையோர்க் கொருசிறிதும் வேண்டு முதவி செய்தறியேன் - வியனூர் சோலைத் திருக்களராய்! வினையேனின்னைப் பெறுவேனே, காதைப் பொருவுங் கண்ணுமையாள் கலவா மேனிப் பிஞ்ஞகனே! - கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே 6

பந்தத் துருவம் வாச்சியமாய்ப் பதியாய்ப் பசுவாய்ப் பாசமெனப்-பகரு மூன்றாய் நிற்குமொரு பரத்தி னுருவம் லெட்சியமாஞ், சிந்தித் திந்த லெட்சியமே திகழு மெந்த முருவமெனச்-சிவமாய் நிற்குந் திருவுடையார் சிறப்புற் றொளிருந் திருக்களரில், வந்தித் திருந்தார் தமக்குநிதம் வழுவில் துறவின் வகையுடனே — வளமார் ஞானந் தனையருளி வதியும் பரம குருபரனே, கந்தக் கமலத் திருவடியைக் கஞ்சன் வணங்குங் கவினுடையாய்! கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 7

தருவுக் கரசாய்த் தண்மகுடந் தரித்தே தருக்குந் தகையதனிற்-றவமே யுருவாய்ச் சற்குருவாய்த் தளரா ஞானப் பெருந்துறவுத், திருவுக் கிறையாய்த் திகழு முனைத் தியானித் திருக்குந் திருவடியார்-செழுமா மறைநேர் திருவடியைச் சிந்தித் திருந்தே திருக்களரில், தெருவுக் கொருநாள் பலியுணவைத் திரிந்தே யருந்தல் சிறப்பலவோ,

தெளிவார் தமிழின் றிருவருவே! சிந்தா மணியே! சென்றனையின், கருவுக் கினியான் கலவாமல் கழலே தருவாய் கவின்ஞாநக்-கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 8

வருத்தும் பிணிகள் பலவுளதாய் வாணாள் மிகவுஞ் சிலவுளதாய்-மலமே யொழுகுஞ் சிறுகுடிலாய் மாணைப் புரைக ளொன்பதுவாய்ப், பெருத்துஞ் சிறுத்து மிலங்கு வதாய்ப் பெருஞ்சோ றடைக்கும் பிண்டமதாய்ப்-பேரா விடும்பைக் கிடமதுவாய்ப் பிணமா யொருகால் விழு முடலை, அருத்தி யொடுநல் லாடையணி யழகால் விளக்கி யறிவிலியா-யழுங்கும் புலையேன் நின்னருளா லழியா வின்ப மடைகுவனோ, கருத்தி னினையே காணுமவர் காண்பா ரின்பந் திருக்களர்வாழ்-கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 9

வானிற் றிரியுங் கோளரவின் வாயிற் படியும் வான் மதிபோல்-வலியா ராசைக் கட்செவியின் வாயில் விழுந்தே வகையறிய, தூனிற் பொலியு முடலதனை யுளநா ளறியாப் பொருளதனை-யுறையுண் முதலாம் புலியதனை யுளவாம் பொருளென் றுன்னியுனித், தேனிற் கமழுஞ் செங்கமலத் திருவார் நின்றன் றிருவடியைச்-சேருந் திறமே சூழாது தீர்ந்தே னுட்க ளவமாகக், கானிற் பொலியுங் கவின்மலரார்ந் கனவார் சோலைத் திருக்களர் வாழ்-கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 10

அண்டர் வழுத்துந் திண்ணருநல் லழகார் திங்க ளூர்வதியு மடிகள் செங்காட் டங்குடியி னன்ப ரளித்த வன்பறியேன், வண்ட ரொலிக்கும் வாகையணி வாளார் விஜயன் றவமறியேன்-வளமார் ஞானச் சநகனெனு மகிபன் வளர்த்த மதியறியேன், தொண்டர் துதிக்குந்

துறவதனிற் றுணையில் சுகனைச் சூழ்ந்தறியேன்-துகளார் குற்ற மூன்றுடையேன் சுதையாம் நின்னைப் பெறுவேனோ, கண்டங் கறுத்த மாதவனே! கண் மூன் றுடையாய்! திருக்களர்வாழ்-கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 11

ஒன்றே குலமு முயர்தேவ னொருவ னெனவு முரைத் தருளு - மொருவா ஞானத் திருமூல னுரையைச் சிறிது மோர்ந்தறியேன், குன்றே புரைநின் கோயிலுளங் குறியா வலமாய்ச் சூழ்ந்தறியேன்- குலவு மறையின் பொருளைநிதங் குறிக்கொண் டொழுகுங் குணமுமிலேன், சென்றே கங்கை மூழ்கிடுவான் தெற்கே விரையு மதியுடையேன்-திகழு நின் றன் றிருவடியின் றிருவா ரின்பம் பெறுவேனோ, கன்று மனத்தேன் கலைகணிலேன் கானப்பொழிலார் திருக்களர் வாழ் - கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களத்திருளே. 12

ஆக்கல் முதலா மைந்தொழிலு மாக்கும் பொருளே! அருள்வடிவே! யமலத் தவத்தோ ரடிவணங்க வமருங் குருவே! யந்தணனே, தாக்கு மலமூன் றறநீக்கித் தணவா விருவல் வினைபோக்கித்-தமியேன் பிறவித் துயர்நீக்கத் தண்ணங் கருணை செய்தருளித், தேக்கும் பரமானந்தபசுந் தேனூற் றினமுந் தினைத்தருளுந் - தெருளார் பிரமத் துரு வுடையாய்! சிறியே னுணராப் பிழையதனைக், காக்குங் கருணைக் கடலமுதே! கனியார் சோலைத் திருக்களரில்- கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 13

பிஞ்சு மதியம் பிறங்குமுடிப் பெருமான் மகிழப் பெருமறையைப்-பேசுங் குமரன் வீற்றிருக்கும் பீடார் ஞானத் திருக்களரில், நஞ்சு மிகுந்த வின்பமெனும் நலமில் செகத்தின் வாழ்வதனை-நணுகா ஞானப் பெருந்தகையோர் நாளும் போற்றும் நற்றவத்தோய்!, விஞ்சு குருச்செம்

மணியனைய மேனியதனின் மிளர்நீற்றை - மிலைச்சிச் சிவன்
றன் கண்மணியை விளங்க வணிந்த வேதியனே!, கஞ்ச
நிகர்த்த திருவடியாய் கவிஞர் ஞானத்திருவுருவே!-
கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்தருளே. 14

அரும்பு நகைச்சிற் றிடைமயிலார் அழியாத் தெய்வ
நற்றமிழால் - அணியார் நின்றன் புகழதனை யாடிப் பாடுந்
திருக்களரில், இரும்பு மநத்தேற் கருள்புரிவா னிருந்தா
யந்தோ விதுகண்டே - யிறையின் கருணை யாண்டுமுள
தென்றே யறிந்தே னிழிதகையேன், விரும்பு மலராற்
றொடைகண்டே வினையே னின்றன் மலரடியை-விதியாற்
பூசித் தருள்பெறுவான் விழைந்தே னதனை விதித்திடுவாய்,
கரும்பு வடித்த தீஞ்சுவையே! கருணா கரனே! யுலகுயிரின்-
கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்
தருளே. 15

விண்ணும் புவியும் பிறவுலகும் விரகாற்றேடி யாய்
வுறினும் - விளங்கா வுயர்ச்சி பெற்றொளிரும் வியனார் செல்
வத் திருக்களரில், நண்ணுந் திருவா யறவடிவாய் நாடற்
கரிதா யுயிர்க்குயிராய்-ஞானக் கொழுந்தாய் வியாபகமாய்
நல்லோர் வழுத்து நாயகனாய், எண்ணுஞ் சரமா யசரமதாய்
எழிலார் பிரமப் பொருளதுவாய் - இறையா யிலகு மெங்
குருவே யெளியே னறியே னின்பெருமை, கண்ணுங் கலை
யில் வல்லவருங் கணியாப் பொருளே! காரணனே!,
கண்ணே! வீர சேகரனே! கதியே யடியேற் களித்
தருளே. 16

சோடச மாலை முற்றுப் பெற்றது.

உ
சிவமயம்

ஸ்ரீ காளையார் கோவில், வேதாந்த மடத்தின்,
குரு முதல்வர் ஸ்ரீ செல்லப்ப ஞாந தேசிக சுவாமியவர்கள்
சீடர், இளையான் குடி, வேதாந்த மடம்,
*ஸ்ரீ சிவாநந்த ஞாந தேசிக சுவாமியவர்கள்*
எழுதியது.

ஸ்ரீ கோவிலூர் வேதாந்த மடத்தின் 5ஆவது
குரு மகா சந்நிதாந மாக வீற்றிருந்த ஸ்ரீ திருக் களர்
ஆண்டவர் என்னும் ஸ்ரீ வீரசேகர ஞாந தேசிக சுவாமி,
அவர்களது,

**பிரபாவ சங்கிரகம்.**

---

பூமலி யுலகில் ஏமமார்ந் திலங்கும் சேமமார் புலவீர், "எந்நா ளிருப்பினு மிறப்பது நிச்சயம்-பொன்னுட்டி லிந்திர னுயினும் பொன்றுவன் நன்னுட் கழியுமுன், ஞாநத்தினுலே, தன்னுல் அறிவது சற்குரு பாதமே". தேமகன் மலர்வாழ் நாமகள் மகிழும், பூமகன் கண்ட பலபல அண்டம், சில சில கண்டம்.

அவற்றுள், நார சாகரத் துகில்புனை நானில மகட்கோர், ஆரமாமெனத் திகழ்வது அணிதிகழ் பாரத கண்டம். அதில், பசுபதிப் பெயரிய ஒரு தனிப் பரமன், ஆடல் பலபுரி பாடல் பலபுனை, கூடல் முதலிய பதிகள் பலதிகழ், பாண்டி நன்னுடு வித்தக ரத்தின விய ஹெளி எனவாம். பயன்னனி யுளவாம்.

அத்தகை மாண்பும் அறநிறை சால்பும், மெத்திய பதி களில் வியன்பதி எனமிளிர், சாக்கை புது வயல் தனிச்சிறப் பினவே. யுனிப் பிறப்பதுவே.

அதில், கலி 4949 கீலக ஆண்டு ஆவணித் திங்கள் 12ம் நாள் சுக்கிர வாரம் நல் லோரை நற் கோள்கள் அமைந்த சுப வேளையில், அருணசல வணிகர்க்கு, அவர் மனை யவளாம் உமையவ ளகட்டில், பல தவப் பயனுய் தீரமார் புயமும், வீரமார் உடலும் சீரம் வார் முகமும், ஈரமா ரகமும் ஞான காரகமும், ஏற்கவே யமைந்த யோக்கிய சிலாக்கிய பாக்கிய குமாரர் வீர சேகர ரென வியனல முடையார், பயனுற வுரைப்ப மயலெலா மிரிய, ஜெயமெலாம் விரிய, ஆன்றமை யுலகிற் தோன்றி னர் தானே. வான்றவர் கோனே.

அத்தவர்' உதித்தநாள் முதலா ஒளி விழி வதனம், உற்றவர் பெற்றவர், மற்றவர், செற்றவர், கொற்றவர் யாருமே உறவுற நோக்கித், திருவறம் நீதி ஜெயம் புகழ் எல்லாம், மருவுறப் பெற்ருர். கருவறப் பெற்ருர்.

கருதிய தளிக்கும் கழல்பெறு மதலேயும், பாலக அவத்தையில் வித்தையும், விநயமும், தத்துவ நிலேயும், மெத்தவு மறிந்து சொற்பொழி வாற்றும் வித்தக ராயினர், ஈன்ருேர்க்குப் புத்தமுதாயினர்.

கலேபல நிறைய உலகியல் மறையக், கதிபெறு மதியது உதிதம தாக, நிற்பதொன் றில்லா அற்பம தெனவறிந், தனேத்தையுந் துறந்து மனத்திறம் பெற்று, பண்ணவர் முநிவர், மண்ணவர், பலரும் எண்ணிய ஞானம் கண்ணிய மாகத், திண்ணிதி லடைய நண்ணியே யுறைவதும்:, மீட்சி போக்கில்லா மாட்சிமை யான, மோக்ஷம தடையக் காட்சியில் ஞானம்; ஈக்ஷித்தருளும் ஆட்சியோர் அமர்

வதும், காவியங் கண்ணி மேவிய பாகன், தாவிலாப் பதத்தை ஆவிகட் களிக்க, மேவியே பதம்பெற வேண்டி நிதம் பணி வோர்க்கு, இதம்பெற வோதும் சிதம்பர ஞான தேசிக மகேசர், யுறைவது, மான கோவி லூர் சென்று, குரு முறை யேற்ற அருள் மிகு புநிதர். தருமுப தேசப் பொரு வறு முநிவர், கருணையின் நிதியெனும் தருநிகர் குருவைச், சரணடைந் தாங்கே, ஆவியோ டாக்கை, அரும் பொரு ளீந்து, ஆதந சாதந வேதநம் வேண்டி, போத நாடாளும் மாதன மான, ஆண்மைக் குரிய ஆடையாப ரணம்; அணிவுறப் பெற்று, பரிபூரண பரமாநந்த பரமசீதள பிரத்திய கபிந்ந பிரஹ்ம சாக்ஷாத்கார முத்தி ரூப, சுய சாம் ராஜ்யத்தைத் துவக்கறக் கொண்டார். பவக்கடல் விண்டார்.

அந்நிலை யடைந்து தன்னிலை யுயர்ந்து, வித்தக வித ரண புத்துணர் வுற்ற, புவி ராஜர், கவி ராஜர், தவ ராஜர், போற்றச், சிவ ராஜ ராஜ னெனத் திகழ்ந்தன ருலகில், மகிழ்ந் தனர் மனதில்,

அருக்கன் மதி யனல் திருக்கண் பசுபதி, இருக்கும் பதியெனும் திருக்கள ரதனில், கருக்கிளர் துயரைச் சுருக்கினி லகற்றும், எருக்கணி பாரி சாத வீசர்க்கு, ஆலய கோபுர மண்டப விமாநம், எண்டரு திருமதில் அண்டரும் வியப்பக், கண்டு முடித்தார். தொண்டு பிடித்தார்.

பொய்தவ மொழித்துக், கைதவ மழித்துச், செய்தவ முயர்த்தும், மெய்தவர்க் காங்கே, மறைமுடி பயிலத் திரு மட மொன்று, வியனுற வமைத்தார். நயமுற வைத்தார்.

ஓங்கிய வுலகில் தீங்கிய லகல, ஆங்கரிய மற்றுச் சாங் கிரியஞ் செற்று, ஓங்குணர் வுற்ற வேங்கட முநிவரும்,

வெள்ளிய வுலகியல் எள்ளிய விதியும், உள்ளிய தொன்

றைத் தெள்ளிய நுதியும், கள்ளியல் மாயையைத் தள்ளிய மதியும், வாய்ந்த வெள்ளியங் கிரியெனும் வியன்முனி வரரும்,

கண்ணு யிரவனும் தண்ணார் மலரனும், கண்ணும் மலரனும் பெண்ணார் மருங்கனும், உண்ணு மொரு பொருள் எண்ணு மகிழுநல், லண்ணு மலையெனும் திண்ணு ருரமுறும், பண்ணார் முனிவரும்,

குப்பாச வாழ்வினைத் தப்பா தகற்றிய, மெய்ப்பா லவர்க்குணர் எப்பாலும் ஓதியும், முப்பாழ் ஒழித்தவர் தப்பா துணர்வுற, அப்பாலும் பாழெனச் செப்பா லுணர்த் தியும், முப்போது முறுதலால் எப்பாரினு மிவர்க், கொப் பாரு மிலையெனச் செப்பாரு மிலையெனும், மெய்ப்போத போதக சுப்பைய தேசிக, நற்பார முனிவரும்,

வையக மதனில் தெய்வநல் லருளால், தையலர் மய லைப் பையவே நீத்து, உய்யுநன் னெறியைக் கையுறக் கொண்டு, ஒருவரு மறியாத் திருவுரு வதனைத், தருபவ னெவனோ குருபர னவனென நீடிய காலம் தேடியே திரிந்து, ஓடிவந் தடைந்து நாடிய பொருளைக், கூடியின் புற்று ஐயம தகன்ற, சைவநல் லொழுக்கம் மெய்யுறக் கொண்ட, மெய்யப்ப முனிவரும்,

தாரணி தன்னில் தோன்றிடு பொருள்கள், ஓரரணின் றிச் சீரண மாகும், காரணம் யாதெனத் தேரித் தெளிந்து, சிவ குரு அருளால் பூரண புராண, புரிதநற் பொருளைத், தாரணை தியாநம் சமாதியுற் றடைந்த, நாரா யணரெனும் நற் பெறு முனிவரும்,

காசினி தன்னில் பேசுறு பொருள்கள், கூசவும் ஏச வும் பேசவும் உற்றுப், பாசமும் மோசமும் நாசமு மாகும், ஆச தகன்ற தேசுறு பொருளே, சுத்தமும் புத்த

மும் சித்தமும் முத்தமு, முற்று நத்தவும், பத்தவும், மெத்த வும், உத்தம மாகும். எனவுணர்ந் தகன்ற, மாநிலே பெற்று, தர்க்க விலக்கண மிக்க விலக்கியம், காவிய மாதிய மாவியல் புணர்ந்து, பேசுறு தத்துவம் மாசறத் தெளிந்த, காசிகாநந்த ஞாந வாசிரியரும்,

கவாநத்தம் தாயெனக் கண்டவ ளிவளோ வெனவுல கர் கழறும் வண்ணம் கவினே றுற்ற கருங்கண் மாதர், அவா நந்தம் புகார் என்றும், அவரா லீன்ற மகார் அநந்தம் தகார் என்றும், பொன்பூ சுற்றம் மிக்க விகாரம் என்றும், கான்ற சோற்றதனில் கண்டுள முவர்த்துப் பவாநந்தம் பாறத், தவாநந்த மீறச், சிவாநந்த மேற வந்த சிவாநந்த முநிவரும்,

அகாத பொய்யர்கள் தகாத செய்வர்கள், உகாத கோனர்கள் நகாத தோழர்கள், விகாத ஆளர்கள் கூடிய வுலகில், நாடிய பொருளைத் தேடியும் அடைவது, நீடிய தாமென வொத்துணர் சித்தம், பெத்தம தற்றுச் சுத்தம துற்று, முத்தமு முற்றுப் பகாத சித்தமார், மகா தேவ தேசிக பரரும்,

இன்னோ ரன்ன பன்னரு மனநிலே. மன்னிய கலே நிறை முன்னிய தவமுடை, நன்னய சீலர்கள் அன்னம் ஆமென, அங்குண நிலேயுணர் உன்னத சீடர்கள், தன் னின் அடிமுடி தாங்கி அகலா துறையும், ஆன்ற பெற்றிய ராம் அரும் பெரும் திறலுடை, வீர சேகர ரெனும் தாரக முநிவர், வீற்றினி திருந்தார், தோற்றிய ஞாயிறு துலங்குவ தென்ன.

அத்திருக் களருறை ஆரவே ணியர்க்குத், தேர்த்திரு வாகநம் சிறப்புறச் செய்தும், உற்சவ மாதிய வுவப்புறக் கண்டும், நிவப்புற விருந்தார் தவப்பொழு தாக.

மற்ெெருரு காலம், திங்கள் கங்கை தங்கிய சடையனை, அங்கி தங்கிய செங்கை யுடையனை, மங்கை பங்குடை சங்கர தேவனை, வாகந மீமிசை ஊர் வலமாம் பொழு, தேறவே நோக்கி "அரகர சம்பு சங்கர மகேச, புரகர நீல கண்ட" வென் றுரைத்து, "அம்பிகை பாக மாதேவ" வென் றரற்றி-வாய்தடு மாற, மயிர்புள கேற, இருகணீர் சோர, அருவமும், உருவமும், ஆதியும், இல்லாச் சொரு பமே தானும் ஜோதி யாயினரே, சமாதி யாயினரே.

ஒருபதி னைந்தில் குருபத முற்றூர், அறுபதின் மூன் றில் சொருபம தான, ஒருபதம் பெற்றூர் குருபர நாதர், "வீர சேகரனர் தீரமார் தானைச் சேரவே வாரீர் பாருளீர் யாரும்".

ஓம் குருப் பிரஹ்மார்ப்பண மஸ்து:

---

உ

*சிவமயம்.*

கோவி லூர் மடம் மகாதேவ ஞாந தேசிகர் மாணுக்கர், காஞ்சீ புரம்,

*ஸ்ரீ கோபாலாநந்த சுவாமிகள் எழுதியது.*

திருக் களர் ஆண்டவர் என வழங்கும்,

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள்,

:: *சரித்திரப் பாராட்டுரை.* ::

எப்போ தகத்தும் நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்.

---

சீரும் சிறப்பும் வாய்ந்த தெய்வச் செந் தமிழ்ப் பாண்டி நா டானது சந்தந வரை எனப்படும் பொதிய மலையையும், அதன் அருவி நீர் பெருகி வருகின்ற

பொருநை என்னும் தாம்பிர பரணி நதியையும், வைகை மாநதியையும், வைகை நதிக் கரையில் தலைநகராக மதுரை யம்பதியையும், மற்றும், தேவாரப் பதிகம் பெற்ற சிவ தலங்களையும் கொண்டு விளங்குவதாகும். இப் பாண்டி நாட்டிலே வடக்கே புதுக் கோட்டை வெள் ளாற்றுக்கும், தெற்கே வைகை யாற்றுக்கும் இடையே தன வைசிய நகரத்தார் திரு நகரங்கள் 96 உள்ளன. இவற்றில், வாழும் தன வைசிய குலச் செட்டியார்கள், பிள்ளையார் பட்டி, வைரவன் கோவில், இலுப்பைக் குடி, இளையாத்தங் குடி, நேமம், மாத்தூர், இரணிக் கோவில், சூரைக் குடி, வேலங் குடி என்னும் ஒன்பது கோவில் களையும் சார்ந்த தன வணிர் குல மக்களாக வாழ்ந்து வருகின்றார்கள். இவர்கள், சேர, சோழ, பாண்டிய மன்னர்களைப் போலப், பெரிய பெரிய சிவாலயத் திருப் பணிகளையும் செய்து, வேதாகம பாட சாலைகளையும், தேவாரத் திரு வாசக பாடசாலைகளையும், ஏற்படுத்தி, நந்தன வனம் பசு மடம், குரு பூஜை மடம் முதலிய சிவப் பணிகளைச் சிரத்தையுடன் செய்து வருகின்றார்கள். இத் தகைய சிவ புண்ணியச் செல்வர்கள் மரபில் வந்தவரே திருக் களா ராண்டவர் என்னும் வீர சேகர ஞான தேசிக சுவாமிக ளாவார்கள்.

சோழ நாட்டிலே யுள்ள சிக்கல் பொருள் வைத்த சேரியில், உப சுப்பிரமணிய ராகிய வீர வாகு தேவர் மரபுச் செங் குந்தர் குலத்திலே தமிழ் நாடு செய்த தவப் பயனாகத் தோன்றித் தன்னை யடுத்த நன் மாணுக்கர் பலருக்கும் அதி தீவிர பக்குவம் நோக்கி, ஞான வாசிட்டம் முதலிய அரிய ஞான சாத்திரங்களைப் போதித்தும், ஞானோபதேசம் புரிந்தும் ஒரு ஞான குரவர் எழுந்தருளி யிருந்தார். அவரே உகந்த லிங்க ஞான தேசிக சுவாமிக ளாவார்கள். இவருடைய அருள் ஞான வள்ளற் றன்மையைக் கேட் டறிந்து, வந்து மாணவ ராக இருந்து ஞான சாத்திர பாடங்களை முறை யாக கேட்டும், ஞானோபதேசம் பெற்றும், கோவிலூர்

மடாலயத்தில் முத லாவது ஞானாசிரிய ராக இருந்து அருளாக்ஷி புரிந்தவரே, கோவிலூர் ஆண்டவர் என்று வழங்கப்படும் முத்து ராமலிங்க ஞான தேசிக சுவாமிகளாவார்கள். இத்தகைய ஞானாசாரியர்பால் அருளுபதேசம் பெற்ற மாணுக்கர்கள், பலர் இருந்தார்கள், அவர்களில், அதி தீவிரத் துறவு பூண்ட துற வாண்டவர் என்னும் அருணுசல ஞான தேசிக சுவாமிகள். இரண்டாவது பட்டத்தி லிருந்து கொண்டு ஞானோபதேசம் செய்து, சிலகாலம் இருந்தார்கள், பின்னர், இவரது உடன் தோன்றலும், ஸ்ரீ ஆண்டவரிடம் ஞான சாத்திரங்களைப் பாடம் கேட்டும், ஞானோபதேசம் பெற்றும் தங்கிய கருணு நிதி என்றும் சிதம்பர ஞான தேசிக சுவாமிகள் மூன் ருவது பட்டத்தில் ஞான குரவ ராய் அமர்ந்து, ஞானோபதேசம் செய்து வந்தார்கள். இவரை ஞாநாசாரிய ராக அடைந்து, இவர்பால் வேதாந்த சாஸ்திர பாடங்களைச் சந்தேக மறக் கற்று ஞானோபதேசம் பெற்று, கடுமையான தவத்தோடும், ஞான வைராக்கியங்களில் வீர தீர ராகவும் விளங்கி இருந்தவரே, ஈண்டு விதந்து கூறப்படும் பரமாசிரியர், வீர சேகர ஞான தேசிக சுவாமிக ளாகும்.

பாண்டி நாட்டு பழம் பதி யாகிய திருப் பெருந் துறை என்னும், ஆவுடையார் கோவிலுக்கும், காரைக் குடிக்கும், இடையி லுள்ள புது வயல் என்னும் திரு நகரில், இலுப்பைக் குடிக் கோயில், தந வைசிய நகரத்தார் குடும்பத்தில், அருணுசலஞ் செட்டியார், உமையாளாச்சி என்னும் தந்தை தாயர்களுக்குக் குலஞ் செய் தவச் செல்வ ராய்ச் சிவ புண்ணியத் திருவினராய் சிவஞானப் புதல்வராய், நம்து பரமாசிரியர், வீர சேகர ஞான தேசிக சுவாமிகள், புதல்வ ராகத் தோன்றி யருளினுர்கள்.

இவ் வருள் ஞானக் குழந்தை தோன்றினமை காரண மாகத், தாய் தந்தையர்களும், மற்றும், சுற்றத்

தாரும், வடி வழகை நோக்கிப் பெரு மகிழ்ச்சி யடைந் தனர். புது வயலுக்குக் கிழக்கே யுள்ள சாக்கிக் கோட் டையில், கோயில் கொண் டெழுந் தருளியிருக்கும், வீர சேகரப் பெருமான் திரு வருளால், இம் மகவு நமக்குக் கிடைத்த தென உணர்ந்த. தாய் தந்தையர்கள், பிள்ளைக்குத் திரு நாம மாக "வீரப்பன்" என்று திருப் பெயர் சூட்டி அழைத்துக் கொண்டாடி வாழ்ந்து வந்தனர். இப்படி யாக, வீர சேகர னார், நா ளொரு மேனியும், பொழு தொரு வண்ணமு மாக வளர்ந்து வருவா ராயினர்.

இப்படி யாகப், பெற்றோர்களுக்கும், சுற்றத்தாருக் கும், வீர சேகரனார் மகிழ்ச்சி யூட்டி வருங் காலத்தில், இவரைப் பள்ளிக்கு வைக்க எண்ணிய பெற்றோர்கள் "இளமையிற் கல்" என்ற ஔவையாரின் அரு ளுரையின் படி, பழங் காலத்துப் பெருமை பெற்ற திண்ணைப் பள்ளிக்கூடத்தில், ஆசிரிய ராக இருந்த. சேது உபாத்தி யாயரிடம், தங்கள் மரபுக்குத் தக்க விழாச் சிறப்பினைச் செய்து, கல்வி பயில அமர்த்தினார்கள். வீர சேகரனார் உபாத்தியாய ரிடத்தில், கல்வி பயில வேண்டிய முறையில், சிறிதும் தவறாது அறிவு ஒழுக்கங்களிற் சிறந்தவ ராய்ப் பள்ளிக்குக் காலம் தவறாது சென்று, தெய்வம் போற்றி, உபாத்தியாயரை வழிபட்டுக் கோப மில்லாதவ ராய், அடக்க முடையவ ராய், உபாத்தியாயரின் குறிப்பின்படியும், குண சீல ராயும், நடந்து "உட்காருக" என்ற பின், உட் கார்ந்து, "சொல்" எனச் சொன்ன பின், பாடங்களைத் தவ றாது ஒப்புவித்தும், 'போ' எனக் கூறிய பின், இல்லத்துக் குப் போதலும், ஆன முறையில் தவறாமலும், கல்வி கற்று வருவா ராயினர். தமிழ் நெடுங் கணக்கு (அரிச் சுவடி) எண் சுவடி, வட்டிக் கணக்கு, ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், உலக நீதி, வெற்றி வேற்கை, மூதுரை (வாக் குண்டாம்) நல் வழி. நல் நெறி, நீதி நெறி விளக்கம், மறைசை யந்தாதி, நால்வர் நான் மணி மாலை, சோண

சைல மாலை, திரு வாதவூ ரடிகள் புராணம், திரு விளை யாடற் புராணம், முதலிய இலக்கியங்களையும், இலக்கணங் களையும், ஐயந் திரிபறக் கற்றுணர்ந்தார். இத் தகைய நாட் களில், பே ரின்பம் பெறுதற்குக் காரண மான வேதாந்த ஞாந நூல்களைப் படித்துணர வேண்டு மென்ற நல் லாசை வளர்ந்து கொண்டே வந்தது.

இவ் வாறு, இருக்கையில், அவ் வூரி லுள்ள தந வைசிய குலத்தைச் சார்ந்தவரும், கோவி லூர் மடாலயத்தி லுள்ள ஞாநாசிரியர்பால், வேதாந்த சாத்திரங்களை முறைப்படி, கேட்டுத் தெளிந்து நிட்டையி லிருப்பவரு மாகிய வீரப் பய்யா என்னும், பெரியாரிடத்தில், இவ் வீர சேகரனர் அடிக் கடி சென்று, வேதாந்த விசாரம் செய்து, வந்தனர். இவ் வித மாக, வீர சேகரனுருக்கு, மோக்ஷ வேட்கை அதி கரித்துக்கொண்டே யிருந்தது, பின்னர், அந்தப் புது வயல் நகரத்தி லுள்ள அழகப் பய்யா என்னும், பே ரறிஞர் இவ் வீர சேகரரின் நல் லொழுக்க, நல் லுணர்வு முதலிய, பண்பு களைக் கண்டு, இவர் பிற் காலத்தில், ஓர் துறவி வேந்தரா யிருப்பார் என மனதிற் கொண்டு பட்டிநத் தடிகளின், திருப் பாடலை, இவ் வீர சேகரனுருக்குக் கொடுத்தருளினார். இவ் வீரேசச் சிறுவனார், நுண் ணறிவு படைத்தவ ராதலால், அந்த நூலைப் பிழை யில்லாமற் கற்று, அதன் பொருளையு முணர்ந்து தெளிந்தனர், இதைக் கண்ட அப் பெரியார் அஞ்ஞவதைப்பரணி என்னும், நூலை யீந்தருளினார். அதை யும், தன் மதி நுட்பத்தால், இவர் பிழையறக் கற்றனர். இவ் வாறு, சில ஞாந நூல்களைக்கற்றுக் கொண்டு, அந்த வீரப் பய்யாவுடன் பழகி வந்தனர்.

பின்னர் இவ் வீர சேகரரின் மோக்ஷ இச்சையின் தீவிரத் தன்மையைக் கண்ட வீரப் பய்யா இவரை அழைத்து, "வேதாந்த பரம்பரைக்கோர் நிலைக் களமா யுள்ள கோவி லூர் மடாலயத்திற்குச் செல்க" என கட்டளை யிட்டனர்.

அவரது ஆக்ஞையைச் சிரமேற் கொண்டு, தீவிர பக்குவி யாகிய வீர சேகரனுர் பிறவித் துன்பத்தை அகற்ற வல்ல ஞாநாசாரியரைக் காண விரைந்து, கோவி லூர் மடாலயத் திற்குச் சென்று, அங்கு ஞாந பீடத்தி லமர்ந்திருக்கும் கருணு நிதி என்னும், சிதம்பர ஞாந தேசிகரை விதிப்படி வணங்கிச், சில காலம் குருவிற்கு ஆப்தம், அங்கம், தாநம், சத்பாவ மாகிய நான்குவித பணிகளையும் செம்மை யாய்ச் செய்து கொண்டு, முறை தவருமல் அங் குள்ள ஞாந நூல் கள் அனைத்தையும், ஐய மறக் கற்று ஞாந நிஷ்டாபரரா யிருந்தார்.

இங்ஙன மிருக்கையில், இவ் வீர சேகரனுரை இல் லற வாழ்வி லமர்த்த வெண்ணி இவர் தாயாரும், சுற்றத்தாரும், கோவிலூருக்கு வந்து இவரைத் தமது மனைக்கு வரும்படி அழைத்தார்கள். அதி தீவிர பக்குவி யாகிய இவர் தகுந்த காரணங்கள் சொல்லித் தம் தாயார் பந்துக்கள் முதலிய வரைத் தமது ஊருக்கு அனுப்பிவிட்டனர். இனிமேல் இங் கிருந்தால், தம் நிஷ்டைக்கும், தியாநத்திற்கும், பங்கம் விளையு மெனக் கருதி, சிக்கல் பொருள் வைத்த சேரி உகந்த லிங்க ஞாந தேசிக சுவாமிகள் மடாலயத்தை அடைந்து, சட்ட யப்ப சுவாமிகள் என்னும் பெரியா ரிடத்து விதிப்படி சந்நியாசம் பெற்றுக் காஷாய வஸ்திர தார ணம் செய்து கொண்டனர். சந்நியாசம் செய்து கொண்ட பின், ஒரேயிடத்தி லமருவது தகுதி யன்று என எண்ணி சிவ தல யாத்திரை செய்யக் கருதிப் பல தலங்களையும், தெரிசநம் செய்து கொண்டு சிதம்பரத்தை அடைந்து, நடராஜப் பெரு மானை வழிபட்டிருந்தார். அப் பொழுது அங் குள்ள மௌந சுவாமி மடாலயத்தைத் தியாந நிஷ்டைகளுக்கு உறைவிட மாக்கித் தியாநாதிகள் செய்து வந்தனர். இதனை அறிந்த பொன் னம்பல ஞாந தேசிக சுவாமிகள் இவரைத் தம் மடாலயத்தி லிருக்க வைத்து, நல் லுபதேச மொழிகளைச் சொல்லிக்கொண்டு வந்தார்கள்.

இவ் வாறு இருந்து வருங் காலத்தில், கோவி லூரில், தம் ஞானாசாரிய ராகிய சிதம்பர ஞான தேசிக சுவாமிகள் விதேக கைவல்லிய மடைந்தார்கள். அவர்கள், திரு வுள் ளப்படி காரைக்குடி ராம ஸ்வாமி ஞான தேசிக சுவாமிகளே அந்த ஞான பீடத்தி லமர்த்தினார்கள் அப்பெரியாரும் தம்மை அடைந்த பக்குவிக ளான அதிகாரிகளுக்கு வேதாந்த பாடம் ஓதுவித்தும், ஞானோபதேசம் புரிந்தும், சில ஆண்டுக ளிருந்து, தமது அந்திய காலத்தில், "வீரன் வருவான்" என் றருளிச் செய்து, பரிபூரண தசை யடைந்தார்கள்.

இதை அறிந்த பொன் னம்பல ஞான தேசிக சுவாமி கள், கைப் பிக்ஷை ஏற்று ஞான நிஷ்டராய் விளங்கும் ஸ்ரீ வீர சேகரப் பெருந்தகையாரை அழைத்து, இனி மேல் நமது குரு ஸ்தான மாகிய கோவி லூர் மடாலயத்தில் பீடத்தி லமர்ந்து, மடாலயத்தைப் பாதுகாக்கவும், அதிகா ரிக ளாகிய முமுக்ஷுக்களுக்கு வேதாந்த பாடங்களைக் கற் பிக்கவும், உபதேசாதிகளைச் செய்வதற்கும், தக்கவர் நீவீரே யன்றி வேறு யாரும் இல்லை என்ற வார்த்தையைக் கேட்ட நம் பரமாசாரியர், சில நேரம் மௌன மாகவே யிருந்து, அன் றிரவே கால் நடை யாகப் புறப்பட்டு, வளவ னூர் ஷண் முக ஞான தேசிக சுவாமிகள், மடத்திற்குச் சென்று விட்டனர்.

இதை யுணர்ந்த, கோவி லூர்க் குரு ஸ்தானத்தில் அபி மான முற்ற சில அடியார்களும், குமரப் பய்யா என்னும், தன வைசியரும், வளவ னூரில் சென்று, தவ நிஷ்டையி லிருக்கும் பரமாசிரியரை தரிசிக்க, அவர்கள், வந்த காரியம் வினவி, எல்லா முணர்ந்தவ ராதலின், வந்தவர்களின் வேண்டுகோளுக்கு ஒரு வாறு சம்மதித்து அவர்களுடன், புறப்பட்டுச் சிதம்பரம் பொன் னம்பல ஞான தேசிக சுவா மிகள், மடாலயத்திற்கு வந்து சேர்ந்தார்கள். பின்னர்ப் பொன் னம்பல ஞான தேசிக சுவாமிகளின், அருள் மொழி யினாலும், விடா முயற்சியினாலும், அங் கிருந்து பொன்

னம்பல ஞான தேசிக சுவாமிகளுடன் மற்ற அடியார் குழாங்கள் புடை சூழ கோவி லூருக்கு வந்து, வீர சேகர மா முனிவர், தமது குரு பீடத்தை அலங்கரித்திருந்தனர்.

இவ் விதம் மடாலயத்தலைமை பூண்ட பின் தம்மைச் சரணாகதி யாக அடைந்த முமுக்ஷுக்க ளான மாணவர் களுக்கு அத்வைத சாஸ்திரங்களைப் போதித்து ஞானோப தேசம் செய்து வந்தனர். பின்னர்த் தமது குரு மூர்த்தியின் சமாதிக்குக் கருங் கல்லில் இழைத்த ரதமும், அதன் மேல் கல் மண்டபம், சமாதிக்கு மேல்ப்புறம் அணி வெட்டுக் கால் மண்டபம், அதன் வடபால் கைலாஸக் கொட்டகை, அதன் கீழ்ப்பால் குரு பூஜை மண்டபம், இன்னும் புஷ்ப மண்டபம், நெற் களஞ்சியம், பசு மடம், பிரம்ம சபை முதலியவைகளைக், கண்டார், வியப்புறத் தக்க விதத்தில், அரிய பெரிய வேலைப்பாடுகளுடன், அமைத்தும், அடியார் கள் தங்க ஆங் காங்குக் குடீரங்கள் அமைத்தும், நித்திய பூஜை, முதலியன மடாலயத்தில் தினம் தோறும் நடைபெற வேண்டிய காரியாதிகளுக்கு நியமம் வகுத்தும், ஜநக ராஜா வைப் போ லிருந்து வந்தனர்.

இங்ஙன மிருக்கையில், சிருங்க கிரி ஜகத் குரு நரசிம்ம பாரதி சுவாமிகள், இராமேஸ்வர யாத்திரை யாகப் புறப் பட்டு வருவதைக் கேள்வியுற்ற சிதம்பரம் பொன் னம்பல ஞான தேசிக சுவாமிகள், கோவி லூருக்கு வந்து, ஸ்ரீ வீரமா முனிவரிடம், சிருங்க கிரி ஆசாரியாரை வர வழைக்க வேணு மென்று, சொன்னதை அன்புடன் ஏற்று, அவர்களையே உடன் இருந்து அழைத்து வரும்படி யாக வீரமா முனிவர் சொல்லப், பொன் னம்பல ஞான தேசிக சுவாமிகள் உடன்பட்டு இராமேஸ்வரம் சென்று, சிருங்க கிரி ஆசாரி யாரைத் தெரிசித்து வணங்கிக் கோவி லூருக்கு எழுந் தருள வேண்டு மென்று, கேட்டுக்கொண்டதை அன்புடன் ஏற்று அவர்களுடன் ஆசாரியாள், தம் பரிவாரங்களுடன், புறப் பட்டுக் கோவி லூருக்குச் சமீபம் வந்ததும், வீர சேகரப்

பெருந்தகையார் அடியார் குழாங்களுடன், ஆசாரியாரைப் பூர்ண கும்ப முதலிய, மரியாதைகளுடன் வரவேற்றுக் கோவி லூரி லிறக்கி, ஒரு மாத காலம் அவர்களுக்கு வேண்டிய பூஜை உணவு முதலியவைகளுக்கு வேண்டிய பொருளை லோப மில்லாமல் செலவழிப்பதைக் கண்டு, ஆசாரியாரும், மடாலயத்தார்களின் சிரத்தா பக்திகளையும், சிஷ்டாசாரத்தையும், பார்த்து மிகவும் திருப்தி யடைந்து, ஆசீர்வதித் தருளினர். அதுவு மன்றி, ஆசாரியாரின் விருப்பப்படி சிருங்கேரி சாரதாம்பாளுக்கு கருங் கல்லால் கோயிலையும் கட்டுவித்துக் கொடுத்தார்கள்.

பின்னர், கோவி லூர் திரு நெல்லை யம்பாள், கொற்றவாளீசுவரர் ஆல யதிருப் பணியி லிறங்கி, அரிய பெரிய பொருளை யீட்டி. இப் பொழுது காணப்படுகிற விதத்தில் திருப் பணிகளைச் சீருறச் செய்து. கும்பாபிடேகத்தையும் விமர்சை யாக முடித்து வைத்தார்கள்.

இங்ஙன மிருக்கையில், நம் வீர சேகரப் பெருந் தகையாரின் தவ மகிமையும், ஞாந நிஷ்டையும் அறிந்து, பல திசைகளி லிருந்தும், மோக்ஷ வேட்கை யுடைய அதிகாரிகள் வந்து, சரணுகதி யடைந்து வந்தார்கள். அவர்களில், முக்கியமானவர்கள் வேங்கட முநிவர் என்னும, வெங்கடாசல சுவாமிகள், தம் மாணுக்கர்களில் முதன் முத லாகத் தம்மை அடைந்தவர்களும், பின்னர் கிரம மாக வெள்ளியங்கிரி சுவாமிகள், அண்ணுமலை ஞாந தேசிக சுவாமிகள், மதராஸ் ஆநந்தாஸ்ரம சாது மஹா சங்கத் தலைவ ரான சுப்பையா சுவாமிகள், சிக்கல் மெய்யப்ப சுவாமிகள். ஸ்ரீ நாராயண சுவாமிகள், நிகழ் காலத்தி லிருப்பவரும், திருப் பூவணத்தில், வேதாந்த மடம் அமைத்து, உபய பாஷா வேதாந்தப் பிரவர்த்தக ராய் ஞாநாச்சாரியரா யிருக்கும், ஸ்ரீலஸ்ரீ காசி காநந்த ஞாநாசாரிய சுவாமிகள், மகா தேவ ஞாந தேசிக சுவாமிகள், சிவாநந்த சுவாமிகள் ஆகிய மாணுக்கர்கள் ஆவார்கள். இவர்களும், பின்னுமநேகரும்

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகப் பெருமானுடைய கிருபாவீக்ஷணம் பெற்று ஜீவன் முக்த தசையை யடைந்தார்கள்.

பின்னர் வீர சேகர மா முநிவர், தாம் பாண்டி நாட்டில் செய்ய வேண்டிய வினைத்தையும் செய்து முடித்த பின், சோழ நாட்டுக்குப் போகவேண்டு மென்று எண்ணி யிருக்கையில், சோழ நாட்டில் பூவனூர் என்னு கிராமத்தி லுள்ள இராஜு முதலியார் எனப் பெயர் பெற்றவரும், பூ வைசிய மரபைச் சார்ந்தவரு மாகிய சிவ பக்தர். கோவி லூருக்கு வந்து, ஸ்ரீ வீர மாமுநிவரை வணங்கி, சோழ நாட்டி லுள்ள திருக் களர் அமுத வல்லி யம்மாள் சமேத பாரிஜாத வநேசுவரரை தெரிசிக்க வர வேண்டு மென்று வேண்டிக் கொண்டார். தமக்கும் மநதி லிருக்கிற எண்ணம் பூர்த்தி யாக இது ஒரு நிமித்த மாக வந்தது எனக் கருதி, அந்த இராஜு முதலியாரின் வேண்டுகோளுக் கிணங்கி, ஒரு நல்ல நாள் பார்த்து ஸ்ரீ வீர மா முநிவர் அடியார் குழங்களோடு திருக் களர் க்ஷேத் திரத்தை அடைந்து, ஸ்ரீ பாரிஜாத வநேசுவரரை யும் அமுத வல்லி யம்பாளையும், தெரிசித்தனர். அப் பொழுது அந்தச் சிவாலயமோ, அத்தியந்தம் ஜீரண நிலையை அடைந் திருந்தது. இந்த ஆலயத்தைத் திருப் பணி செய்விக்கவேண்டு மென்று கேட்க, ஸ்ரீ வீர மாமுநிவரும், சிறுக ஆரம்பிப்போம் என ஒப்புக் கொண்டு, மீண்டும் கோவி லூருக்கு எழுந்தருளி அதற் குரிய திரவியத்தைச் சீக்கிர மாகத் தேடிக் கொண்டு, மீண்டும் திருக் களருக்கு எழுந்தருளினார்கள்.

அங்குத் தமக்கும், அடியார்களுக்கும், தங்க மடம் ஒன்று இயற்றி, அதில் வசித்துக்கொண்டு, மேற் கூறிய இராஜு முதலியாரின் உதவியால் திருப் பணி யாரம்பித்து, சுவாமி, அம்பாள், கோவிலுக்குக் கர்ப்ப கிரஹம், அர்த்த மண்டபம், சேபாந மண்டபம் நந்தி மண்டபம், பிராகார மண்டபம், பரிவார தேவதைகளுக் கெல்லாம்

ஆலயங்கள், வஸந்த மண்டபம், முதலியவையும், உத்சவத்திற் குரிய, சூரியப் பிரபை, சந்திரப் பிரபை, முதலிய வாஹநங்களையும், பஞ்ச மூர்த்திகளுக்கும் தனித்தனி இரதமும் செய்தும், துர்வாச தீர்த்த முதலியவைகளைப் படித் துறை கட்டிச் சீர் பெறச் செய்தும், அறு பத்து மூவர் மடம், பசு மடம், வேத பாடசாலைகள் ஆகியவையும் நல்ல முறையிற் கட்டுவித்தும், நந்தநவநம் தேரோடும் வீதி இவைகளையும் நன்ருக அமைத்தும், மற்றும் பல வித மான சீர்திருத்தங்களையும் 3 வருட காலத்திற்குள் செம்மையாகச் செய்து, கும்பாபிடேகத்தையும் வெகு விமரிசையாகக் கொண்டாடி, நித்திய பூஜை முதலிய வைகளும், அதி லுள்ள மற்ற காரியாதிகளும், நியம மாகச் சீர் பெற நடத்தும் முறையைச செய்வித்தும், மண்டலாபிடேகத்தையும், முடித்துக் கொண்டனர். இத் தகை அதிசயச் செயல்கள் எல்லாம் அவதார புருஷர்களுக் கன்றி வே றுள்ளார்க்கு யாங்ஙனம் முடியும் இப்படியிருக்கச் சிவாவதாரச் செல்வராகிய வீரமா முநிவர் தம் முடைய அந்திய கால நிலையை உணர்ந்து, இராஜு முதலியார் முதலிய அன்பர்களை அழைத்து, பாரிஜாத வநேசுவர சுவாமிக்கும், அமுத வல்லி யம்பாளுக்கும், பிரமோத்சவம் ஆரம்க்கவேண்டு மெனக் கட்டளையிட்டார். திருப் பணியிலும், கும்பாபிடேகத்திலும் ஏற்பட்ட சிரமத்தால் எல்லோரும் களைப்புற்றிருப்பினும், ஆண்டவர் கட்டளைப்படி மண்டலாபிடேகம் முடிந்த மறு நாளே பிரமோத்வத்தை ஆரம்பித்து விட்டார்கள். 8-வது நாள் உத்சவம் வரையிலும் காலை மாலை இரண்டு வேளையும் பஞ்ச மூர்த்திகளுக்கும் அபிடேக மாற்றி புஷ்பங்களால் அலங்கரித்துத் தனி தனி வாகநங்களில், ஆரோகணிக்கச் செய்து, வேத மோதல், தமிழ் மறை யோதல், முதலிய சிறப்புகளுடன் திருவுலாக் காட்சி நடைபெற்றது. 9-வது நாள் பஞ்ச மூர்த்திகளுக்கும் தனித் தனி இரதம் அமைத்துப் பல்லாயிரம் ஆட்களுடன் இரதம் இழுக்க ஆரம்பித்த சமயத்தில், நம்

வீர சேகரப் பெருமானும் தனது திருக் கரத்தால் தேரின் வடந் தொட்டு இழுக்க ஆரம்பித்ததும், தேர் ஓட ஆரம்பித்தது, பின்னர், வீர சேகரப் பெருமான் தமது மடாலயத்திற்கு வந்து இளைப்பாற்றிக் கொண்டனர். அன்று பல் லாயிரம் ஆட்கள் சேர்ந்து இழுத்த இரதங்கள் தென் கிழக்கு மூலையில் தெற்கு வீதி, சென்றதும் நின்று விட்டன. இதை யுணர்ந்த வீர மாமுநிவர், சர்வக்ஞராதலின், இனி மேல் நாளைய தினம் இழுக்கலாம் என்று கட்டளையிட்டனர்.

இவ் வாறு, இறைவனைக் கூடும் நிலையைத் தாம் அணுகி யிருந்ததைத் திரு வருளால் இனி துணர்ந்த நம் வீரசேகரப் பெருமானார், தமது அந்திம நிலையிலும் செய்த அருஞ் செயல்களும். திருப் பணிகளும், அருட் கட்டளைகளும், பல வாகும், அவை விரிப்பிற் பெருகும் என அஞ்சி ஒன் றிரண்டு கீழ் தரப்படுகின்றன.

இந்த ஜீவன் முக்த சிரோமணியானவர், சிதம்பரம் நடராஜப் பெருமானுக்குத் தாம் முன்னரே செய்து வைத்திருந்த வைரக் காதுத்தோடு முதலிய, திரு வாபரணங்களைத் தக்கவர் மூலம் அங்கு சேர்ப்பித்ததோடு அந்நப் பாவாடைக் கட்டளை யொன்றும் அங்கு நடைபெற ஏற்பாடு செய்தனர்.

பூவ னூர் இராஜு முதலியாருக்கு தேவாலயத் திருப்பணிகளை ஏற்று நடத்து மாறு பணித்தருளின போது, அவர் மருளார் மநத்தால், குறிப் பறியாது. திகைத்து நின்றனர். மறு நாட் செலவிற்குப் போதிய கற்பூரம் சேகரித்து வைக்கச் சொல்லியதோடு, திருக் களர் ஆலயத்தின் ஈசாநதசைக்கண் தம் திரு மேனியை அடக்கம் செய்தற் குரிய பூமியையும், திருச் சமாதிக் குரிய கருங் கல்லுகளையும், முன்னரே சேகரித்து வைத்திருந்தனர் தெப்போத்சவத்

திற்கு. ஏற்பாடு செய்திருந்தவைகளையும், அவ் வாண்டு நிறுத்திவைக்கு மாறும், கட்டளை பிறப்பித்தனர். திருத் தேரி லுள்ள மூர்த்திகளின் திரு வாபரணங்களை வழக்கத் திற்கு மாருக கழற்ருமல் அப்படியே அணிவித்திருக்கவும், கட்டளையிட்டதோடு, மறு நாள் பூ மாலைகள் அதிகம் தேவைப்படும் எனவும் தம் சீடர்களுக்கு ஆக்ஞாபித்தனர்,

திரு வருள் வயத்த ராகிய, வீர சேகரப் பெருந்தகை யார், மறுநாள் (பத்தாம் திரு விழா அன்று) திருத் தேர்கள் நிலைக்கு வந்து விடவேண்டும் என, இராஜு முதலியார் முதலிய அன்பர்களுக்குக், கட்டளையிட்டு அவ் வண்ணமே பல் லாயிரம் ஆட்களைக் கொண்டு தேரை இழுப்பித்தும், தாமும், தம் திருக்கரங்களால் இழுத்தும் தே ரோடக் கண்டு தெரிசித்து ஆநந்தித்தனர், தேர்கள் தெற்கு வீதியில் தூர்வாச முநிவர் அருள் பெற்றதும்,நட ராஜப் பெருமான் சந்நதியி லுள்ளது மாகிய பிரம்ம தீர்த்த மேல் கரையி லுள்ளது மாகிய இடத்தில் வந்து நின்றன, இதற்குள் வீர மாமுநிவர் தமது மடம் சென்று இளைப்பாறி மீண்டும் அவ்விடம் வந்தருளி தீபாராதனை கண்டு களித்துத் தமது திருக் கரங்களை சிரமேற் குவித்து, "ஹர ஹர மஹா தேவ" எனப் பல முறை சொல்லிய வாறே பூத வுடல் நீத்து ஜோதி வடிவேயானர் அந்தச் சமயத்தில் வேத கோஷமும் தமிழ் மறை ஒலியும், சிவ நாம ஒலியும், பல வகை வாத்திய ஒலியும், வானைப் பிளந்தன. சுவாமிகளின் திரு மேனியைப் பூமியில் படாத வாறு அருகினின்ற அந்தணர்கள் தாங்கிக் கொண்டனர்.

புண்ணிய பூமி யாகிய மண் ணுலகில் எண் ணருந் தவத்தால் தோன்றிக் கல்வி மல ராய், ஞாநச் சுட ராய் அருட் டேசிகராய் விளங்கித் தேவாலய, மடாலயத் திருப் பணிகள் எண் ணிறந்தன செம்மையுற இயற்றி நிஷ்டையிலும், ஸியவ ஹாரத்திலும், தத்துவ ஞாநங்களிலும் துறவிலும், முறையே சநகாதிகள், ஜநகர், வியாசர்,

பட்டிநத் தடிகள் போலக் காக்ஷி தந்து தமது திருவடி பற்றிய பலரையும் உய்வித்தும், வீற்றிருந்த நம் பரமாசாரிய சுவாமிகள், தமது 63 வது வயதில், கலி 5013 விரோதி கிருது வருஷம் வைகாசி மாதம் 27.2 சுக்கிர வாரம் விசாக நக்ஷத்திர சுக்கில பக்ஷத் திரயோதசி திதி உச்சிப் போதாகிய சுப வேளையில் இறைவன் வடிவே ஆனார்கள். இவரது அருள் வாழ்வு நம்மனோர்க்கு நல்ல வழிகாட்டியாகும் எனக் கூறவும் வேண்டுமோ.

ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமிகள்
திருவடிகள் வாழ்க.
வீர சேகரர் விரை கழல் வெல்க!
பாரகம் அடங்கலும் அவர் புகழ் பரவுக!!
சீரடியார் நிதம் சிறப் புற்று வாழ்க!!

உ
சிவ மயம்

திருவாரூர் மடப்புரம் சோமநாதன் கோவில்,
*ஸ்ரீ கிருஷ்ணாநந்த சுவாமிகள் எழுதியது.*
## ***எங்கள் தலைவர்.***

---

செந்தண்மை பூண்ட செந்நெறியாளர் செறிந்து, நந்தமிழ் மொழியை நலமுடன் பேணிய பதியாம் கூடலினையும், ஆதியும் அந்தமு மில்லா அர்த்தநாரீசனும் சுந்தரேசனின் ஆடல் அறு பத்து நான்கிற்கு மேல் காணுகின்றதுவும், சங்கத் தமிழினைப் பங்க மில்லாது பாங்குற வோங்கப் பணி பல பக்குவ மாகப் படைத்திருந்த பைந் தமிழப் பாவலர் போற்றும் வையை யென்னும் வனப் புடைக்

கன்னியைத் தன் னகத்தே பெற்று தருக்கொடு செல்லும் பெற்றியைப் பெற்றது மான, அம் மதுரையம் பதியினை மாண்புறு தலை நக ராகக் கொண்ட பாண்டியம் பதியினை ஓர் அங்க மானதும், சிவ நலம் பேணும் செந் தண்மை யாளர் செறிந்ததும், தெள்ளு தமிழ்ப் பாவலன் வள்ளு வனின் வா யுரையாம், "ஊருணி நீர்நிறைந் தற்றே உலக வாம், பேரறிவாளன் திரு" என்னும் மொழிக் கிலக்கிய மாய்ப், பே ரறிவாளர்களைப் பெருமையுடன் அன்றும். இன் று ம், என்றும், பெற்றுப் பொன்றுப் புகழுடன் விளங்கும் தொல் பதியாகும் செட்டியார் நாடு தன்னில், செழுமை மிக்கு புதுமை மிளிர் புது வயல் தன்னில், நல் லறங் காவல ரெனப் போற்றும், நகரத்தார் குடியதனில், அருணசலப் பெயர்ப் பெரியோன், ஆ ற் றி ய தவத்திற் கணிகல மாய்த் தோன்றி, எம்மனோரை செம் மனத்தராய்ப் படுத்திச் சிவத்தோ டணைய வைத்த செம்மலாரைப் பற்றி எழுதத் துணிந்தேம்

அண்ணலார் அவர்கள், வீரேசனின் திரு வருளால் "மகன் றந்தைக் காற்று முதவி யிவன் றந்தை, என் னோற் றான் கொல்லெனுஞ் சொல்" என்ற பொய்யா மொழிக் கொப்ப, "பழையன கழிதலும், புதியன புகுதலும், வழு வல கால வகையினனே" என்ற மூ துரைப்படி, தென் மொழியும், வட கலையும், கசடற உணர்ந்து மனிதப் பிறவியின் மாண்புறு பயன் மன் றுளாடும் அம்பலக் கூத் தனின் அடியினை அடைதலொடு தமரையும் சேர்த்தல் என் னும் தகைமைக் கேற்பத் தன் வாழ்வை வகைப் படுத்திக் கொண்டார்கள்.

இல் லற நெறி நின்று நல் லாற்றுப்படுவதை விடத், துற வற நெறி தேர்ந்து தூய ராவதே செப்ப முடைத் தெனக் கண்டு, கோவி லூர் ஆதீனத்திற்கு அடிப்படை வித் திட்டதும், 'மல்லிகாரண்யம்' என்ற மாண்பு மிகு பெய ரினைப் பெற்ற தாய சிக்க லெனும் சிறப்புறு பதிக் கருகே

பொருள் வைத்த சேரி யென்ற மல்கு புகழ்ப் பெயரினை யுடைய தாகிய நகரின்கண் உள்ள, உகந்த லிங்க ஞான தேசிகர் திருமுன் படைந்து, அவண் தலைமை யேற்று தமிழொ டிணைந்த சன்மார்க்க நெறிதனைப் பரப்பும் சட்டை யப்ப சுவாமிகளிடம் சென் றடி தொழுது, கல்லாடை பெற்று நல்லவ ரானார்.

காவி யாடை புனைந்த கண்ணிய மிகு சீலர், துறவுப் பாடங்களை முறையே கேட்டு, உள்ளத்திலே அன்பையும், அருளையும், அர னடி மறவாச் சிந்தையையும், அணிகலமாக் கொண்டு, ஆன்ற தலங்கள் பல சென்று அர னடி பணிந்து நற் றவ வேள்வியினை நலம்பட ஆற்றி வருங் காலை, கோவி லூர் குரு சந்நிதானம், இராம சாமி ஞான தேசிக ஸ்வாமிகள் விதேக கைவல்யம் பெற்ற பின், நம் வீர சேகரப் பெருமான், வீர சேகர ஞான தேசிகர் என்னும் திருப் பெயரினைத் தாங்கிக் கோவி லூர்க் குரு பீட மேறிக் குவலயம் போற்ற விளங்கினர்.

அன்னவர் குரு பீட மேறிய பின், எண் டிசை போற்றும் தண் டமிழ் நாட்டின் தனிப் பெரும் துறவிகட் கோர் துணை யாய் அருந் தொண்டுகள் பல ஆற்றியதுடன், குரு பீடத்தினை குவலயத்தோர் போற்றும் வண்ணம் சிறக் கச் செய்யக் குறிக் கொண்டு, கோவி லூரில் சிறந்த திரு மடத்தினை துறவிகட் குரிய மடத்து இலக்கணம் சிறிதும் வழுவா வண்ணம் வாரோரும், வியக்கு மாறும், எம்மனோர் உய்யு மாறும், நிர னிரை யாக வகுத்து அமைத்தனர்.

குரு பீட மேறிய குண சீலர், தன் னறிவு பயன்படு மாறு, ஏற்ற பல நற் சீடர்களை நலமுடன் பெற்று, நந் தமிழகம் நனி சிறக்கவும், எம் மதத்திலும், தம் மதத்தையே கண்டு, வேதாந்த விருப்புள்ளவர்களுக் கோர் விருந்தாய் வேதாந்த வெறுப்பிற் கோர் மறுப்பாய், கண்டோர் யாவரும் களிக்கும் வண்ணம், அடிகளாரின் செயலைக் கேட்

டோர் யாவரும் திகைக்கும் வண்ணம், வாழ்ந்து, ஆலயத் திருப் பணியும், அடியார் மடத் திருப் பணியும், வழுவா தாற்றி அரு ளாட்சி நடத்தி வந்தார்கள்.

இங்ஙனம் நடத்தி வருங் கால், "கற்றது கைம்மண் ணளவு, கல்லாத துலகளவு." என்ற மொழிக் கேற்ப, தன் வாணுள் முழுவதும் வழுவிலாப் பனுவலினைப் பயின்றும், "அரியவற்று ளெல்லாம் அரிதாய பெரியாரைத் தமராகக் கொண்டு," அக மகிழ வாழ்ந்து, தென்னகத் திற்கே, தெள்ளிய சிறப் பான விருந் தோம்பலைச் சீருடன் நடத்த, மடங்கள் பல, தன் ஞட்சியிலேயே தக்கார் துணை கொண்டு இயக்கியும், துன்புரு இன்பம் கண்டு, துணை செய்வதிலே பீடுபெற்று வாழ்ந்த நம் துறவிகள் தலைவர், "அன்றறிவா மென்ஞு தறஞ் செய்க" என்ற விழுமிய கருத்தினை விருப்புடன் கொண்டு, சிவ, கலையும், தவப் பொலிவும், அருள் வலியும், கொண்டு கோவி லூர் திரு நெல்லை யம்மை திருப் பணியினைத் திருத்த முற முடித்து, பாரிசாத வநம் என்ற பழம் பெருமையையும், பொன்னி வள நாட்டின் கன்னி காவிரிப் பொங்கு நீர்ப் பாய்ச்சலினுல், கன்னலொடு, கமுகு கதலி தெங்கும் செந் நெலும் செழிக்கும் களரி யென்னும் திருக் களராம் திரு நகரின்கண் விளங்கா நின்ற, அமுத வல்லி சமேத பாரிசாத வநேசரின் திருப் பணியினை முடிக்க உளங் கொளவேண்டுமென உண்மைத் தொண்டர்கள் விண்ணப்பம் விடுக்க, அதனை ஏற்று ஆண்டு மூன் றுக்குள் அவ்வாலயத் திருப் பணியினை அழகுற முடித்து அமைதி பெற்ருர், நம் வீரேசத் தவத் திருவுடையார். அருள் வலி, அனைத்தும் பெற்ற அருமைத் துறவியார், தம் வியோக நாளை பாலிற் படு

நெய் போல் உள்ள, பரமேசன் அடியிணைகளைப் பாலிற் பால் போல் சிவத்தொடு சிவ மாய்ச் சின்னாளில் கலப் பே மெனக் கூறி, அவ் வண்ணமே வைகாசி விசாகத் திரு நாளில் இறை வடி வாகப் பூத உடல் நீத்து விதேக முக்தி எய்தினர்.

அன்னார் பெருமை சொல்ல ஆயிரம் நா படைத்த ஆதி சேஷனுக்கும் அருமை யென்னில், மிகையாகாது. அத் திருப் பொலிவுடையாரின் ஐம்ப தாவது குரு பூசைத் திரு நாளும் ஆன இன்று இம் மலர் வெளி யிடுவதில், அவர் தம் வழித்தோன்ற லாய பர சமயக் கோளரியின் பெருமையினை ஓரளவு செய்ந் நன்றி மறவாச் செப்ப முடைய தெனக் கூறி முடிக்கின்றோம்.

சிருங்க கிரி குரு பீடம் தன் தண் கழல் போற்றி!
வேதாந்த ஞாந தேசிகன் றன் றிரு வடி போற்றி!
வீர சேகர ஞாந தேசிகன் றன் றிருக் கழல் போற்றி!

உ
சிவ மயம்.

மதுரை, குட்டை ஐயா, மடம்,
காளையார் கோவில், கா. செ. மடம்,
ஸ்ரீ அருணாசல சாமிகள் மாணாக்கர்
*ஸ்ரீ சங்கர சாமிகள் எழுதியது.*

ஸ்ரீலஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் பாராட்டுரை.

சீர்மிகும் வீரேசத் தேசிகர்தம் பாராட்டு
ஏர்மிகும் கட்டுரையை யான்கூற — நேர்பெறும்
அம்பிகை ஈன்ற அருள்ஞாந மாமுகத்தோய்
நம்பியுனைப் போற்றினேன் நல்கு.

கடல் சூழ்ந்த இந் நில உலகின் கண் தருமம் குறைந்து அதர்மம் மிகுங்கால் உலக சங்கிரகார்த்தம் தர்மத்தை உத்தாரணம் செய்ய வேண்டி, உகந் தோறும் உகந் தோறும் தோன்றுவன் என ஸ்ரீமத் பகவான் வாக்கியத்திற் கிணங்க பூர்வம் ஈசனது கலையே உல குத்தாரண நிமித்தம் அத்திரி மகா முநிவருக்குத் துர்வாசர் என்னும் திரு நாமத்துடன் புதல்வ ராகத் தோன்றி சாபா நுக்கிரகச் செயலுடன் விளங்கி உலகை நல் வழிப்படுத்திய பின், களரி என்னும் க்ஷேத்திர மடைந்து ஸ்ரீமத் நடராஜப் பெருமான் ஆநந்தத் தாண்டவத்தை தரிசித்து மறைந்த பின்னர், இக் கலியில் ஸ்ரீமத் சங்கர பகவத் பூஜ்ய பாதர் தோன்றி, வேதாந்த மதத்தை ஸ்தாபித்து, மேற்குத் திசை முதலிய உத்தர தேசங்களில், பிரகாசிக்கும்படி செய்தனர்.

அதன் பின்னர், தெக்ஷிண தேசம் உய்யும் பொருட்டு, பழம் பதி யாகிய பாண்டிய நாட்டின்கண் தர்மம் சூழப் பெற்று விளங்கும் புது வயல் என்னும் நகரத்தில் அமர்ந்த தந வைசிய குல திலக ராகிய அருணாசலம்செட்டியாருக்கும், கற்புத் தன்மை வாய்ந்த அவர் மனைவி உமையாள் என்னும் அம்மைக்கும் கலி யப்தம் நா லாயிரத்துத் தொள் ளாயிரத்து நாற்பத் தொன்பதிற்குச் சரி யான கீலக வருஷம் ஆவணி மாதம் பன் னிரண்டாந் தேதி சுக்கிர வார சுபதிநத்தன்று, அதிகார புருஷ ராகிய அத் தூர்வாச முநிவரே தவப் புதல்வ ராக அவதரித்தனர். இப் பெரியாருக்கு பெற்றோர் களால் அமைக்கப் பெற்ற பிள்ளைத் திரு நாமம் வீரப்பன் என வாம். வீர னென்பது யா தெனின், அநேக யுத்த வீரர்களைத் தான் ஒருவ னாக இருந்து வெற்றி பெறுவ தாம். அதற்கு ஒப்ப இவ் வீர சேகரரும், பேத வாதிக ளாகிற மத யானைகளை, சிம்மம் போல், வென்று எங் நாட்டின்கண்ணும் வேதாந்த மதத்தை ஸ்தாபித்தவ ராதலால், இவருக்கு இயற்கையில் சாக்கை என்னும் க்ஷேத்திரத்தில் எழுந்தருளி இருக்கும், வீரவநேசுரப் பெருமானதும், சேர்க்கையில் திட தத்துவ க்ஞாந வீர முடையவ ராதல் பற்றியும்

வீரப்ப னென்பது நியதியால் அமையப் பெற்ற தென்று மகான்களால் உணரற்பால தாம்.

இம் முனிவர் இளமையில் அறிவு ஒழுக்கம் அடக்க முடையவராய், இருந்து, வித்தியாப்பியாசம் செய்த பின், பூர்வ அவதாரத்தைப் போன்று, இவ் வர்த்தமான அவ தாரத்திலும் இயற்கையாகவே மூ வேடனைகளில் நின்றும் முற்றத் துறந்து உபரதி யாகிய நன் மணம் வீச மோக்ஷ சாம்ராஜ்ஜியத்தை அரசு செய்ய விரும்பி தான் கொண்ட வடிவத்திற் கேற்ப ஆசிரியரை நாடி யதிகளுக்கு இருப் பிட மாகிய தெய்வீகம் பொருந்திய கோவி லூர் மடாலயம் அடைந்து, அவ் வமயம் ஆசாரிய பீடத்தில் எழுந்தருளி இருந்த கருணை நிதியை குரு மூர்த்த மாகச் சர ணடைந்து, வேதாந்த பாடம் சிரவணித்து. தத்துவக் ஞான பரராய் விளங்கி, மூன் றுலகமும் திரணம் ஒப்ப மதித்து, புண்ணிய க்ஷேத்திரங்களை தெரிசநம் செய்து கொண்டு, பின் பரமேட்டி ஸ்தான மாகிய சிக்க லென்னும் பொருள் வைத்த சேரி சென்று, சந் நியாசம் பெற்று, பின்பு, கோவி லூர் அடைந்து, சிலது காலம் வசித்து ஆசாரியரிடத்தில் விடை பெற்று தில்லைக்குச் சென்று, நட ராசப் பெருமானை பிரதிதிநமும் தெரிசநம் செய்து வந் தனர். அக் கால், கோவி லூர் ஸ்தாநத்தில் எழுந்தருளி இருந்த தனது ஆசிரியரும், பின், அதே ஸ்தாநத்தில் அமர்ந்த ஸ்ரீலஸ்ரீ ராம சாமி ஞாந தேசிக ஸ்வாமிகளும், விதேகம் அடைய, கோவி லூர் ஸ்தாநத்திற்கு நமது வீர மா முனிவரை ஆசாரிய பீட மாக இருக்கும்படி தந வைசிய நகரத்தார்களும், பெரிய சுவாமிகள் என்னும் ஸ்ரீலஸ்ரீ பொன் னம்பல ஞாந தேசிகர் முதலிய சாதுக்களும், சேர்ந்து ஞாந முடி சூட்டுவித்தனர். நமது வீர தேசிகரும், இமய முதல் குமரி பரியந்தம் வேதாந்த மணங் கமழ பிரகஸ்பதியும் கண்டு வியக்கும்படி ஆயிரக் கணக் கான

மாணவர்களுக்கு வேதாந்த ஞாநோபதேசம் செய்வித்து, போத நா டாகிய ஞாந சாம்ராஜ்ஜியத்தை அரசு புரிந்து வந்தனர் என்பது சிறுவ ஞகிய யான் கூறுவது மிகை யாகாது, ஆன்றோர் வழக்கு மாம். கோவி லூர் என்பது நீண்ட காலமா யுள்ள பெரும் புண்ணிய க்ஷேத்திர மாகும். அதை நமது ஆதி ஆண்டவர் தனது தபோ வலிமையால், எதிர் காலத்தைச் சிந்தித்து அச்க்ஷேத்திரத்தில், எழுந்தருளி யிருக்கும் கொற்ற வா ளீசருக்கும், திருநெல்லை அம்மைக் கும், ஆலயத் திருப் பணியைச் செய்து பூர்த்தி செய்வித் தனர். அதை மீண்டும் நமது வீர சேகர ஞாந தேசிகர் தனது மநதின் சிற்பக் கலை ஞாநத் திறமையை தேவ தச்ச ஞகிய விசுவ கர்மாவும் பார்த்து அதிசயிக்கும்படி இரு பத் தேழு லட்ச ரூபாய் பொருட் செலவில் மிகவும் சிறப் பாக, சுவாமிக்கும், அம்மைக்கும், சீர்திருத்த மான சிவாலயத் திருப் பணியைச் செய்தும், நேத்திர உற்சவ மாக பார்த் தவர்கள் ஆச்சரியப்படும்படி தெப்பக் குளம், மைய மண் டபங்களைப் புதுக்குவித்தும், பூர்வம் திரு ஆலவாய் என் னும் க்ஷேத்திரத்தில் சோம சுந்தரப் பெருமானுக்கு தேவ லோகத்தி லிருந்து விமாநம் கொணர்ந்து அமைத்து கும்பா பிடேகம் செய்தருளிய இந்திர னுங் கண்டு வியப்படையும் படி சிறப் பாகக் கும்பாபிடேகமும் செய்வித்து, கோவி லூரை கோவி லாக அமைத்தார்கள். இது நிற்க, பிறகு மடாலயத் திருப் பணியை ஆரம்பித்து தனது குரு மூர்த் திக்கு நாநா வித மான சித்திர வேலைகள் அமையப் பெற் றுள்ள விமாநமும், பிரமனும் கண்டு நாணும்படிக்கு பிரம சபையும், உமை யம்மையும் பார்த்து ஆநந்திக்கும்படி கைலாசக் கொட்டகையும், சாதுக்கள் இருந்து தியாநம் செய்வதற்கு, தனித் தனி ஆசிரமங்களும் செய்வித்து, இது போன்று வேதாந்த ஆசிரமம் எந் நாட்டிலும் இல்லை யென்று பெரியோர்கள் கூறும்படி ஸ்ரீ வைகுண்டம் போல், வெகு விசித்திர மாக நமது வீர மாமுநிவர் கோவி லூர் மடாலயத்தை அமைத்தனர்.

முன்னர் தேவர்களுக்கு மானச சிருட்டியைச் கூறுவது நூல் வழக்காகும். இவ் வீர மா முனிவரும் தனது மநதில் சங்கற்பித்த பிரகாரம் அநாயாசமாக எடுத்த காரியங்களை முடித்தனர் என்பது அதிக மாகாது. ஏனெனின், அவதார புருடருக்கு எவ் வித அரிய பெரிய காரியமும் எளிதாய் முடியுமென்பது ஆன்றோர்கள் அறியக்கிடந்த தாம். இவ் வீர சேகரப் பெருமானது அசகாயத் திறமையைக் கண்ணுற்ற ஸ்ரீ சிருங்க கிரி மடாதிபதி சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகளும், வீர மா முனிவ என்னும் ஆசீர்வாத பஞ்ச ரத்நம் செய்து வாழ்த்தினார்கள். மேலும், ஆசாரிய சுவாமிகளுக்கு இவ் வீரசேகரப் பெருமான் ஸ்ரீ சிருங்க கிரியில், சாரதாம்பாள் கோவிலை கருங் கற் றிருப் பணி யாக்கி கும்பாபிடேகமும் செய்விக்க ஐம் பதி னாயிரம் ரூபாய் சேகரித்துக் கொடுத்தார்களென்றால், இவர்கள் தபசு தான் என் னென் றறியத் தக்கதாம்.

இவ் வீர மா முனிவரும், தனது தத்வ க்ஞாந திருஷ்டியினால், மாயா காரிய மாகிய உலகனைத்தையும் பாத மாக்கும சிம்மப் பார்வை உடையவர்களென்பதில் ஐயம் யாது மில்லை யாம். ஞாந வேந்த ராகிய இவ் வீர மாதவரும் தான் எழுந்து பாதசாரியாய் நடந்து செல்லுங்கால், மின்னலைக் கண்டு விலகும் இருள் போல் பாமரன் முதல் பண்டிதர் ஈருக எதிர் நில்லாது இரு புறமும் மறைந்து ஒதுங்குவார்களென்றால், இவர்களது சதாசாரத்தின் நேர்மையை வசிட்டருங் கண்டு அதிசயப் படத் தக்க தாம். இம் முனிவரை, ஜநங்கள் பார்த்துத் தெரிசித்த மாத்திரத்தில், சூரியனைக் கண்ட பனி போல், பாவம் நீங்கிவிடும் என்பதில் கூறவேண்டியதென்னை உளது. ஆகையால், அவர்களது அநுக்கிரகச் செயல்கள் நம் மநதிற்கு எட்டாத தென்று அறியத் தக்க தாம். நமது யதீந்திர ராகிய வீர மாதவனார், தெக்ஷிண தேசத்தில், சந்நியாசிகள் ஆசிரியரது சந்நிதாநத்தில் நடந்து கொள்ள

வேண்டிய சிஷ்டாச்சாரத்தை வகுத்தது, இப் பூவுலகில், முன்னும், பின்னும், எந்த மதாச்சரியரும், இந்தப்படி ஏற்படுத்த வில்லை யென்று ஆராய்ந்த அறிஞர் கூறுவர்.

இவ் வகை யாக வீரசேகரர் விவகாரத்திலும். தத்துவ க்ஞானத்திலும், ஜ ந க னை நிகர்த்தும், உபதேசாதிகளில், சூரியனைப் போன்றும், சாபாநுக்கிரச் செயலுடன் பிரகாசித்து, குண கடல் முதல், குடகு வரையில் வேதாந்த ஞானச்சாரிய ருய் விளங்கி வருங்கால், தான் வந்த காரியம் இவ் விடம் முடிந்த தென்று கருதி, இனி, எதிர் காத்தில் நடக்க வேண்டிய காரியங்களை ஞான நோக்கால் உணர்ந்து, பூர்வம் தான் தெரிசித்து மறைந்த சோழ நாட்டின் கண் ணுள்ள, திருக் களர் சிவாலயம் சிதலத் தன்மை அடைந்தமையை கருத்தில் சிந்தித்தனர். இவ் வாறு, வீர மா முநிவர் ஓர்ந்து அறிவது, சொருபத்தில் மறைப் பின்மையும் செங்மழும், வருமென்பது, அதிகார புருடருக் கன்றி ஏனையோருக்கு உண்டாக, தென்பதை ஞான நூலுணர்ந்த நல்லோர் கூறுவர். இவ் விதம் மைத்திரியாதி சுப குண முடைய வீர சே க ர ரு க் கு, பூர்வ செந்ம சமஸ்காரம் உற்புத்த மாகச், சில சிவ நேசச் செல்வர்களை முன்னிலை யாகக் கொண்டு, திருக் களர் அடைந்தனர். அதன் பிறகு தான், திருக் களர் ஆண்டவ ரென நம் பெருமானுக்கு திரு நாமம் வழங்குத லாயிற்று.

திருக் களர் ஆண்டவ ரென்பது அத் திருக் களர் க்ஷேத்திரத்துக்கு தலைமை பூண்டு அரசு புரிதல் எனப்படும். இவ் வகையான மாண்பை இன்றும் அத் திருக் களரில் யாவராலும் வெள் ளிடை மலை போல் பரக்கக் காணப் பெறலாம். அதன் பின், திரி கால ஞான வேந்த ராகிய வீர மாதவர், அத் திருக் களர் சிவாலயத் திருப் பணியை ஆரம்பித்து மூன்று வருஷத்திற்குள் நாலு லட்ச ரூபாய் செலவில் பணியை முடித்து, நான்கு ர த வீதிகளையும், தெய்வ லோக அமராவதி நகரம் போல் வகுத்து, பஞ்ச

மூர்த்திகளுக்கும் பஞ்ச ரதங்களையும், தனது தபோ வலிமையால் செய்வித்து, பெரும் வைபவ மாக கும்பா பிடேகமும் செய்து, அத் திருக் களரை தக்ஷிண கைலா யம் போல் விளங்கும்படி அமைத்தார்கள். பிறகு, அவ் வீர சேகரர் தனது நிர்யாண நிலைமையை அறிந்து, அவ் வருஷமே வைகாசி மாதம் பிரமோற்சவத்தையும், ஆரம் பித்து குபேரனுங் கண்டு அதிசயப்படும்படி பெரும் சிறப் பாக நடத்தி வருங்கால், ரத உற்சவ மாகிய ஒன்ப தாந் திநம் ரதங்கள் செல்லுத லின்றி ஈசாந திசைக்கண் வந்து நின்றுவிட்டன அடுத்த பத் தாந் திநம், வீர சேகரப் பெருமான் எழுந் தருளி வந்து,ஜநங்களைத் திரட்டி,ரதத்தை இழுக்கும்படி செய்வித்து, தாமும் தனது இரு கரங்களால் வடத்தைப் பற்றி இழுக்கவே, இரதம் நகர்ந்து சென்றது. அதை யறிந்த நமது பெருமான் முக மலர்ச்சியோடு மடால யத்திற்குச் சென்றூர்கள்.

பின், இரதங்கள் தெற்கு வீதியின்கண் பூர்வம் தூர் வாச முநிவருக்கு ஆநந்தத் தாண்டவம் காட்டி யருளிய நடராஜப் பெருமான் சந்நிதி யான முக்தி ஸ்தாநத்தின் அருகே சென்று கொண் டிருந்தது. அவ் வமயம், நமது வீர மாதவர் மடாலயத்தில் சிறிது இளைப் பாறி விவகாரம் அற்ற தனது யதார்த்த நிலையில் நிற்கக் கருதி, கலி ஐயாயிரத்து பதி மூன்றுக்கு விரோதி கிருது வருஷம் வைகாசி மாதம் இரு பத் தேழாந் தேதி சுக்கிர வார சுப திநத் தன்று, மீண்டும் மடாலயத்தி னின்றும் எழுந் தருளி வந்து, அவ் விரதத்தின் வலப் பக்கத்தில் நின்று, இரண்டு கரங்களையும், சிரசின் மீது குவித்த பிரகாரம் ஹர ஹர மகா தேவ வென பன் முறை புகன்று ஆநந்த பாஷ்பம் பொங்க இப் பொய் யுடலை நீத்து சிவ வடிவ மாயினூர்கள். இக் கலியில் இத் தகைய மாண்பை இவ் வுலகின்கண் பூத காலத்திலும், வர்த்த மான காலத்திலும், யாவரும் காணுதை வராய்ப் பார்த்து அதிசய முற்றனர். அவதார புருட ராகிய இவ் வீர சேகரப் பெருமானுக்கு இஃது ஒரு திரு விளை

யாட்டின் லீலை யென அறியத் தக்க தாம் பிறகு. வீர மா முனிவர் திருமேனியை ஸ்ரீமத் அண்ணுமலை ஞான தேசிக ரும், மற்று முள்ள சீடர்கள் அன்பர்கள் யாவரும் சேர்ந்து திருமேனிக்கு அபிடேக ஆராதனைகள் செய்து, சமாதி செய் வித்து. பிறகு சமாதி ஆலயம் கருங் கற் றிருப் பணியால், அமைத்து, கும்பாபிடேகமும் சிறப் புறச் செய்வித்தார்கள். இந்தப் பிரகாரம் ஞான சிகாமணி யாகிய வீர மா முனிவர், கோவி லூர் ஸ்தானத்தில், ஆசாரிய பீட மாக, இரு பத் தேழு வருடம் ஐந்து மாதம் எழுந் தருளி இருக்குங் கால், தன்னை வந்து சர ணடைந்த சீடர்கள் ஒவ் வொருவரும், பிரபல வித்துவத் தன்மையையும், திட ஞானத்தையும், உடையவ ராய் இருந்தார்கள் இவர்களில், மற்றையோர் விதேக மடைய, திருப் பூவணம் மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ காசிகா நந்த ஞானாச்சாரிய சுவாமிகள் திட தத்துவ ஞான பர ராய், அரோகதிட காத்திர ராய், இருந்து பல வட மொழி நூல் களை மொழி பெயர்த்தும், தமிழ் நூல் பலவற்றிற்கு தான் நேரே நூலாசிரியராய் அமர்ந்தும், குரு பக்தியின் சிரத்தை யாகிய நன் முயற்சியால் தனது ஞானாசிரிய ராகிய வீர சேகர ஞான தேசிகர் ஐம்ப தாவது ஆண்டு குரு பூசை கநக பாராட்டு விழாவிற்கு இம் மலர் எழுந்து மணந்த தாம்.

திருவளர் கலியப் யாயிரத் தோடு
சேர றுபத்திரண் டாகும்,
மருவளர் பிலவ வருடமாய் இலங்கும்
மாசறு இடபமாம் ரவியில்,
உருவளர் பூர்வ பக்கமா யிசைந்த
ஓதரும் பூரணை திதியில்,
இருளறு சோம வாரமாம் தேதி
இரும்பதி ளுறுமாம் விசாகம்,

நலமிகு உடுவாம் இனியநன் னாளில்
நாடரும் திருக்களர் எழுந்து,
பலமிக நல்கும் வீரமா முனிவர்
பழுதிலா வைம்பதாம் ஆண்டு,

வலமிகு யதிகள் கூடிநின் றிலங்கும்
வழுவிலா சநகமாம் விழாவில்,
நிலவியே யெழுந்து இம்மலர் நாளும்
நீள்பெற மணந்ததா மன்றே.

ஓம் தத் – சத் – பரப் பிரம்மணே நம.

திருக் கள ராண்டவ ரென்னும் ஸ்ரீலஸ்ரீ வீர சேகர ஞான தேசிகர் திரு வடிகள் வாழ்க.

---

உ

*சிவமயம்.*

தஞ்சா வூர்பால் சாமி மடம்,

*கிருஷ்ணசாமி எழுதியது.*

---

ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமிகளின் வரலாற்றால் அறியப்படுவன :

ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமி யவர்கள், ஸ்ரீஜகத் குரு சங்கராச்சாரிய சுவாமிகள் நிலை நாட்டிய சிருங்கேரி சாரதா பீடத் ததிபதி யாகவிளங்கிய ஜகத் குரு ஸ்ரீ வித்தி யாரணிய சுவாமிகள் சிஷ்யப் பிரசிஷ்யர் மரபில் தோன்றிய ஸ்ரீ முத்து ராம லிங்க ஞான தேசிக சுவாமிகளால் நிலை நாட்டப் பெற்ற கோயி லூ ராதீநத்தில் ஐந் தாவது பட் டத்தில் அத்வைத போதக குருபர ராக எழுந்தருளியிருந்த பெரியா ராவார்கள்.

இவர்கள் உலக உபகார மாக எத் தொழிலி லீடுபடி னும், தம் மாணவர்கட்கு அத்வைத போதநம் செய்வதில் ஒரு நாளும் தவறுவ தில்லை.

துற வற நிலைக் கேற்ப உலக நாயகி யாகிய திரு நெல்லை யம்மையைக் கூட, ஏன் அம்மைக் குரிய ஆடையைக் கூடச் சிறப் பாக நோக்குவ தில்லை. திரு வடி தெரிச நத்தோ டமைவார்கள்.

"உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்" என்பதற் கேற்ப உணவின் சுருக்கமும், நான்கு முழ உடையும், என்றுங் கொண்டவர்க ளாக விளங்கினார்கள்.

தங்கள் மாணவர்களைக் கல்வியிற் சிறக்கச் செய்வதுடன் இறை பணி நிறுத்தல், துறவு நிலையில் கைதவறாது நிலைக்கச் செய்தல், உடல் நோய்களை மருத்துவராற் போக்குதல், அள வான உண்டி கொடுத்தல், முதலியன செய்து, ஆமை மீன் பறவை போலப் பக்குவத்திற்குத் தக்க வாறு காத்துத் தத்துவ ஞாநிக ளாகச் செய்தருளினார்கள்.

தம் மாணவர்கள் ஒழுக்க நிலையில் தவறுவா ரெனக் குறிப்பினா லறியப்பட்டவரை உடனே திருக் கூட்டத்தினின்றும் நீக்கிவிடுவார்கள். மற்றைய மாணவர்கள் தவறாது நிலைபெறுதற்காக.

நீளத் தங்கள் குரு நிலையம் இப்படியே நிகழ வேண்டுமென்னு மெண்ணத்தால், தவ வலிமை கொண்டு பொருளீட்டி மடாலயத்தைச் சீர் பெறத் திருத்தியும், புதுக்கியும், விளக்கியும், கூட்டியும், அமைத்தார்கள். உணவு மலிவதற்காக நன் செய் புன் செய் நிலங்களை வாங்கினார்கள்.

இறை வழிபாட்டினை லன்றி எவையுங் கைகூடாது என அறிவிக்கக் கோவி லூரில் கொற்ற வாளீசர் திரு நெல்லை யம்மன் திருக் கோயிலைக் கண்டவர் வியக்க எண் டிசையும் போற்ற இயற்றினார்கள்.

"உள்ளத் திருந்து மொளித்தான் பரன் குரவன், கள்ளந் தனைத் தவிர்த்துக் காட்டினன்" என்றபடி இறை வழிபாடு செய்யக் காட்டி, குரு வழிபாடு செய்தலே மிகச் சிறந்த தென மக்கட்குக் காட்டியருள எண்ணிச், சிருங் கேரி சகத் குரு நரசிம்ம பாரதி சுவாமிகளை வர வழைத்து அப்பர் சுவாமிகள் திரு ஞான சம்பந்தப் பெருமானார் சிவிகையைச் சுமந்தது போல, அடியவர்களோடு தாமும் சகத் குருவின் பல்லக்கைச் சுமந்து கொணர்ந்து, வழிபா டியற்றி, அவர்கள் மந முவந்து ஆசீர்வாத பஞ்ச ரத்திநம் செய்து ஆசீர்வதிக்கத் திகழ்ந்தார்கள்.

தங்கள் கோயி லூர் மரபிற்கு இஷ்ட தெய்வ மாகிய தில்லை ஸ்ரீ நட ராஜப் பெருமானுக்கு நெய் விளக்கு முதலிய பணிகள் நாளும் நடக்க வேண்டியதற்குத் தக்க ஏற்பாடு செய்ததோடு, அந் நட ராஜப் பெருமான் கோயில் பூசகர் முதலியவர்கட்குச் சம்பாச் சாதமும், கொஸ்தும், தவருது உதவி வர அமைத்தார்கள்.

நாட்டுக் கோட்டை நகர தந வணிக மக்களைக் கொண்டு, பல சிவாலயத் திருப் பணிகள், நந்த வநங்கள், வேத பாட சாலைகள், தேவாரப் பாடசாலைகள், அந்ந சத்திரங்கள், பசு மடங்கள், தண்ணீர்ப் பந்தல்கள், அமையச் செய்தார்கள்.

முடிவில், திருக் களரில் சில அன்பர்கள் வேண்டு கோளால், பாரி ஜாத வநேசுரர்க்கும், அமிர்த வல்லி அம் பாளுக்கும், திருக் கோயில் அமைத்து, ஐந்து தேர்கள் அமைத்துத், தேர்த் திரு விழாவில் நட ராஜர் சந்நிதியில் துர்வாசர்க்குப் பின் புற மாக, தெற்கு வீதியில் தேரின் முன் இறைவனை வந்தித்துச் சிந்தித்துப் புகழ்ந்து விதேக முக்தி யடைந்தார்கள்.

இவர்கள் வர லாற்றினால், துறவிகள் இவ் வாறு இருத்தல் வேண்டும், மடாதிபதிகள் இவ் வாறு தான் இருத்தல் வேண்டும், துறவிகள் உலக உபகாரம் செய்வது என்றது இறை வழிபாடு, குரு வழிபாடு செய்யத் தூண்டுவதுந், தத்துவ ஞானத்தை யடைய வழி காட்டு வதுமே யாகும், வே றில்லை. என்பன முதலியவற்றை யறிகின்றனம். அறிந்தவர்கள், துறவிக ளாக இருந்தால், அவர்கள் கொண்ட கொள்கைகள் எல்லாம் கோடலே சிறப்புடைத் தாகும். இல் லறத்தார்க ளாக இருந்தால், இறை வழிபாடு செய்தல், குரு வழிபாடு செய்தல், முதலியவற்றை மேற்கோடல் சிறப் புடைத் தாகும்.

"கற்கக் கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற் குத் தக." என்பது பொய்யா மொழி.

---

(24-வது பாராட் டுரை, சென்னை, வித்தியாநந்தகிரி சுவாமிகள் இன்னும் அநுப்ப வில்லை.)

---

மதுரை, கவி ராஜ பண்டிதர், ஜெக வீர பாண்டியனார் இயற்றியது.

பூவிலூர் உயிர்கள் புத்துணர் வடைந்து
புனிதநன் னிலையினைப் பொருந்தக்,
கோவிலூர் ஞாந மடாலய மதனில்
குருபரன் ஆகிவீற் றிருந்து,
தாவிலூர் சாரும் தத்துவப் பொருளைச்
சார்ந்தவர் யாவர்க்கும் அருளிச்,
சேவிலூர் ஒளியை மேவிய வீர
சேகர ஒளியைநேர் தொழுவாம். 1

பாலரு வாயர் துணை.

1. "தரும புர ஆதீந வித்துவான், 2. திரு வண்ணா மலை ஆதீந விரி வுரை யரசு, 3. மதுரை ஆதீநச் சித்தாந்த சைவ வித்தகர், 4. சித்தாந்தப் புலவர் மாமணி, 5. பால கவி

தேவ கோட்டை, வயி நாக ராம. வே. இராம நாதன் செட்டியார்'' எழுதியது.

## திருக் களர் ஆண்டவர் புகழ்ப் பா மாலை

(எழு கவி ரத்நம்)

---

மருக்கிளரும் பொழிற்சோலை புடைசூழும்
புதுவயலில் வாழ்வால் ஓங்கித்,
திருக்கிளரும் தநவணிக மரபிலரு
ணசலப்பேர் திகழ வாழ்ந்த,
உருக்கிளரும் தவத்தோனும் உமையம்மை
யும்செய்தவத் துற்று மேலாம்.
திருக்களராண் டவரெனப்பேர் திகழ்முனிவர்
புகழ்நாளும் சிறந்து வாழி. 1

கலிநாலொன் பதுநாலொன் பதுசிம்மம்
ஈராறில் காணும் வெள்ளி,
பொலிபுனர்பூ சம்சித்த யோகத்தில்
ஓரைகனி பொருந்தி நிற்க,
வலிவுடனே கோள்களெலாம் வாய்ந்திருந்த
வேளையினில் வந்து தோன்றும்,
மலியருளார் திருக்களராண் டவர்புகழும்
மாநிலத்தில் வளர்ந்து வாழி. 2

வீரசே கரனென்னப் பெற்றோர்கள்
சூட்டியபேர் விளங்க என்றும்,
வீரமே பொலியவருட் பணிகள்பல
செய்துயர்ந்து வீறு சாரச்,
சாரமே மிகுந்ததமிழ்ச் சாத்திரங்கள்
நனிபயின்று தரணி வாழ்வு,
பாரமே யெனத்துறந்த திருக்களராண்
டவர்புகழ்ப் பாரில் வாழி. 3

கோயிலூர்த் திருமடத்தின் அதிபதியாய்
வீற்றிருந்து குறைவி லாத,
ஞாயிறென ஒளிவீசி வேங்கடா
சலசாமி நல்லோர் ஏத்த,
மேயவொரு வெள்ளியங் கிரிச்சாமி
சுப்பய்ய மேலாம் சாமி,
தூயகுரு வாயமர்ந்த திருக்களராண்
டவர்புகழே துலங்கி வாழி 4

நல்லண்ணா மலைஞான தேசிகரும்
மெய்யப்ப ஞானக் கோவும்,
சொல்லுநா ராயணப்பேர்த் துறவியும்தென்
சொல்வடசொல் துலங்கும் நூல்கள்,
வல்லவா ரேுதியுயர் காசிகா
நந்தரும்தம் வாழ்வை நல்க,
நல்லகுரு வெனக்கொண்ட திருக்களராண்
டவர்புகழிந் நாட்டில் வாழி. 5

கொற்றவா ளீசருடன் திருநெல்லை
மனங்குளிரக் கோயி லூரில்,
வெற்றிபெறும் திருக்கோயில் திருப்பணியை
நிறைவேற்றி மேன்மை சாரப்,
புற்றரவக் கச்சார்த்த புநிதனு
கமநெறியில் பொற்பார் சாந்தி,
முற்றமுடித் தின்புற்ற திருக்களராண்
டவர்புகழே முழுதும் வாழி. 6

அமுதவல்லி யெனும்பெயரோ டும்மையுறை
கின்றதலம் அவனி மாந்தர்க்,
கமிதமென அருள்பெருக்க அணிபாரி
சாதவனத் தண்ண லார்சேர்,
குமுதமலர்த் தடம்பணைசூழ் திருக்களரில்
கோயில்செய்து குடமு ழுக்கும்,
அமரவிழா வுங்கண்ட திருக்களராண்
டவர்புகழிங் கார்ந்து வாழி. 7

தேவ கோட்டை,
க. முரு. கரு. ராம. சோம. இராம நாதன் செட்டியார்
எழுதியது.

## ஸ்ரீலஸ்ரீ திருக் களர் ஆண்டவர் பாராட்டுக் கவிகள்.

---

1 எண்ணருந் தருமப் பயிரினை வளர்த்தே
யிசைமிகு மெந்தந வணிகர்,
நண்ணுநன் நகர்கள் பலப்பல வதனுள்
நவிலுயர் வளமிக நிறைந்து,
மண்ணுல கோரை யினிப்பிற வாத
மாணெறி யுய்த்திட வமைந்த,
புண்ணியப் பதியா மிதுவெனப் புகலப்
பொலிந்திடும் புதுவயல் தனிலே.

2 மன்னுமெங் குலத்தி லுதித்துமெஞ் ஞாந
வழியினி லுய்யவுள் ளெண்ணிப்,
பன்னக மணியுங் கொற்றவா ளீசர்
பகர்திரு நெல்லையாந் தேவி,
தன்னுட னருளுங் கோயிலூ ரான
சமிவாந மடைந்தவ ணழகாய்த்,
துன்னுவே தாந்த மடந்தனைச் சார்ந்து
துயரற வாழுமெய்க் குருவாம்.

3 எந்திருத் தாதை யானசற் குரவ
னெழிற்கரு ணாநிதி பதத்தில்,
முந்தையூ ழியப் பணிந்தவ னருளால்
முதிர்ந்தமெஞ் ஞாநியென் றிலங்கி,
அந்தமீ றின்றி விளங்குமவ் விறைவ
னலய மணிபெற வமைத்துச்,
சந்ததம் பிரம ஞாநமே புகட்டித்
தகைமிகு திருக்களர் சார்ந்தே.

4 ஆங்குயர் மடமொன் றமைத்துநற் சிட
ராம்புகழ் காசிகா நந்தர்,
பாங்குட னேத்திப் பணியுமெய்க் குருவாய்ப்
பண்புட னிலங்கியப் பதியுள்,
ஓங்குமெஞ் சிவனுந் தேரினிற் பவநி
யுற்றிடும் போழ்தவன் தாளில்,
நீங்குத லின்றிக் கலந்துபே ரின்ப
நிலையினை யடைந்தமா தவனே.

5 மேருவை யடைந்த காகமும் பொன்னும்
விதமெனச் சொல்லுமூ துரைபோற்,
பாருல குஞ்ச மாதியை யொருகாற்
பார்த்திடிற் சச்சிதா நந்தப்,
பேருரு வாகத் திகழ்வர்க ளென்ற
பெற்றியை யோர்ந்தன னுள்வாய்,
சீருயர் வளங்கொள் திருக்களர் வீர
சேகர ஞானதே சிகனே.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

---

மதுரை மீனாக்ஷி மில்

## கரு, முத்து. தியாக ராஜன் செட்டியார் எழுதியது.

### திருக் களர் ஆண்டவன்.

(திருக் களர் இறைவனே திருக் களர் ஆண்டவன் என்பது)

எந் நாட்டவர்க்கும் இறைவ னாகிய ஆண்டவனைத் தென் னாட்டவர் சிவன் என்பர். இது பற்றியே மணி வாசகனாரும், "தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி" என்றார். சிவனை வழி படற்கு அமைந்த கோயில்கள், தமிழ் நாட்டில், பெரும்

பாலும் ஊர் தோறும் உண்டு. திருக்கோயில் இல்லாத ஊர்களைத், "திருவில் ஊர்" என்பர் திருநாவுக்கரசர்.

திருநாவுக்கரசரும், ஞான சம்பந்தரும், வாழ்ந்த காலத்தில், சிவன் கோயில்கள், பெருங் கோயில், இளங் கோயில், ஞாழற் கோயில், கொகுடிக் கோயில், கரக் கோயில், மணிக் கோயில், ஆலக் கோயில், எனப் பல வகையாக இருந்தன. அவற்றுள், பெருங் கோயில்கள் மாத்திரம் எழுபத்தெட்டு ஊர்களில் இருந்திருக்கின்றன. அதனை நாவரசர்,

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ டெட்டு"
(அடைவு. தாண். 5)

என்றும், இக் கோயில்களைச், "சூழ்ந்து தாழ்ந்து இறைஞ்சத் தீவினைகள் தீரும்" என்றும் கூறுகின்றார்,

தீவினை நீக்கும் சிறப்புடைய கோயில் அமைந்த ஊர்களுள். திருக்களரும் ஒன்று. இது சோழ நாட்டுச் சிவன் கோயில்களில் ஒன்று என்றும், இங்குள்ள சிவனைக் களர் முளை நாதர் என்றும், கூறுவர்.

இதனைக், களர் என்று சொல்வதை நினைக்கும் போது, உப்பு விளையும் நிலப் பாங்கில் இருப்பது இவ் வூர் என்ற நினைவே, நம் மனத்தில் எழுகிறது. ஆனால், நெடுங் காலத்துக்கு முன்னமேயே இவ் வூர், பொருள் வளமும், அருள் நலமும், சிறந் திருப்பது கண்ட தமிழ் முன்னோர், இதனைத், திருக்களர் என்று வழங்கினர். சுமார் ஆயிரத்து முந் நூறு ஆண்டுகட்கு முன்னர், ஞான சம்பந்தர் இவ் வூர்க்கு வந்த போது, இது திருக் களர் என்றே பெயர் கூறப்பட்டது. அதனால், அவர் திருக் களர் இறைவனைப் பாடிய பதிகத்தில், பாட்டுத் தோறும், 'களர்' என்று சொல்லாமல் 'திருக் களர்' என்றே குறித்துப் பாடியுள்ளார். எனவே,

பொருளும், அருளு மாகிய இரு வகைச் செல்வங்களும் படைத்த தக்கார் வாழும் ஊர் என்பது தோன்றத், 'திருக் களர்' எனப்படுகிறது என்று அறிகின்றோம். களர் நிலத்தில் உப்புவிளைவது போல. இத் திருக் களரில் ஞானமும், செல்வமும், விளைகின்றன. என்பது கருத்து.

திரு ஞான சம்பந்தர், திருக் களருக்கு வருகின்றார், முதலில் அவர்க்கு ஆவ் வூரின் இயற்கை வளம் அழகிய காட்சி தருகின்றது. "உளங்குளிர்ந்த போதெலாம் உகந்து உகந்துரைப்பனே." (பதிக. 234) என்பவராதலால்,

"கொங்கு லாம்மலர்ச் சோலைவண்டினம் கிண்டி மா
[மது உண்டு இசைசெயத்,
தெங்கு பைங்கமுகம் புடைசூழ்ந்த திருக்களர்." 5

என்றும்,

கோலமாமயில் ஆலக் கொண்டல்கள்சேர் பொழில்
[குலவும் வயரிடைச்,
சேல் இளங்கயலார் புனல்சூழ்ந்த திருக்களர்." 6

என்றும் பாடுகிறார்.

பின்பு அவர், திருக் களர் ஊர்க்குள் நுழைந்து பார்க்கின்றார். வீதியின் இருமருங்கிலும் மிக வுயர்ந்த மாடங்களும், மாளிகைகளும், நிற்கின்றன. அவருடைய உள்ளம் பூரிக்கின்றது. உடனே அவர், திருவாயி லிருந்து,

"குன்ற டுத்தநன் மாளிகைக் கொடிமாடம் நீடு
[யர் கோபுரங்கள்,
சென்ற டுத்துயர் வான்மதி தோயும் திருக்களர்," 8

என்ற பாட்டு இனிய இசையுடன் வருகிறது. செல்வ மனைகளில், மகளிர், இறைவன் புகழை யாழில்

இட்டுப் பாடுவதும், பாடற் பொருளுக் கேற்ப ஆடுவதும், செய்கின்றனர். செல்வர்க ளாகிய ஆண்மக்கள், சிவனைப் பாடும் திருப் பணியும், பிறவும், செய்கின்றனர். அவர்களைப்,

"பாக்கியம் பலசெய்த பத்தர்கள்," என்றும், 10

"பாட்டொடும் பல பணிகள் பேணிய குணத்தார்,"10

என்றும், பாராட்டுகின்றார். நீர் நிறைந்த குளங்களும், அவற்றைச் சூழ்ந்த பொழில்களும், நீண்ட வயல்களும், ஊர் புறத்தே விளங்க, மதில் வளைத்த ஊர்த் தெருக்களில் திருமணம் முதலிய விழாக்கள் வேறு அழகாக நடைபெறுகின்றன.

அது கண்டு,

"நீருளார் கயல்வாவி சூழ்பொழில் நீண்ட மாவயல்
[ஈண்டு மாமதில்,
தேரினார் மறுகில் விழாமல்கு திருக்களர்," 1

என்று பாடுகின்றார்.

வளம் பொருந்திய இடங்களில், பெருஞ் செல்வர்களும், சேர இருப்பர். செல்வத்துக்குக் காரணம் முன்னைத் தவம். "தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்" என்பர் சான்றோர். அத் தவமே, சிவ ஞானத்துக்கும் ஏதுவாதலால், தவமுடையோர்க்கும் இத் திருக் களர் இடமாகிறது. திரு நீறு அணிந்து சிவ பெருமான் திருவடிகளைப் பாடி வழிபடுவது தவ நெறிகளில் சிறந்த ஒன்றாகும்.

அதனுல்,

"தோளின் மேல் ஒளி நீறு தாங்கிய தொண்டர்
[வந்து அடிபோற்றி மிண்டிய.
தாளினுர் வளரும் தவம் மல்கு திருக்களர்." 2

என்று தாமே வியந் துரைக்கின்ருர். செல்வர்களின் சிவப் பணியைக் கண்டு,

"பாடவல்ல நன்மைந்த ரோடுபணிமலர் பலகொண்டு
[போற்றிசெய்,
சேடர்வாழ் பொழில் செழுமாடத் திருக்களர்". 3

என்று பாராட்டுகின்ருர் சேடர்-பெரியோர்.

இவ்வாறு இயற்கை வளமும், செல்வர் வாழ்வும், ஞானச் சிறப்பும், பொருந்திய திருக் களரில், கோயில் கொண்டிருக்கும் சிவ பெருமானைக் காண்கின்ருர். ஊரவர் இடும் பிச்சை பேணுபவ ஞகவும், (1) மாரனைப் போன்ற விசயனுக்கு அருள்புரி வித்தகஞகவும், (2) வானவர் வணங்க அம்பலத்தில் ஆட வல்லா ஞகவும், (3) அடி போற்றி நிற்பவர்க்கு அன்பு செய்பவ ஞகவும், (4) தோன்றுகின்ருன். "மனமுலாம் அடியார்க்கு அருள் புரிகின்ற வகையலால் பலிதிரிந்து உண் பிலான்" (இலம் பையங் கோட்டூர், பதிக. (6) என்று ஞான சம்பந்தரே கூறுவதால், பிச்சை பேணுவது அடி பரவும் அன்பர்க்கு அருள்பண்ணுவதே யாகும். வில் லேந்தும் விசயனுக்கு, அருள் புரியும் வித்தக மாவது, அவன் மேற் கொண்ட தொழில் வெற்றி தரு மாறு செய்வது; அதனை யுரைப்பது, மக்கள் மேற்கொண்ட தொழிலில் வெற்றி பெறுதற் கேற்ற அறிவும், கருவியும், அருளுவது. அம்பலத்து ஆடுவது,

உயிர்களைச் சூழ்ந்துள்ள அறியாமையைச் செய்யும், மல மாயை கன்மங்களைப் போக்குவது என்று பெரியோர் கூறுவர்.

"மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டு மலம்,
சாய அமுக்கிஅருள் தான்எடுத்து — நேயத்தால்,
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தல்,
தான்எந்தை யார்பதம் தான்" (உண். விளக். 36)

என்று திரு வதிகை மன வாசகம் கடந்தார் கூறுவதாலும், இதனை யறிய லாம்.

இவ் வண்ணம், திருக் களரில் சிவனைக் கண்டு பரவிய ஞான சம்பந்தர், அப் பெருமானை முன்னிலைப் படுத்தி, நீல கண்டனே, அன்று ஆல நிழற் கீழிருந்து உன்னை அடைந் தார்க்கு அறம் கூறியது போல, உன் திரு முன்பு அடைந்த வர்க்கு அருள் புரிந்து ஆட்கொள்ள வேண்டும்" என்று விண்ணப்பம் செய்து,

"திருக் களருள், நீலம் மேனிய கண்டனே நிமிர்புன்
[சடைப் பெருமான் எனப்பொலி,
ஆல நீழ லுளாய் அடைந்தார்க்கு அருள்வாயே." 6

என்று கேட்கின்றார். தமது வண்மையில் சிறுமை அறியாது, கொடுமை செய்த அசுரர்களின் திண்மையைக் கெடுத்தவ ராதலால், எம்மைச் சிறுமைப்படுத்தும், 'அறி யாமையைக் கெடுத்து ஆறுதல் வேண்டும்' என்ற கருத்துப்பட,

"தம்பலம் அறியாதவர் மதில் தாங்கும் மால்வரையால்
[அழலெழத்
தின்பலம் கெடுத்தாய் திகழ்கின்ற திருக்களருள்,

வம்பலர் மலர்தூவி நின்னடி வானவர் தொழக்கூத்து
[கந்துபேர்,
அம்பலத் துறைவாய் அடைந்தார்க்கு அருளாயே'' 7

என்று பாடிப் பரவுகின்றார் இவ்வாறு, ''அடைந்தார்க்கு அருளாய்'' என்று பாட்டுத் தோறும் சொல்லி இறைவன், தன்னை அடைந்தவர்க்கு அருள் செய்து, ஆண்டவனுதலை, ஞான சம்பந்தர் விளக்குவதால், திருக் களர் இறைவனே, 'ஆண்டவன்' என்பது தெளிந்து நமது உள்ளம் இன்பம் எய்துகிறது.

ஆண்டவர் திருவடி வாழ்க.

---

உ
சிவ மயம்
குமர வேள் துணை.

திட்டை, பலவான் குடி, ராம. கு. ராம.
ராம சாமி செட்டியார் எழுதியது.

திருக் களர் ஆண்டவரின் ஐம் பதாவது ஆண்டுக்,
குரு பூசை விழா.

---

1. திருக் களராண்டவ ரென்னும் சுவாமிகள் புது வயலில் நகர வணிக மரபில் பிறந்து இளமையிலேயே கோவிலூர் மடாலயத்திற்கு வந்து சந்நியாசம் பெற்று ஆண்டவர் என வழங்கும் உயர் திரு முத்தி ராமலிங்கேச தேசிக சுவாமிகளின் வரிசையில் 5-வது பட்டத்தில் இருந்த வீர சேகர ஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள்

ஆவர். சுகப்ரம மாக விளங்கினவர். கனவிலும் மாதரைக் கருதா திருந்தவர்.

2. இந்த மகான் சிவாலயத் திருப் பணி சிறப்புறச் செய்தவர். இப் போது உள்ள வேதாந்த திருமடம் திரு நெல்லை அம்பிகையுடன் கொற்றவாளீசுவரர் திருக் கோயிலை சீரும் சிறப்பு மாகத் திருப் பணி செய்தும், சன்னிதித் திருக் குளமும், பல மற்றும் திருக் குளங்களும், திரு வீதிகளும், வேதாந்த திரு மடாலயங்களும், சீருஞ் சிறப்பு மாகச் செய்தும், அணி யொட்டி மண்டபம், திரு மண மண்டபம், திரு நாள் மண்டபம், ஆதிய மண் டப வரிசைகளும், பொற்புற அமைத்தும், கோயிலூரை திருக் கைலாய மாக விளங்கச் செய்தவர். உலக மக்கள் பலரும் கண்டு களித்து வியந்து பாராட்டி வணங்கி மகிழ்ந்து இன்புறும் வண்ணம் செய்தவர்கள். இவர்கள் காலத்திலேயே சிறப்புறும் என, ஆண்டவர் முத்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிகள், மானசீக மாகக் கற்பகிரக அர்த்த மண்டப மாகமண்டப சோபான மண்டப அலங் கார மண்டப ஆதி மண்டப வரிசைகளும், திருக் குள அமைப்பும், மடாலய வரிசைகளும், தெரு வீதிகளும் செப்பமதாக செய்யப் பெறுமென திட்ட மிட்டிருக்கிறார் கள். அவ்வண்ணமே புரிந்து சிறப்புறச் செய்துள்ளார்கள். வந்து பார்க்கும் மக்கள் எல்லாரும் கண் காட்சி யாகக் கண்டு களிக்கிறார்கள்.

3. இவை மாத்திர மல்ல தேவாரம் பெற்ற திருக்களர் என்னும் சிவாலயத் திருப் பணி செய்து திருக்களர் ஆண்டவர் எனவும் வழங்கப் பெறுகிறார்கள். சீலத் தினாலும், சிவ சிந்தனையாலும், ஞாலத்தாரால் மதிக்கப்

பெறுகின்ற அடிகளார். பொன்னைப் பொருளை தொடு வதோ முடிவதோ வழக்க மில்லை. இந்த நிலைமைல் இவ்வளவு அரும் பெரும் திருப் பணிகள் புரிந் துள்ளமை திரு வருட் பெருக்கே என்னலாம்.

4. சுகப் பிர்மர் என ஒரு முனி புங்கவர் இருந்த செய்தி கேட்கின்றோம். நம் அடிகளாரே நித்தியப் பிரம்மச்சாரியாக அறுபத்து மூன்று ஆண்டுகளுக்குமேல் இருந்து. சிவமாக பழய நிலையை எய்தினார்கள். இவர்களின் ஐம்பதாவது ஆண்டுக் குருபூசை விழாவும், மேல் வரும் ஆண்டு விழாக்களும், சீரும் சிறப்புமாக நடை பெறவும், மக்கள் கண்டு வழிபட்டு இன்புறவும். திருக் களர் ஆண்டவரின் திருவருளையே வேண்டுகின்றேன்.

திருக்களர் ஆண்டவர் பதமலர் வாழ்க.

---



# நடையறுப் பெருந் துறவி.

(அமராவதி புதூர், ராய. சொ. அவர்கள் எழுதியது)

(நவ ரத்நங்கள்)

---

1. இத் தலைப்பு நான்கு சொற்கள் கொண்ட ஒரு தொடர். நடை, அறு, பெரும், துறவி. நடை: ஒழுக்கம், அறு: நீங்காத, பெரும்: பெரிய, துறவி: பற்று விட்டவர். இச் சொல் தொடர், அப்பர் சுவாமிகளைப் பற்றிக் காஞ்சிப் புராணத்தில், மாதவச் சிவ ஞான சுவாமிகளால், பாராட்டிப் போற்றப்படுவது. "நடை அறுப் பெருந் துறவு" என்றால், நடை அற்ற சிறு துறவும் உண்டோ என்ற வினு எழலாம். ஆம்; நடையற்ற சிறு துறவு மலிந்து கிடந்தமை யாலேயே "நடையறுப் பெருந் துறவு" என்று சிவ ஞான யோகிகள் கூறுவா ராயினர். ஒழுக்கம் நீங்கிய சிறு துறவி களே யாண்டும் பெருகி நிற்கக் காண்கிறோம். உள்ளத் துறவு பூண்டார் அரியர். "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல், ஆரும் துறக்கை அரிதரிது." தாயுமானத் துறவியால் பாராட்டப் பெற்ற பட்டினத்துத் துறவி, "இல்லம் துறந்தானில் சத கோடி உள்ளத் துறவுடையோன்" என்று இயம்புவர். காவி ஆடை புனைந்தவர் அனைவரும் உள்ளத் துறவு உடையார் எனச் சொல்லிவிடல் இயலாதது. உள்ளத் துறவு அத் துணை எளி தன்று. உள்ளத் துறவு கொண்டாரையே உலகம் பழித்தது. ஒழித்தாரையே, நீத்தார் பெருமையில் வைத்துத், "துறந்தார் பெருமை துணைக் கூறின் வையத்து இறந்தாரை எண்ணிக் கொண்டற்று" என் றருளுவர் வள்ளுவப் பெருமான்.

2. நடை அருப் பெருந் துறவி—உள்ளத் துறவி, நம் வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள். சுவாமிகள், செட்டி மார் நாட்டி லுள்ள புது வயல் நகரத்தில், 1848 ஆம் ஆண்டில் தோன்றினார்கள்; கோயி லூர் மடாலயத்தின் தலைமைப் பதவி ஏற்று இரு பத் தேழரை ஆண்டுகள் தலைவ ராக இருந்து அரிய பல காரியங்கள் செய்தார்கள். கோவி லூரைப் பூ லோக கைலாய மாக்கினார்கள். வீரப்ப சுவாமிகள் 1911-இல் திருக் களரில் பரிபூரண மானார்கள். திருக் களர் ஆண்டவர் என்ற சிறப்புப் பெயர் பெற்றார்கள். திருக் களரில் சுவாமிகள் சமாதி கொண்டிருக்கின்ற கோயில் அருமைப்பா டுடையது.

3. வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் அறு பத்து மூன்று ஆண்டுகள் இவ் உலகில் வாழ்ந்தார்கள். அவர்கள் திருக் களர் ஈசன் திரு வடி நிழலை அடைந்து இன்றைக்கு ஐம்பது ஆண்டுகள் ஆகின்றன. அப்போது எனக்கு வயது பதின் மூன்றே. எனவே, அவர்களை நுணுகி அறியும் பருவம் இல்லை யாயினும், அந்தச் சிறு வயதிலேயே அவர்கள் சிறப்பை ஓரளவு கண்டிருக்கிறேன்.

4. கோவி லூர்ச் சிவன் கோயிலை அழகுற அமைத்த பெருமை வீர சேகர ஞாந தேசிகர்க்கே உரியது. கோயி லூர்க் கும்பாபிஷேகம், அந்த நாளில் பெருஞ் சிறப்புடன் சுவாமிகளால் நடத்தப் பெற்றது. எனக்கு இன்னும் நினை விருக்கிறது. அந்த நாளில் இப் பகுதியில் மோட்டார் வசதி கிடையாது. காரைக் குடிக்கும் கோயி லூருக்கும் இடையில் வண்டிப் போக்கு வர வெல்லாம் நிறுத்தப் பெற்று, குட முழக்கு விழாவில், காரைக் குடிக்கும், கோவி லூருக்கும், இடையி லுள்ள பாதைகள் வயல்கள் முழுதும் ஒரே மக்கட் கா டாக இருந்தது.

5. கோவிலூர் வெறும் நிலப் பரப்பை ஞான வெளிப் பரப் பாகச் செய்த பெரியார், அதன் முதற் குரவர் முத்து ராம லிங்க ஞான தேசிக சுவாமிகள். கோவிலூர் ஆண்டவர் என்று போற்றப் பெறும் அவர்கள், இற்றைக்கு நூற்று நாற்பது ஆண்டுகட்கு முன் கோயிலூர் மடத்தை தோற்றுவித்தார்கள். முத்து ராம லிங்க சுவாமிகளைப் பற்றி ஓர் அடியார் பாடிய பின் வரும் பாடல் அவர்கள் செய்த சீரிய பணிகளை விளக்கும்.

“ மடம்உண்டோ? சிவாலயந்தான்
மிகுதி உண்டோ?
வாசிட்டம் படிப்பதுண்டோ?
மனத்துள் ஞானத்
திடம்உண்டோ? நால்வர்தமிழ்ப்
படிப்பார் உண்டோ?
திவ்வியமாம் உதாரமுதற்
குணங்கள் உண்டோ ?
விடம்உண்டோன் அடியர்குழாம்
மிகுந்தது உண்டோ ?
மெய்யறம்சத் திறம்விரைப்பூங்
காவும் உண்டோ ?
வடகயிலைக்கு இறைவன்எனும்
முத்து ராம
வள்ளல்திருக் கழனிநகர்
வாரா முன்னம்.”

(கழனி நகர் : கோவிலூர்.)

6. கோவிலூர் இத்துணைச் சிறப்பும் பெற்றது முத்து ராம லிங்க ஞான தேசிகர் அவர்களால் என்றாலும், அது, எல்லை யற்ற வளர்ச்சி யுற்று, அறிவொடு அழகும்,

தாண்டவம் ஆடப் பொலிவுற்றது. வீர சேகர ஞான தேசிகர் அவர்களாலேயே யாகும்.

7. வீர சேகர ஞான தேசிக சுவாமிகள், கடுந் துறவி மட்டு மல்ல; சிறந்த சிற்பி. துறவை ஒரு கண்ணுகவும், கலையை மற் ருெரு கண்ணுகவும் கொண்டு வாழ்ந்த அரும் பாடு உடையவர்கள். மடாயலத்துக்கு அழகிய கட்டிடங்கள் பல எழுப்பினர்கள். பல் லாயிரம் பேர் அமரத் தக்க பிரமாண்டமான கைலாசக் கொட்டகை என்று சொல்லப் பெறும் உயர்ந்த மண்டபம் ஒன்றைக் கட்டினர் கள். மடாலயத்தின் முகப்பு மன்னர்களின் அரண்மனையைப் போலவே தோற்றம் அளிக்கும். தேரோடும் வீதிகளில் உள்ள காலி இடங்கட்குக் கூட, கைப்பிடி சுவர் எழி லுற ஓரே படித்தாக எடுத்த கலைஞர் வீர சேகர சுவாமிகள்,

8. வீரப்ப சுவாமிகள் காலத்தில் கோவி லூர் ஆடிப் பூரத் திரு விழா என்று சொன்னல், காரைக் குடியே திரண்டு சென்று விடும்; ஏனைய ஊர்களி லிருந்தும் ஏராள மான கூட்டம் வரும். அங்கு திரு விழா நடக்கும் அழகே தனி. சுவாமிகள், இறைவி திரு உலாவின் போது, முன்னே நடந்து சென்று கொண்டிருப்பார்கள்; ஏதாவது ஆக வேண்டும் என்ருல், திரும்பி ஒரு பார்வை பார்ப்பார்கள்; உடனே கூட்டத்தில் பெரிய அதிர்ச்சி. அவர்கள் உள்ளக் குறிப்பின்படி யாவும் நடக்கும்.

" நீறு மணக்கும் நெற்றியெலாம்,
நெய்யே மணக்கும் கறிகள் எலாம்,
சோறு மணக்கும் மடங்கள் எலாம்,"

என்று மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள், சேக் கிழார் பிள்ளைத் தமிழில் பாடினார்கள். சுவாமிகள் ஆட்சி நாளில், கோவிலூர் மடத்தில் இவைகள் எல்லாம் மணந்தன.

9. சுவாமிகட்கு "வாக்குப் பலிக்கும்" என்று அந்த நாளில் பலரும் அஞ்சுவர். பிறர் குற்றம் கண்டுழிக் கடிந்து கூறுதல் உண்மையாமாஞல் அவர்களையே, "நிறை மொழி மாந்தர்" என்று சொல்வர் அறிஞர். நிர்வாகத் திறனும், சிறந்த ஆற்றலும், தவ வேடமும், அதற் குரிய சீலமும், ஒருங்கே வாய்த்த மேதகை ஞாநி—திருக் களர் ஆண்டவர் நடையுருப் பெருந் துறவி, உடம்பை உதறிய ஐம்ப தாவது ஆண்டின் நினை வாக இது மலர்கின்றது. வீர சேகர ஞாந தேசுக சுவாமிகளின் சீரிய ஒழுக்கம் உல கெலாம் நிறைந்து ஓங்குக!

---

## வாழி திருக் களர் ஆண்டவர்

**காரைக் குடி சா. கணேசன் அவர்கள் எழுதியது.**

(அறு வகை)

---

1. கோவி லூர் என்பது வனப்பு மிக்க ஒரு சிற் றூர். கட்டிடக் கலையில் துறை போகியவர்கள் எல்லாம் கண்டு மகிழ்ந்து வியந்து பாராட்டும் மேம்பாடு, நோக்குமிட மெல்லாம் நீக்கமற நிறைந்திருக்கும். அழகும், சிற்பச் செறிவும், நிறைந்த திருக் கோயில்; கண்கவர் மைய மண்டபத்துடன் கூடிய, பேரழகு பிலிற்றும், திருக் குளம்; நேர்மையும், செம்மையும், கூடிய மாட வீதிகள்; கட்டிடப் பொலிவின்

ஒருமைப்பாட்டை உணர்த்தும் வகையில் நாற் புறமும் அமைக்கப் பெற்ற கட்டடங்கள், அல்லது, சுவர்கள்; பற் றகன்ற பண்பினர் தங்கி, ஓதி, அவ னருள் நாடி, அமைதியுள் ஆழ்ந்து நற் றவம் புரி நன் மடம்; இன்னும் எத்தனை எத்தனையோ? இவை எல்லாம் சேர்ந்தது தான் கோவி லூர்.

2. கோவி லூர் ஆண்டவர் எனப் புகழ் பூத்த திருப்-பெருந்-திரு முத்தி ராம லிங்க ஞாந தேசிக பரமாசாரிய சுவாமிகளால் நிலை நாட்டப்பெற்ற இந்த ஆதீமும், இதன் வளங்களும், பயனும், பெருகிப் பொலியப் பெருங் காரண மாக இருந்தவர்கள், திருக் களர் ஆண்டவர் எனப் புகழ் மணக்கும் திருப்-பெருந்-திரு வீர சேகர ஞாந தேசிக பரமாசாரிய சுவாமிகளே என்பதை எவரே அறியார் ?

3. வேதம், உபநிடதம் முதலான வைதீக சமய நூல் களை எல்லாம் சிக்கறத் தெளிந்து, அத்துவித உண்மைகளை அற்புத மாக உணர்த்தும் வேதாந்த சாத்திரங்களில் எல்லாம் மேதா விலாசம் பெற்று, தேவாராதி தோத்திரப் பனுவல் களில் தோய்ந்து, அன்பும், அறிவும் செறிந்து குளிர்ச்சி மிக்க ஒளி யான தண் கதிர் பரப்பிய ஞாநபாநுவாகத் திகழ்ந்த வர்கள் திருக் களர் ஆண்டவர் அவர்கள்.

4 தத்துவ, சாத்திர, தோத்திரக் கடலில் மட்டு மின்றி, பயிர்க் கலை, தொழிற் கலை, கட்டிடக் கலை, சிற்பக் கலை, முதலான பிற பல கலைகளில் எல்லாம் தோய்ந்து, முக்கு ளித்து, முத் தெடுக்கும் பே ராற்றல் பெற்றுப் பல் கலைச் செம்ம லாக ஒளிர்ந்த பெருமை திருக் களர் ஆண்டவர் களுக்கே உரியது. அந்த அறிவின் விளக்கமே கோவி லூரின் அமைப்பு.

5. திருக் களர் ஆண்டவர் என்று சீர் சிறந்த பேர் படைத்த அந்த அருட் சோதிப் பெரும் பிழம்பினின்றும், தோன்றிய மெய் யறிவுச் செல்வர்கள் பலர். அவர்களுள், இன்று நம் மிடையில் நின்று ஒளி பரப்புகின்றவர்கள், நூல் நூறு தந்த நுண்மாண் நுழை புலச் செல்வ ராகிய திருப் பூவணத் திரு மடத்துக் காசிகாநந்த ஞானசாரிய சுவாமிகள். அவர்களின் குரு பக்தியாலேயே இம் மலர் இன்று பூக்கிறது.

6. சோதியாய், சுடராய், சூழ் ஒளி ஞானச் சுடர் விளக் காய் நின்று நானிலத்தின் இரு ளகற்றிய பின்னர், அகண்டத் தில் ஒன்றிவிட்ட திருக் களர் ஆண்டவர் அவர்களின் ஐம் பதாவது குரு பூஜைப் பெருவிழாவிலே அந்தத் திரு ஞானப் பெருமகனின் திரு வடி மலர்களிலே முடி சாய்த்து, மன மாரத், துதித்து, வாய் மணக்க ஏத்தித் தொழுகின்ற நல் லடியார் திருக் கூட்டத்தில் சிறியேனும் ஒருவ னகச் சேர்ந்து கொள்ளுகிறேன்.

பேர்ஒப்பார் சில்லோர்; பிறந்து வளர்ந்திட்ட,
ஊர்ஒப்பார் பல்லோர் உளராவர்;—சீரப்பும்,
வீரப்ப ஞானியைப்போல் மெய்த்துறவோர் யாவருளர்,
நேர்ஒப்பார்? சற்றே நினை.

எண்ணில் மனம்இனிக்கும்; ஏத்திடிலோ வாய்இனிக்கு;
நண்ணி அருகுஅணைந்து நாம்காணில்—கண்இனிக்கும்;
சேர்ஒப்புஒன்று இல்லாத் திருக்களர் ஆண்டவராம்;
வீரப்ப சாமிகளின் மெய்.

இத்தரையில் தோன்றி எழிற்கோவி லூார்படைத்த,
முத்திராம லிங்க முழுஞான அத்துவிதச்

செம்மல்அருள் பெற்ற, திருக்களர் ஆண்டவர்தம்
மொய்ம்மலர்த்தாள் வைப்போம் முடி.

வாழிதிரு நான்மறை; வாழி உபநிடதம்,
வாழிகலைக் கோவிலூர் வண்மரபு;—வாழியரோ,
ஐயன் திருக்களர் ஆண்டவராய் ஓங்கிவளர்,
மெய்யன் திருநாம மே!

•••○○○•••

கல்லல் ஆ. மு. ஆ. முரு. முருகப்ப செட்டியார் எழுதியது.

(15 - மணிகள்)

# வீர சேகர முனிவர்.

---

1. உலகத்தில் மக்க ளாகப் பிறந்தவர்கள் மட்டுமல்லர்: உடம்போடு கூடிய எல்லாச் சீவர்களும், ஒருவரை மற் றொருவர், ஒன்றை மற் றொன் று வெல்லும் வீர முடையவர்க ளாக, வீர முடையன வாகக் காணப்படுகின் றனர்—காணப்படுகின் றன.

2. வெல்லு மாற்ற லுடையவரை, அவ் வாற்ற லுடைய மற்றைய பொருள்களை வீர முடையவர், வீர முடையவை என் று மொழிகின் றனர்.

3. வீர முடையன எனக் கருதப்படும் பொருள்களை யும், வீர மின் றியன எனக் கருதப்படும் பொருள்களையும், சேர வெல்லும் ஆற்ற லுடையன வாக விளங்குவன ஐம் புலங்களே யாகும் என்ப தைய மற்ற தொன்றாகும்.

4. பெரும் பான்மை யாக நோக்கினல், அவ் வைம் புலங்களையும் வென்றவர் எவரு மிலர். வென்றவை எவையு மில்லை என்றே கூறல் நேரும். நுணுகி நோக்கினல், "ஐவரை யறுவ ராக்கிய முனிவர்" என்று புகழும்படி ஐம் புலங்களையும் வென்ற முனிபுங்கவர்கள் நம் நாட்டில் என்று மிளிர்கின்றார்கள் என்பதை யறியலாம்.

5. ஆனல், ஐம் புலங்களையும் வெல்லுதல் எளி தன்று. அஃ தெளி தன்று என்பது விளங்கவே சான்றோர்கள் இறை வனைப் புகழ வரு மிடத்து, "வேண்டுதல் வேண்டாமை யிலான்", "பொறி வாயி லைந் தவித்தான்" எனக் கூறி, இறவா வின்ப மெய்துதற்குப் பொறி வாயி லைந் தவித்தல் இன்றியமையாத தொன்றாகு மென்பதையும் புலப்பட வைத்தனர்.

6. நம் பாண்டி மண்டலத்தில், சேது வள நாட்டிலே யுள்ள, கோயிலூர் என்னுந் திருத் தலத்திலே, ஸ்ரீ முத்து ராம லிங்க ஞாந தேசிக பரமாச்சாரியர் ஆதீந மிருத்தலை அறியாதா ரொருவரு மில்லை. அத் திரு மடத்திலே ஐம் புலங்களையும் வென்ற வீர முனி புங்கவர்கள், அன்றும் பலர் மிளிர்ந்தனர். இன்றும், பலர் மிளிர்கின்றனர் என்பது கண்கூடு.

7. அத் திருமடத்திலே, ஐந் தாவது பட்டத்து ஞாந தேசிக மூர்த்திக ளாக எழுந்தருளி யிருந்த ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக மூர்த்திகளை நம் நாட்டுக் கோட்டை நகர தந வணிகரும், பிறரும், நன் கறிவர்.

8. அம் மெய்ஞ் ஞாந தேசிகப் பெருமான், ஐம் புலங் களையும் வென்றவர்களுக் குள்ளே தலை சிறந்து விளங்கிய

வர்க ளாவார்கள். இவ் வாறு பின்னர்த் தலை சிறந்து விளங்குவார்கள் என்பதை முன்னரே எவரும் அறியும்படி தெய்வத் திரு வருள் உண் ணின் றுணர்த்த அப் பெருமா னுக்கு இளமையிலேயே, "வீர சேகரன்" என்னுந் திருப் பெயரைச் சூட்டினர் என் றுரைக்கும்படி அவர்கள் முற் றுந் துறந்த நற் றவ ராக விளங்கினார்கள்.

9. அப் பெரியார் நம் நாட்டுக் கோட்டை நகர தன வணிக மரபினில், 'புது வயல்' என்னும் ஊரினில், அருணா சலஞ் செட்டியார், உமையா ளாச்சி என்பவர் தவப் புதல்வ ராகத் தோன்றிய பெருமா னவர் என்பதை யுலகம் அறியும்.

10 அப் பெருமான் தன வணிகர் மரபிலே பிறந்ததற் கேற்ப நம்மைப் போலப் பொருளை யீட்டினார்க ளில்லை. "முனிவரும் மன்னரு முன்னுவ பொன்னால் முடியும்" என்ற படி முற்றத் துறந்த முனிவ ராக இருந்தபடியால், பற் றின்றி யீட்டினார்கள். எங்கே யாரிடத்தில் என்றால், நம் நாட்டி லேயே நம் தன வணிகரிடத்திலேயே யீட்டினார்கள். ஈட்டிக் கோயி லூரிலும், சிதம்பரத்திலும், திருக் களரிலும், ஆல யம், மடம், நந்தவனம், திரு விளக் கேற்றல், பூசகர்க் கன்ன மிடல், அடியவர்கட் கன்ன மிடல் முதலிய அறப் பணிகள் என் றும் நின் று நிலவும்படி செலவிட்டார்கள்.

11. அம் முனிவர் பெருமானால் கோயி லூர் கோயி லூ ராக விளங்கியது. நம் மரபினரும் பல திருக் கோயில்கள் முதலிய திருப் பணிகளைச் செய்து முடித்தனர். பெருஞ் செல்வ ராக மிளிர்ந்தனர்; மிளிர்கின்றார்கள்.

12. அப் பெருமான், தம் பெயருக் கேற்பப் புலன் களை வென்றதால், சுகரே எனவும், நிறை மொழி மாந்த ராக

நிலவித் திருக் களர்ப் பெருமானுக்கு ஆலய முதலியன அமைத்தலாலும், துருவாசர் சந்நிதியின் பின் பக்கம் விதேக கைவல்லிய மெய்தினமையாலும், துருவாசரே எனவும், அத்வைத போதகாச்சாரிய ராக இருந்து, பல சீடர்களை மெய்ஞ் ஞானிக ளாகவும், சிவ விஷ்ணு கணேச கந்தர் முதலிய தெய்வங்க ளிடத்தில் பக்த சிகாமணிக ளாகவும் செய்தமையால், சண் மதத் தாபக ராகிய ஸ்ரீ சங்கர பகவத் பாதரே எனவும், குரு பக்த சிரோன்மணி யாக விளங்கிய தால், பத்ம பாதரே எனவும் ஆலயங்களையும், மடங்களை யும், அழகு பெற அமைத்தலால், தெய்வ கம்மியன், பேரா நிலைபெறத், துறவு வேடந் தாங்கி வந்தனனோ எனவும், சொல்லிப் புகழு மாறு மிளிர்ந்தனர்.

13. இம் முனிவர் பெருமான்பால் சீடர்க ளாக அமைந்த இரண்டாம் பாடம் ஸ்ரீ வேங்கடாசல சுவாமிகள், ஸ்ரீ வெள்ளி யங் கிரிச் சுவாமிகள், ஸ்ரீ அண்ணா மலை ஞான தேசிக சுவாமிகள், ஸ்ரீ சுப்பைய சுவாமிகள், ஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சாரிய சுவாமிகள், ஸ்ரீ வேத மொழி பெயர்ப்பு சிவா நந்த சுவாமிகள், ஸ்ரீ மகா தேவ ஞான தேசிக சுவாமிகள், ஸ்ரீ சிக்கல் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள், ஸ்ரீ மாரி முத்து சுவாமிகள், ஸ்ரீ நாராயண சுவாமிகள் முதலியவர்கள், நிஷ்டாபரரும், தத்துவ ஞானிகளும், தர்க்க வேதாந்த முத லிய சாத்திரங்களில் வல்லுநரும், கேட்டார்ப் பிணித்துக், கேளாரும் வேட்பப் போதிக்கு மாற்ற லுடையவரு மாக விளங்கி, ஐம் புலனைச் சுட் டழித்த சான்றோர்க ளாக இருந் தனர் இருக்கின்றன ரென்றால், இப் பெருமா னுடைய நிலையினை யெடுத் துரைக்க என் போல்வாருக்கு எவ் வாறு இயலும்.

14. வீரர்களை வெல்லும் அரசர் வீரமும், தேவர் வீரமும், எல்லாரையும் வெல்லும்படியான ஐம் புலங்களையும் வென்று, அத னடியாகச் சாதந நான்கினையும், முற்றப் பெற்றுத், தன்னை மறைக்கும் ஆவரணத்தை யடியோடு அழித்தும், அழிவித்தும், விளங்கிய மெய்ஞ் ஞாந வீர ராகிய நம் வீர சேகரப் பெருமானுடைய மெய் வீரத்திற் கிணை யாகுமா? இம் மெய்ஞ் ஞாந வீரரே வீரர்.

15. நாமும், அம் மெய்ஞ் ஞாந வீரர் போல, மெய் வீரர்க ளாவதற்கு, அப் பெருமான் திரு வடிகளை யென்றும் வழிபாடு செய்து, ஆரா வியற்கை யவா நீத்துப் பேரா வியற்கை பெறுவோ மாக.

வெண்பா.

ஆறுதலை விட்டுளத்தி லாறுதலை யாமெய்த,
நீறுதலை கொண்ட நிமலனாய்—வீறுகொண்டு,
கோயிலூர் மேவுங் குருவீர சேகரனை,
வாயிலுற வாழ்த்துகின்றேன் மன்.

---

தேவ கோட்டை, கி. கரு. ராம. சாமி நாதன் செட்டியார் எழுதியது.

## "பிறப் பறுத்த பே ரருளாளன்"

(துவாதச ஆதித்தர்)

---

1 அமிழ்தினு மினிய தமிழ் மணம் பரப்பும் மங்கலப் பாண்டி வள நாடதனில், பல வளம் பெற்றுப் பாங்குறத் திகழும் நாட்டுக் கோட்டை நகர தந வணிகர்கள் வாழ் தொண் ணூற் ருறு ஊர்களில், பண்டு சகல துறைகளிலும்

சிறந்த புண்ணிய சீலர்கள் வதிந்த புது வயலில் எங்கள், இலுப்பைக் குடிக் கோவில், சூடாமணி புர முடையார் மரபைச் சார்ந்த, உத்தம குணம் படைத்த அருணசலம் செட்டியாரும், உமையம்மையாரும் செய் நற்றவ வலி யால், உலகம் உய்யவும், சந்நியாச ஆச்ரமத்தின் பெருமை விளங்கவும், நகர தந வைசியர்களின் குலம் சிறக்கவும், தவப் பெருஞ் சீலர் ஸ்ரீ வீரசேகர ஞாந தேசிக பரமாசாரிய சுவாமிகள், கலி 4949 கீலக ஆண்டு ஆனித் திங்கள் ப னிரண்டாம் நாள் வெள்ளிக் கிழமை புநர் பூச நட்சத்திரம் கூடிய நன் ஞளில் திரு வவதாரம் செய்தருளினார்கள்.

2. இவ் வண்ணம் அவதரித்த நம் சுவாமிகள், குல வழக்கப்படி சகல கர்மங்களையும், செய்து முடித்துக் கல்வி யிலும் சிறந்து விளங்கினார்கள். கருவிலே திரு வுடைய சுவாமிகள் இளமையிலேயே சாக் கோட்டை உமை யம் பிகை சமேத ஸ்ரீ வீர சேகரப் பெருமானின் வழிபாட்டை யும் மேற்கொண்டிருந்தார்கள்.

3. பின்னர் நம் குல வழக்கின்படி, "திரை கட லோடி யும் திரவியம் தேடு" என்ற பொன் மொழிக் கேற்பவும், நம் சுவாமிகள் அயல் நாடு சென்று மிகு பொரு ளீட்டி வருங்காலை, பண்டை வினைப் பயனுல் அநித்யமான பொரு ளீட்டும் அவா நீங்கி, ஆன்மீகத் துறையில் ஈடுபட ஆர்வங் கொண்டு தமது நகரை வந் தடைந்தார்கள்.

4. அந் நகரில், முறைப்படி ஓதி யுணர்ந்த, அறிவுடைப் பெருமக்களை நாடி கல்வி கேள்விகளிலும், ஒழுக்கத்திலும், சிறப்புற் றேங்கிய இவர்கள் தம், பதி ஞருவது வயதில் பிரமச்சாரி யாக இல்லினின்றும் நீங்கி, நம் மரபின் பெருமை

விளங்க, ஸ்ரீலஸ்ரீ முத்து ராம லிங்க ஆண்டவர்களால் நிறுவப் பெற்றுச் சிறப்புடன் திகழும் கோவிலூர் மடத்தை அடைந்தார்கள்.

5. ஆங்கு அவ் வமயம் மடாதிபதிக ளாக விளங்கி தேவகோட்டையில், இலுப்பைக்குடிக் கோவிலில், எம் மரபில் அவதரித்து அருளானரா யிருந்த, ஸ்ரீலஸ்ரீ கருணாநிதி யவர்களைக் கண்டு தெரிசிக்க, அன்னார், நம் வீர சேகர ஞான தேசிகரின் குண நலன்களையும், பரிபக்குவ நிலையையும் உளங் கொண்டு தம் பெயருக் கேற்பக் கருணா நிதி யாகிக் கருணை பாலித்துச் சீட ராக ஏற்றருளினார்கள்.

6. கோவிலூரி லிருந்த தம்மை. நாடி வந்து இல்லறத் திற் கழைத்த சுற்றத்தார்க்கு, மறுத்து, மறு மொழி கூறிய தோடமையாது. கோவி லூர் மடாலயத்திற்குக் குரு மூர்த்த மாயுள்ள பொருள் வைத்த சேரி மடாலயத்தைச் சார்ந்து. அங்கு காவி யுடை ஏற்றுச் சில காலம் தங்கி, மீண்டும் கோவி லூர் மடாலயம் திரும்பி குரு மூர்த்திகளின் பாதக மலங்களைத் தொழுது. அவர் தம் திரு வருட் பெருக்கால் அரிய பல நூல்களைக் கற்றுத் தேர்ந்து. அங் குள்ள மாணாக் கர்கள் அனைவரினும் தலை சிறந்து விளங்கினார்கள்.

7. இவர்கள் க்ஷேத்திர யாத்திரையில் நாட்டங் கொண்டு குரு மூர்த்திகளின் ஆசி பெற்றுத். தல யாத்திரையை மேற் கொண்டு இராமேச்சுரம் முத லான பற் பல தலங்களைத் தெரிசித்து அங் கைப் பிச்சை யேற் றுண்டு, முடிவில் தில்லையை அடைந்து. மௌந சுவாமிகள் மடாலயத்தில் தங்கி, அங்கும் திருக் கரத் தன்னம் ஏற் றுண்டு வாழ்ந்து வந்தார்கள்.

8. அங்ஙன மிருக்கும் நாளில் கோவி லூர் மடாலயத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ இராம சாமி சுவாமிகள் நிரியாணம் ஆன தைக் கேள்வி யுற்ற ஸ்ரீலஸ்ரீ பொன் னம்பல சுவாமிகள், கோவிலூர் மடாலயத் தலைமை ஏற்க வேண்டு மென நம் வீரசேகரரை வற்புறுத்தவே, நம் வீரசேகரனார் அதனை மறுத்து விட்டார்கள். ஆயினும், ஸ்ரீலஸ்ரீ பொன் னம்பல சுவாமிகள், குமரப் பையா முதலியோரை விட்டு மீண்டும் வற்புறுத்தவே, வேறு வழி யின்றித் தலைமை ஸ்தானத்தை வகிக்க ஒப்புக்கொண்டார்கள். எனவே சுபானு ஆண்டு மார்கழித் திங்களில் அத் தலைமைப் பீடத்தை ஏற்று ஸ்ரீலஸ்ரீ பொன் னம்பல சுவாமிகளின் துணை கொண்டு, மடாலயக் காரியங்களை மிக்க பொறுப்புடன் நல்ல முறையில் கவனித்து வந்தார்கள். பின்னர் ஸ்ரீலஸ்ரீ பொன் னம்பல சுவாமிகளும் பூரண பொறுப்பையும் நம் சுவாமிகளிடமே விட்டு விட்டுச் சிதம்பரம் சென் றடைந்தார்கள்.

9. அம் மடாலயத்தில், குருமூர்த்திகட்குக் கருங்கல் திருப் பணிகள் செய்தும், கைலாயக் கொட்டகை, பிரம சபை, குரு பூஜைக் கட்டு, நெற் களஞ்சியம் முதலியன வாய செயற்கரும் பணிகள் பல செய்து முடித்தார்கள். ஸ்ரீ அண்ணாமலை ஞான தேசிகர் ஸ்ரீ இரண்டாம்பாடம் வேங்கடாசல சுவாமிகள் ஸ்ரீ சுப்பையா ஞான தேசிகர், ஸ்ரீ மெய்யப்ப தேசிகர், ஸ்ரீ நாராயண சுவாமிகள் ஸ்ரீ வெள்ளியங் கிரிச் சுவாமிகள் இந் நூல் ஆக்குவிக்கும் பரசமய கோளரி ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த பரமாசாரிய சுவாமிகள் முதலிய பல பெரியார்களுக்குக் குரு ஸ்தானம் தாங்கி உரிய முறையில் பாடம் சொல்லி வந்தன ரென்றால் நம் வீரசேகர ஞான தேசிகரவர்களின் பெருமையை அளவிட வேறு சான்று பகரவும் வேண்டுமோ!

10. அன்றியும், சிவாநுபவச் செல்வ ரான நம் சுவாமி கள் கோவிலூர்ச் சிவாலயத்தைத் தேவரும் கண்டு வியக்கும் வண்ணம் அரும் பெருஞ் சிற்பிகளைக் கொண்டு, பெரும் பொருள் செலவிட்டு, நித்திய உற்சவ மண்டபம், சபா மண்டபம், துவஜ ஸ்தம்ப மண்டபம், நீராழி மண்டபம், நந்தி மண்டபம், மஹா மண்டபம், அர்த்த மண்டபம், கெர்ப்பக் கிருஹம் முதலிய மண்டபங்களை யெல்லாம் முறைப்படி அமைத்தும், சிறந்த சைத்திரிகர்களைக் கொண்டு கண்கவர் வண்ண ஓவியங்களை உயி ரோவிய மென உரு வாக்கியும் திகழச் செய்தார்கள். அறச் சாலை, கல்விச் சாலை, ஆவலர் சாலை முதலிய சாலைகள் பல நிறுவித் தர்மம் தழைத் தோங்கச் செய்தார்கள். எல்லாம் வல்ல இறைவன், எம் பெருமான் அம்மை யப்பர்க் காகும் அணி வகைகள், பொன்னாலும், மணியாலு மான அங்கிகள், நவ ரத்ந கிரீடம், வெள்ளி வாகநங்கள், எடுபிடிச் சாமான்கள், மற்றும், வெள்ளியா லான சோடசோபசார தீபவகைகள் ஆகிய எல்லாம் மிக்க பொருட் செலவில் செய்து முடித்தும், நந்த வநம் கோ சாலை நிறுவியும், உயரிய திருப் பணிகள் செய்ததோ டமையாது, கலி 5009 கீலக ஆண்டு சித்திரைத் திங்கள் பதி ஞோம் நாளில் மிக்க பெருஞ் சிறப்பில் கும்பா பிஷேகமும் செய்து சிறப்பித்தார்கள்.

11, பின்னர், சோழ நாட்டி லுள்ள இராசு முதலியா ரின் வேண்டு கோளுக் கிணங்கி, திருக் களர் க்ஷேத்திரத்தின் திருப் பணியைச் செய்யத் தொடங்கிப், பல அன்பர்களிடம் சென்று பெரும் பொரு ளீட்டி, அக் கோவிலுக்கு வேண்டிய வாகநங்கள், அங்கிகள் முதலிய சகல பொருள்களையும் உயர்ந்த முறையில் செய்து முடித்துப் பல மண்டபங்களை யும் டாங்குறக் கட்டி முடித்துக், கண்டோர் உள்ளம் களிக்

9-வது பாராட்டுரை.

தம் பான்மையில் வண்ணம் தீட்டி, கலி 5013 விரோதிகிருது ஆண்டு சித்திரைத் திங்கள் 22ம் நாள் உலகினர் வியக்கக் கும்பாபிஷேகமும், பின்னர் மண்டலாபிஷேகமும் செய்து முடித்தார்கள். மண்டலாபிஷேகம் நடைபெற்ற அத் தருணத்திலேயே பிரம்மோற்சவத்தை நடத்திவிடும்படி கூறவே அதற்கான ஏற்பாடுகள் எல்லாம் செவ்வனே நிறைவேறி, விழாத் தொடங்கி எட்டு தினங்கள் முடிவு பெற்றன. ஒன்பதாம் நாள் ரத உத்சவ விழாவில், இரதங்கள் வீதி யுலா வருங்கால், அம்மை யப்பராம் இறைவனின் தேர் நிலைக்கு வராமல், கீழ வீதியின் தென் மூலையில் நின்று விட்டது. அது கண்ட, நம் வீரசேகர ஞான தேசிக ரவர்கள், தேர் அன்றே நிலைக்கு வராமை கண்டு, மனம் மிக வருந்தி அம்மை யப்பரை வணங்கித் தம் மடத்தைச் சென் றடைந் தார்கள்.

12. மறு நாள் யாவருக்கும் தம் முடிவை வெளியிட்டுத் தேர் வடம் பிடிக்கச் செய்து, தெற்கு வீதியில் நடராஜரின் சந்நிதியின் முன், தேர் வந்ததும், அம்மை யப்பரின் தேரின் முன் நின்று, எல்லை யிலா மகிழ்ச்சி கொண்டு, பன் முறை "ஹர ஹர மஹா தேவா" என்று சப்தித்துக் கொண்டு, ஆநந்தக் கூத்தாடி, சிரசின்மேல் கரங் குவித்து, இறைவனை அஞ்சலி செய்த வண்ணமே, கலி 5013 விரோதிகிருது ஆண்டு வைகாசித் திங்கள் இரு பத்தேழாம் நாள் விசாக நக்ஷத்திரத் தன்று இறைவனுடன் இரண்டறக் கலந்து சிவமே யாயினார்கள். இவ் விதம் ஒழுக்கத்தாலும், யோக நிட்டையாலும் உயர்ந்து பெற லரும் பேறு பெற்ற எம் மரபு விளங்க வந்த உத்தம தவ ஞானச் செல்வ ராகிய அன்னார் காலத்தில், இன்னும் பற் பல அற்புதங்களும், அநேக அருட் குறிப்புகளும், நிகழ்ந்தன வென்றும், கோவிலூரில் ஆடிப்

பூர உற்சவம் ஆரம்பித்து வெகு சிறப்பாக நடத்தி வந்தா ளென்றும், அவ் விதம் நடந்த உற்சவத்தின் பெருமைக யும், வந்தவர்கட்கு அன்னம் ... யளித்த அன்பினை மடத்தின் நிர்வாகத் திறனையும், மாணவர்களின் ஒழு மேம்பாட்டையும், இன்னும் நம் நகர வட்டகையில் அரிய பெரிய திருப் பணிகளைச் செய்ய வழி வகை வகுத் கொடுத்துச் செய்யும்படி ஊக்குவித்த பெருமையும், சி கேரி சாரதாம்பாள் ஆலயக் குருங்கல் பணி செய்த மே பாட்டையும், ஓ ரளவு நேரில் பார்த்தவர்கள் சொல் கேட்கும் போதே யாவர்க்கும் மயிர் கூச்சிடும் என் அன்னார், பெருமையை யாரே புகல இயலும்.

வீர சேகர ஞான தேசிகர் விரை கழல் வாழ்த்தி
வணங்குவோம்.

## ஸ்ரீ லஸ்ரீ திருக் களர் ஆண்டவர் பாராட்டு உரை.

கோட்டை யூர் அழ. அண்ணாமலை செட்டியார் எழுதிய

1. "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்பது பொய் மொழிப் புலவர் வாக்கு. அஃதுடன் வீரமும் சேகர மா மேலும் சிறப்பு

2. புதுவயலில் தோன்றி தேவி ஊரை வளர்த்து தி களரில் மறைந்தவர்கள் தாம், நமது கோவிலூர் பரம் யின் உயர்வுக்கே ஊன்று கோலான ஒப்பற்ற மா திருப் பெரும் திரு வினர், திருக் களர் ஆண்டவர் ஆவார்